ஸர்வ வேதாந்த ஸித்தாந்த ஸார
ஸங்க்ரஹம் - 4

" ஸ்ரீ சங்கர க்ருபா அனுபந்தம் "

21/5

அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு

॥ श्रीः ॥

# श्रीजगद्गुरुग्रन्थमाला–२५







# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா

25

அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி வெளியீடு



॥ श्रीः ॥



"एषा शंकरभारती विजयते निर्वाणसौख्यप्रदा"

# श्रीजगद्गुरुग्रन्थमाला–२५

## सर्ववेदान्तसिद्धान्तसारसंग्रहः

(चतुर्थः अंशः)





# ஸ்ரீ ஜகத்குரு க்ரந்தமாலா–25

## ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்க்ரஹம்

(நான்காம் பகுதி)

ஸ்ரீ வாணீ விலாஸ் பிரஸ்,
ஸ்ரீரங்கம்.

1971



॥ श्रीगुरुभ्यो नमः ॥

## ॥ समर्पणम् ॥

श्रीमच्छंकरदेशिकस्य महिता मूर्तिर्द्वयी या स्थिता
  तत्रैका हि तिरोबभूव विजने केदारनाथस्थले ।
अन्या वर्णमयी तु भाष्यनिचयस्तोत्रप्रबन्धात्मना
  सर्वत्रैव समुज्ज्वला विजयते ताभ्यां तनुभ्यां नमः ॥ १ ॥

यस्तत्रास्ति लघुप्रबन्धनिचयः स्तोत्राणि भूयांसि वा
  तेषां द्राविडभाषयाऽनुवदनं विद्वद्वरैः कारितम् ।
श्रीमच्छंकरसेविनी सुसमितिः सम्यक्प्रकाश्याधुना
  विद्यातीर्थपदे समर्पयति तत् लोकोपकारक्षमम् ॥ २ ॥

शंकरगुरुसंस्थापितसर्वजगद्वन्द्यशारदापीठम् ।
शंकरसेवासमितिः प्रकरणमालार्पणादलंकुरुते ॥ ३ ॥

शंकरगुरुवररचितप्रकरणमालां शुभानुवादयुताम् ।
शंकरपरंपरागतविद्यातीर्थे समार्पिपत्समितिः ॥ ४ ॥

शंकरसेवारसिकाः शांकरसिद्धान्तसारसर्वस्वम् ।
शंकरसेवासमितिप्रकटनमालां सदाऽपि सेवन्ताम् ॥ ५ ॥

# பதிப்புரை

ஸ்ரீ ஜகத்குரு கிரந்தமாலாவில் இது 25-வது மலர். இதில் ஸர்வவேதாந்த ஸித்தாந்த ஸாரஸங்கிரஹத்தில் நான்காவது பகுதி (632-வது சுலோகம் முதல் 865-வது சுலோகம் முடிய) வழக்கம்போல் தேவநாகரியிலும் தமிழிலும் மூலத்துடனும் தமிழில் பதவுரை கருத்துரைகளுடனும் வெளிவந்துள்ளது.

இதில், ஆத்ம ஸ்வரூபம், ஆனந்தஸ்வரூப விசாரம், ஆத்மா ஸச்சிதானந்த ரூபம், ஆத்மா பேதரஹிதன், அத்யாரோபம், அபவாதம், தத் த்வம்பத வாச்யார்த்த லக்ஷ்யார்த்த நிருபணம், லக்ஷணு விசாரம், ஜீவப்ரஹ்மைக்யப்ரதிபாதனம், அகண்டாகாரவ்ருத்தி, அதிகாரிபேதம், ஸமாதி முதலான பல விஷயங்கள் நன்கு விரிவாக விளக்கப்பட்டிருக்கின்றன.

வழக்கம்போல் இதற்குத் தமிழில் கருத்துரை எழுதித்தந்த ஸ்ரீ ஞானானந்தபாரதீ ஸ்வாமிகளுக்கு நம் ஸமிதியின் சார்பில் வந்தனங்களைத் தெரிவித்துக்கொள்கிறேன். இதற்கு பதவுரை எழுதிக்கொடுத்து அச்சுக்குத் தயார்செய்து திருத்தி உதவிய ஸ்ரீ K. S. வெங்கடராம சாஸ்திரிகள் (ஸ்ரீ சங்கர கிருபா உதவி ஆசிரியர்) அவர்களுக்கும், இதை அழகியமுறையில் அச்சிட்டுத் தந்த ஸ்ரீரங்கம் ஸ்ரீ வாணீ விலாஸம் அச்சகத்தாருக்கும் எங்கள் நன்றியைத் தெரிவித்துக்கொள்கிறோம்.

K. V. சுப்பரத்னம் அய்யர்,
பொதுக்காரியதரிசி,
அகிலபாரத சங்கர ஸேவா ஸமிதி.


விஷயாநுக்ரமணிகை

(அ) இவ்விதம் குருவானவர் ஆத்மா ஆனந்தஸ்வரூபம் என்று நிர்வசனம் செய்ததிலிருந்து, ஆனந்தம் வேறு, ஆனந்தத்தை அனுபவிக்கிறவன் வேறு, என்றிருந்தால்தானே ஆனந்தத்தை அனுபவிக்கமுடியும். கல்கண்டு வேறு அதை ருசிப்பவன் வேறு, என்றிருந்தால் தானே கல்கண்டை ருசிக்க முடியும் என்று சிஷ்யனுக்குத் தோன்றி, ஆத்மாவின் ஸ்வரூபமே ஆனந்தமாயிருந்தால் ஆனந்தத்தின் அனுபவம் ஆத்மாவிற்கு எப்படி வரும். கல்கண்டு தித்திப்பாயிருக்கிறதென்றால் அந்த ருசியை கல்கண்டே எப்படி அனுபவிக்க முடியும் என்று குருவினிடம் தன் ஸந்தேகத்தைத் தெரிவித்து தெளிவுபடுத்த வேண்டுமென்று பிரார்த்திக்கிறான்:—

शिष्यः —

अपरः क्रियते प्रश्नो मयाऽयं क्षम्यतां प्रभो ।
अज्ञवाक् अपराधाय कल्पते न महात्मनाम् ॥ ६३२ ॥

சிஷ்ய:—

அபர: க்ரியதே ப்ரச்னோ மயாऽயம் க்ஷம்யதாம் ப்ரபோ ।
அக்ஞவாகபராதாய கல்பதே ந மஹாத்மநாம் ॥

प्रभो-ப்ரபுவே, अपरः-வேறொரு अयं-இந்த, प्रश्नः-கேள்வி, मया-என்னால், क्रियते-செய்யப்படுகிறது. क्षम्यतां-பொறுத்துக் கொள்ளவேணும், अज्ञवाक्-அறியாதவனின் வார்த்தை, महात्मनां-பெரியோர்கள் விஷயமான, अपराधाय-அபராதத்தின் பொருட்டு, न कल्पते-ஸமர்த்தமாகாது.

வேறு ஒரு இந்தக் கேள்வி என்னால் கேட்கப்படுகிறது. ஹே பிரபோ, மன்னிக்கவேண்டும். விஷயம் தெரியாதவனுடைய வார்த்தை பெரியோர்களின் அபராதத்தின் பொருட்டு ஏற்படாது. (632)

आत्माऽन्यः सुखं अन्यच्च नात्मनः सुखरूपता ।
आत्मनः सुखं आशास्यं यतते सकलो जनः ॥ ६३३ ॥

आत्मनः सुखरूपत्वे प्रयत्नः किमु देहिनाम् ।
एष मे संशयः स्वामिन् कृपयैव निरस्यताम् ॥ ६३४ ॥

ஆத்மாऽந்ய: ஸுகமந்யச்ச நாத்மந: ஸுகரூபதா ।
ஆத்மந: ஸுகமாசாஸ்யம் யததே ஸகலோ ஜந: ॥

ஆத்மந: ஸுகரூபத்வே ப்ரயத்ந: கிமு தேஹிநாம் ।
ஏஷ மே ஸம்சய: ஸ்வாமின் க்ருபயைவ நிரஸ்யதாம் ॥

आत्मा-ஆத்மா, अन्यः-வேறு, सुखं च-ஸுகமும், अन्यत्-வேறு, आत्मनः-ஆத்மாவிற்கு, सुखरूपता-ஸுகமாக இருக்கும் தன்மை, न-கிடையாது, आत्मनः-ஆத்மாவிற்கு, सुखं-ஸுகம் आशास्यं-விரும்பத்தக்கது. (அதை அடைவதற்காகவே) सकलो जनः-எல்லா மனிதனும், यतते-முயற்சிக்கிறான், आत्मनः-ஆத்மாவுக்கு, सुखरूपत्वे-ஸுகஸ்வரூபத்தன்மை இருக்குமாகில், देहिनां-மனிதர்களுக்கு, प्रयत्नः किमु-முயற்சி ஏன்? स्वामिन्-ஸ்வாமியே! मे-என்னுடைய, एषः-இந்த, संशयः-ஸந்தேஹம் कृपयैव-தயவினாலேயே, निरस्यताम्-போக்கப்பட வேணும்.

ஆத்மா வேறு, ஸுகம் வேறு ஆத்மா ஸுகஸ்வரூபமாயிருக்க முடியாது. ஆத்மாவிற்கு ஸுகம் வேண்டப்படும் பதார்த்தம். (அதற்காகவே) எல்லா ஜனங்களும் பிரயத்தினம் செய்கிறார்கள். ஆத்மாவே ஸுக ஸ்வரூபமாயிருந்துவிட்டால் ஜீவர்களின் பிரயத்தினம் எதற்காக? ஹே ஸ்வாமின், என்னுடைய இந்த ஸம்சயம் தங்கள் கிருபையினாலேயே போக்கடிக்கப்படட்டும். (633-634)

श्रीगुरुः —

आनन्दरूपं आत्मानं अज्ञात्वैव पृथग्जनः ।
बहिः सुखाय यतते न तु कश्चित् विदन् बुधः ॥ ६३५ ॥

ஸ்ரீகுரு:—

ஆநந்தரூபமாத்மாநமக்ஞாத்வைவ ப்ருதக்ஜந: ।
பஹி: ஸுகாய யததே நது கஸ்சித் விதன் புத: ॥

आनन्दरूपं-ஆனந்த ஸ்வரூபனான, आत्मानं-ஆத்மாவை, अज्ञात्वैव-தெரிந்துகொள்ளாமலேயே, पृथग्जनः-பாமர மனிதன் बहिः-வெளியே, सुखाय-ஸுகத்திற்காக, यतते-முயற்சிக்

கிறான், विद्वान्-தெரிந்துகொண்ட, बुधः कश्चित् तु-புத்திசாலி ஒருவன் கூட, न-முயற்சிக்கமாட்டான்.

ஆத்மாவை ஆனந்த ஸ்வரூபனுக அறியாததினுலேயே ஸாமான்ய ஜனங்கள் வெளியில் ஸுகத்தின் பொருட்டு பிரயத்தினம் செய்கிறுர்கள். விஷயம் தெரிந்த அறிவாளியாகும் பிரயத்தினம் செய்வதில்லை. (635)

अज्ञात्वैव हि निक्षेपं भिक्षामटति दुर्मतिः ।
स्ववेश्मनि निधिं ज्ञात्वा कोनु भिक्षामटेत् सुधीः ॥ ६३६ ॥

*அக்ஞாத்வைவ ஹி நிக்ஷேபம் பிக்ஷாமடதி துர்மதி: ।*
*ஸ்வவேச்மனி நிதிம் ஞாத்வா கோநு பிக்ஷாமடேத் ஸுதீ: ॥*

निक्षेपं-புதையலை, अज्ञात्वैव-அறியாமலே தான், दुर्मतिः-புத்திகெட்டவன், भिक्षां अटति-பிக்ஷாடனம் செய்கிறுன், स्ववेश्मनि-தன் வீட்டில், निधिं-புதையலை, ज्ञात्वा-அறிந்து, सुधीः-நல்ல புத்தியுள்ள, को नु-எவன் தான், भिक्षां अटेत्-பிக்ஷாடனம் செய்வான் ?

புதையலிருப்பதைத் தெரிந்து கொள்ளாமலிருப்பதினுல் தான் புத்திகெட்டு பிச்சையெடுக்க அலைகிறுன். தன் வீட்டில் நிதி இருக்கிறதென்று தெரிந்து, நல்ல புத்தியுள்ளவன் எவனுவது பிச்சையெடுக்க அலைவானு ? (636)

स्थूलं च सूक्ष्मं च वपुः स्वभावतो
दुःखात्मकं स्वात्मतया गृहीत्वा ।
विस्मृत्य च स्वं सुखरूपं आत्मनः
दुःखप्रदेभ्यः सुखं अज्ञ इच्छति ॥ ६३७ ॥

ஸ்தூலம் ச ஸூக்ஷ்மம் ச வபு: ஸ்வபாவதோ
துக்காத்மகம் ஸ்வாத்மதயா க்ருஹீத்வா ।
விஸ்ம்ருத்ய ச ஸ்வம் ஸுகரூபமாத்மந:
துக்கப்ரதேப்ய: ஸுகமஜ்ஞ இச்சதி ॥

स्वभावतः-இயற்கையாகவே, दुःखात्मकं-துக்க ஸ்வரூபமான, स्थूलं च सूक्ष्मं च वपुः-ஸ்தூல சரீரத்தையும் ஸூக்ஷ்ம சரீரத்தையும், स्वात्मतया-தனது ஆத்மாவாக, गृहीत्वा-எண்ணிக்கொண்டும், सुखरूपं-ஸுகரூபமான, आत्मनः-ஆத்மாவின், स्वं-ஸ்வரூபத்தை, विस्मृत्य च-மறந்தும், अज्ञः-அறிவில்லாதவன், दुःखप्रदेभ्यः-துக்கத்தைக் கொடுக்கும் பொருள்களிலிருந்து, सुखं-ஸுகத்தை, इच्छति-விரும்புகிறான்

இயற்கையாகவே துக்க ஸ்வரூபமாயிருக்கும் ஸ்தூல சரீரத்தையும் ஸூக்ஷ்ம சரீரத்தையும் தன் ஆத்மாவாக நினைத்துக்கொண்டு, ஸுகரூபமான ஆத்மாவின் ஸ்வரூபத்தை மறந்துவிட்டு துக்கத்தைக்கொடுக்கக்கூடிய பதார்த்தங்களிலிருந்து ஸுகத்தையடைய ஞானமில்லாதவன் விரும்புகிறான்.

न हि दुःखप्रदं वस्तु सुखं दातुं समर्हति ।
किं विषं पिबतो जन्तोः अमृतत्वं प्रयच्छति ॥ ६३८ ॥

நஹி துக்கப்ரதம் வஸ்து ஸுகம் தாதும் ஸமர்ஹதி ।
கிம் விஷம் பிபதோ ஜந்தோரம்ருதத்வம் ப்ரயச்சதி ॥

दुःखप्रदं-துக்கத்தைக் கொடுக்கிற, वस्तु-பொருள், सुखं-ஸுகத்தை, दातुं-கொடுப்பதற்கு, नहि समर्हति-தகுதியுள்ளதாகாதல்லவா! विषं-விஷமானது, पिबतः-குடிக்கிற, जन्तोः-பிராணிக்கு, अमृतत्वं-சாகாத்தன்மையை, किं प्रयच्छति-கொடுக்கிறதா? (இல்லை.)

துக்கத்தைக்கொடுக்கும் வஸ்து ஸுகத்தைக் கொடுக்க யோக்கியதையற்றதல்லவா? விஷத்தை சாப்பிடும் பிராணிக்கு அந்த விஷம் சாகாத்தன்மையைக்கொடுக்குமா? (638)

आत्मान्यः सुखं अन्यच्चेत्येवं निश्चित्य पामरः ।
बहिः सुखाय यतते सत्यमेव न संशयः ॥ ६३९ ॥

ஆத்மாந்ய: ஸுகமந்யச்சேத்யேவம் நிச்சித்ய பாமர: ।
பஹி: ஸுகாய யததே ஸத்யமேவ ந ஸம்சய: ॥

आत्मा अन्यः-ஆத்மா வேறு, सुखं च-ஸுகமும், अन्यत्-வேறு, इत्येवं-என்று இவ்வாறு, निश्चित्य-தீர்மானித்து, पामरः-பாமரன், सुखाय-ஸுகத்தின் பொருட்டு, बहिः-வெளியிலே, यतते-முயற்சிக்கிறான், सत्यमेव-இது உண்மைதான், न संशयः-ஸந்தேஹமில்லை.

ஆத்மா வேறு, ஸுகம் வேறு, என்றிவ்விதம் தீர்மானித்துக் கொண்டு பாமர ஜனம் ஸுகத்திற்காக வெளியில் பிரயத்தினம் செய்கிறது (என்று நீ சொன்னது) வாஸ்தவம்தான், ஸந்தேகமில்லை. (639)

(அ) ஸுகஸாதனமென்று வெளியில் தேடியலைந்து விஷயங்களை அடைந்து அனுபவிக்கப்படும் ஸுகமும் வாஸ்தவத்தில் வெளிப்பதார்த்தத்தைச் சேர்ந்ததில்லை. அந்த விஷயஸுகம் ஆத்ம ஆனந்தத்தின் பிரதிபிம்பம்தான் என்பதை எடுத்துக்காட்டுகிறார்:—

इष्टस्य वस्तुनो ध्यानदर्शनाद्युपभुक्तिषु ।
प्रतीयते य आनन्दः सर्वेषामिह देहिनाम् ॥ ६४० ॥

स वस्तुधर्मो नो यस्मात् मनस्येवोपलभ्यते ।
वस्तुधर्मस्य मनसि कथं स्यादुपलम्भनम् ॥ ६४१ ॥

இஷ்டஸ்ய வஸ்துநோ த்யாந தர்சநாத்யுபபுக்திஷு ।
ப்ரதீயதே ய ஆநந்த: ஸர்வேஷாமிஹ தேஹிநாம் ॥
ஸ வஸ்துதர்மோ நோ யஸ்மான் மநஸ்யேவோப
லப்யதே ।
வஸ்துதர்மஸ்ய மனஸி கதம் ஸ்யாதுபலம்பநம் ॥

इह-இங்கு, सर्वेषां देहिनां-எல்லா பிராணிகளுக்கும், इष्टस्य-ஆசைப்பட்ட, वस्तुनः-பொருளின், ध्यानदर्शनाद्युपभुक्तिषु-த்யானம், பார்த்தல் முதலிய போகங்களில், यः-எந்த, आनन्दः-ஆநந்தம், प्रतीयते-தோன்றுகிறதோ, सः-அது, नो वस्तुधर्मः-(அந்த) பொருளின் தர்மமல்ல, यस्मात्-ஏனெனில், मनस्येव-மனதில்தானே, उपलभ्यते-காணப்படுகிறது. वस्तु-

**धर्मस्य**-வஸ்துவின் ஸ்வபாவத்திற்கு, **मनसि**-மனதில், **उपलम्भनं**-தோன்றுதல், **कथं स्यात्**-எப்படி ஏற்படும்?

ஆசைப்படுகிற வஸ்து ஸம்பந்தமான தியானம், தர்சனம் முதலிய போகங்களில் எல்லா பிராணிகளுக்கும் இங்கே தெரிகிறதே, அந்த ஆனந்தம் அந்த வஸ்துவின் தர்மமில்லை, ஏனென்றால் அந்த ஆனந்தத்தின் உணர்ச்சி மனஸில் தான் காணப்படுகிறது. வஸ்துவின் தர்மத்திற்கு மனஸில் உணர்ச்சி எப்படி ஏற்படும்? (640-641)

अन्यत्र त्वन्यधर्माणां उपलम्भो न दृश्यते ।
तस्मात् न वस्तुधर्मोऽयं आनन्दस्तु कदाचन ॥ ६४२ ॥

அந்யத்ர த்வந்யதர்மாணாமுபலம்போ ந த்ருச்யதே ।
தஸ்மாத் ந வஸ்துதர்மோऽயமாநந்தஸ்து கதாசந ॥

**अन्यधर्माणां**-வேறொன்றின் ஸ்வபாவங்களுக்கு, **अन्यत्र**-வேறொன்றில், **उपलम्भः**-தோன்றுவது, **न दृश्यते**-காணப்படுகிறதில்லை. **तस्मात्**-ஆகையால், **अयं आनन्दः**-இந்த ஆனந்தம் **कदाचन**-ஒருக்காலும், **न वस्तुधर्मः**-வஸ்துக்களின் ஸ்வபாவமாகாது.

ஒரு வஸ்துவின் தர்மங்களுக்கு வேறொரு வஸ்துவில் தோற்றம் காணப்படுகிறதில்லை. ஆகையால் இந்த ஆனந்தம் ஒருக்காலும் வஸ்துவின் தர்மமாகாது. (642)

नाप्येष धर्मो मनसोऽसत्यर्थे तददर्शनात् ।
असति व्यञ्जके व्यङ्ग्यं नोदेतीति न मन्यताम् ॥ ६४३ ॥

सत्यर्थेऽपि च नोदेति ह्यानन्दस्तूक्तलक्षणः ।
सत्यपि व्यञ्जके व्यङ्ग्यानुदयो नैव संमतः ॥ ६४४ ॥

நாப்யேஷ தர்மோ மநஸோऽஸத்யர்த்தே தததர்சநாத் ।
அஸதி வ்யஞ்ஜகே வ்யங்க்யம் நோதேதீதி ந மந்யதாம் ॥

ஸத்யர்த்தேபி ச நோதேதி ஹ்யாநந்தஸ்தூக்தலக்ஷண: ।
ஸத்யபி வ்யஞ்ஜகே வ்யங்க்யாநுதயோ நைவ ஸம்மத: ॥

अर्थे असति-பொருள் இல்லாதபொழுது, तददर्शनात्-அது காணப்படாததால், एषः-இது, नापि मनसो धर्मः-மனதின் தர்மமும் இல்லை. व्यञ्जके असति-வெளிப்படுத்துகிற வஸ்து இல்லாத காரணத்தால, व्यंग्यं-வெளிப்படுத்தப்படவேண்டிய பொருள், नोदेति-உண்டாகவில்லை, इति-என்று, न मन्यतां-எண்ணவேண்டாம். अर्थे सत्यपि च-பொருள் இருந்தும்கூட उक्तलक्षण:-முன் சொல்லப்பட்ட ஸ்வபாவமுள்ள, आनन्दस्तु-ஆனந்தமோ வெனில், न उदेति-உண்டாவதில்லை, व्यञ्जके सत्यपि-வெளிப்படுத்தும் பொருள் இருந்தும் கூட, व्यंग्यानुदयः-வெளிப்படுத்தப்படும் பொருள் உண்டாகாமலிருப்பது, नैव संमतः-(ஒருவராலும்) ஒப்புக்கொள்ளப்பட்டதல்ல.

வஸ்து இல்லாதபோது ஆனந்தம் தெரியாததினால், இது மனஸின் தர்மமும் ஆகாது, வெளிப்படுத்திக் காட்டும் பொருள் இல்லாததினால் காட்டப்பட வேண்டிய பதார்த்தம் தெரியவில்லையென்று நினைத்துவிடக்கூடாது. விஷயம் இருக்கிற போதுகூட முன் சொன்ன லக்ஷணத்துடன் கூடின ஆனந்தம் ஏற்படுவதில்லை. காட்டுவது இருந்தும்கூட காட்டப்படுவது தெரியவில்லையென்று ஒப்புக்கொள்ளவே முடியாது.

[ஸுக ஸாதனமாகக் கருதப்படும் விஷயத்திற்கு உதாஹரணமாக ஒரு பழத்தை எடுத்துக்கொண்டால், அது பழுத்திருக்கிறது, தித்திப்பாயிருக்கிறது, என்பதுபோலவுள்ள தர்மங்கள் அந்த பழத்தைச் சேர்ந்தவை. அதைப் பார்ப்பதினால் ஏற்படும் பிரீதியோ, அதை தன்னுடையதாக ஆக்கிக்கொள்வதில் ஏற்படும் மோதமோ அதை புஜிப்பதினால் ஏற்படும் பிரமோதமோ, இவையெல்லாம் ஆனந்தத்தின் அம்சங்களாக மனஸிலேயே தோன்றுவதால் இவை அப்பழத்தைச் சேர்ந்த தர்மங்களல்ல. இவை மனஸின் தர்மங்களாவென்று பார்த்தால், அப்படியுமில்லை, ஏனென்றால் பழமில்லாமல் மனஸ் மாத்திரம் இருக்கும்போது இந்த அனுபவம் ஏற்படுவதில்லை. ஆனந்தம் மனஸின் தர்மம்தான், ஆனால் வெளிக்காட்டுவதற்குப் பழம் இல்லாததால் வெளியில் தெரியவில்லையென்று சொல்லிவிடலாமா என்று பார்த்தால், பழம் இருந்தாலும் மனஸில்

ஆனந்தம் ஏற்படாமலிருப்பதையும் பார்த்திருக்கிறோம். மனஸிலுள்ள ஆனந்த தர்மத்தை வெளிப்படுத்துவதற்கு வேண்டிய பழம் இருந்தும் ஆனந்தமேற்படவில்லையென்பது யுக்திக்குப் பொருந்தாது.] (643-644)

(அ) மனஸில்தான் ஆனந்தம், அதை வெளிப்படுத்தக் கூடிய பழம் இருந்தும் வெளிப்படாமலிருப்பது துரதிருஷ்டம் (பாபம்) முதலான பிரதிபந்தங்களால் இருக்கலாம். எப்படி அக்னிக்கு எரிக்கும் சக்தி இருந்தும், எரியவேண்டிய பதார்த்தம் கூட விருந்தும், பச்சிலை, மந்திரம் முதலானவை களால் அந்த சக்தி வெளிப்படாமல் இருந்து விடுகிறதோ, அப்படியிருக்கலாம், என்று சொல்வதற்கும் வழியில்லையென்று அடுத்த சுலோகத்தில் சொல்கிறார் :—

दुरदृष्टादिकं नात्र प्रतिबन्धः प्रकल्प्यताम् ।
प्रियस्य वस्तुनो लाभे दुरदृष्टं न सिध्यति ॥ ६४५ ॥

*துரத்ருஷ்டாதிகம் நாத்ர ப்ரதிபந்த: ப்ரகல்ப்யதாம் ।*
*ப்ரியஸ்ய வஸ்துனோ லாபே துரத்ருஷ்டம் ந ஸித்த்யதி ॥*

अत्र-இங்கு, दुरदृष्टादिकं-துரதிருஷ்டம் முதலியவை, प्रतिबन्धः-பிரதிபந்தமாக (தடை செய்பவையாக,) न प्रकल्प्यतां-கல்பிக்கக்கூடாது). प्रियस्य वस्तुनः लाभे-பிரியமான வஸ்து கிடைத்திருக்கும்பொழுது, दुरदृष्टं-துரதிருஷ்டம், न सिध्यति-ஸித்திக்காது.

இவ்விஷயத்தில் துரதிருஷ்டம் முதலியதை பிரதிபந்தம் (தடை) என்று கல்பிக்கக்கூடாது. பிரியமான வஸ்து கிடைத் திருப்பதினாலேயே துரதிருஷ்டம் இருக்காது. அதாவது, துர திருஷ்டம் இருந்ததேயானால் பிரியமான வஸ்து கிடைத்தே யிராது. (645)

तस्मात् न मानसो धर्मो निर्गुणत्वात् न चात्मनः ।

*தஸ்மாத் ந மானஸோ தர்மோ நிர்குணத்வாத் ந சாத்மன: ।*

तस्मात्-ஆகையால், न मानसो धर्मः-(ஸுகம்) மனதைச் சேர்ந்ததான தர்மமல்ல. निर्गुणत्वात्-குணமில்லாத தன்மை யால், आत्मनो न च-ஆத்மாவினுடையதுமல்ல.

ஆகையால் விஷயத்திலிருந்து கிடைக்கும் ஸுகம் மனஸின் தர்மம் இல்லை. ஆத்மா எவ்வித குணமுமற்றதால் இது ஆத்மாவின் தர்மமுமில்லை.

(அ) இவ்விதம் விஷய ஸுகம் விஷயத்தைச் சேர்ந்ததில்லை, மனஸைச்சேர்ந்ததும் இல்லை, ஆத்மாவைச் சேர்ந்ததும் இல்லை, என்று சொல்லிவிட்டால், அது அனுபவிக்கப்படுகிறமட்டில் என்ன காரணத்தினுல் எந்தப் பிரகாரமாகத் தோன்றுகிறதென்று சொல்லவேண்டாமா என்ற கேள்வி ஏற்படுவது நியாயமானதினுல், அதற்கு பதில் மேலால் சொல்கிருர் :—

किं तु पुण्यस्य सांनिध्यात् इष्टस्यापि च वस्तुनः ॥ ६४६ ॥

सत्त्वप्रधाने चित्तेऽस्मिंस्त्वात्मैव प्रतिबिम्बति ।
आनन्दलक्षणः स्वच्छे पयसीव सुधाकरः ॥ ६४७ ॥

*கிந்து புண்யஸ்ய ஸாந்நித்யாதிஷ்டஸ்யாபி ச வஸ்துந: ॥*

*ஸத்வப்ரதாநே சித்தேஸ்மிம்ஸ்த்வாத்மைவ ப்ரதிபிம்பதி ।*
*ஆநந்தலக்ஷண: ஸ்வச்சே பயஸீவ ஸுதாகர: ॥*

किंतु–ஆனுல், पुण्यस्य–புண்யத்தினுடையவும், इष्टस्य-वस्तुनश्चापि – விரும்பிய பொருளினுடையவும், सांनिध्यात्–ஸாந்நித்யத்தால் (அருகில் இருப்பதால்) सत्त्वप्रधाने–ஸத்வ குணத்தை ப்ரதானமாகக்கொண்ட, अस्मिन् चित्ते–இந்த மனதில், आनन्दलक्षणः–ஆனந்த ஸ்வரூபமான, आत्मैव तु–ஆத்மாவேதான், स्वच्छे–தெளிவான, पयसि–தண்ணீரில, सुधाकरः इव–சந்திரன்போல, प्रतिबिम्बति–ப்ரதிபிம்பிக்கிறது.

ஆனுல், புண்யம் (பலன் கொடுக்க) ஸமீபத்தில் வந்திருப்பதினுலும், விரும்பிய வஸ்துவும் கிடைத்திருப்பதினுலும், ஸத்வகுணப் பிரதானமான இந்த மனஸில், நல்ல தெளிவான ஜலத்தில் எப்படி சந்திரன் பிரதிபிம்பிக்கிருனே அதேமாதிரியாக, ஆனந்த ஸ்வரூபனுன ஆத்மா பிரதிபிம்பிக்கிருர்.

[ஆத்மாவின் ஆனந்தம் மனஸில் தோன்ற வேண்டுமானுல் மனம் புண்ணியத்திஞல் ஸத்வகுணம் மேலிட்டதாக இருக்கவேண்டும். அதே புண்ணியத்திஞல் விரும்பிய பதார்த்தமும் கிடைத்திருக்கவேண்டும். இவ்விதம் மனஸில் தோன்றும் ஆத்ம பிரதிபிம்பமான ஆனந்தம்தான் விஷய ஸுகம் என்று சொல்லப்படுகிறது.] (646–647)

सोऽयं आभास आनन्दः चित्ते यः प्रतिबिम्बितः ।
पुण्योत्कर्षापकर्षाभ्यां भवत्युच्चावचः स्वयम् ॥ ६४८ ॥

*ஸோயமாபாஸ ஆநந்தஸ் சித்தே ய: ப்ரதிபிம்பித: ।*
*புண்யோத்கர்ஷாபகர்ஷாப்யாம் பவத்யுச்சாவச: ஸ்வயம் ॥*

यः–எந்த ஆனந்தம், चित्ते–மனதில், प्रतिबिंबितः–பிரதிபிம்பித்ததோ, सोऽयं–அந்த இந்த, आभास आनन्दः–பிரதிபிம்ப ஆனந்தம், पुण्योत्कर्षापकर्षाभ्यां–புண்யத்தின் உயர்வு தாழ்வுகளால், स्वयं–தானே, उच्चावचः–மேலானதாகவும் கீழானதாகவும், भवति–ஆகிறது.

மனஸில் எந்த ஆனந்தம் பிரதிபிம்பிக்கிறதோ, அந்த பிரதிபிம்ப ஆனந்தம் புண்ணியத்தின் அதிகம் குறைவு என்ற காரணத்திஞல் தானே மேல்பட்டதாகவும் கீழ்பட்டதாகவும் ஏற்படுகிறது. (648)

(அ) புண்ணியத்தின் தாரதம்யத்திஞல் தான் விஷய ஸுகத்தில் தாரதம்யம் ஏற்படுகிறதென்பதை வைத்து தைத்திரீய உபநிஷத்தில் ஆனந்த தாரதம்யம் சொல்லப்பட்டிருக்கிறது என்பதையும், இந்த ஆனந்தம் புண்ணியத்திஞல் ஏற்படுவதிஞல் புண்ணியம் செலவழிந்தவுடன் நாசத்தையடைந்துவிடுமென்பதையும் சொல்கிருர் :—

सार्वभौमादिब्रह्मान्तं श्रुत्या यः प्रतिपादितः ।
स क्षयिष्णुः सातिशयः प्रक्षीणे कारणे लयम् ।
यात्येष विषयानन्दः यस्तु पुण्यैकसाधनः ॥ ६४९ ॥

*ஸார்வபௌமாதி ப்ரஹ்மாந்தம் ச்ருத்யா ய: ப்ரதிபாதித:*

ஸ க்ஷயிஷ்ணுः ஸாதிசயः ப்ரக்ஷீணே காரணே லயம் ।
யாத்யேஷ விஷயாநந்தோ யஸ்து புண்யைக ஸாதநः ॥

यः-எந்த ஆனந்தம், सार्वभौमादिब्रह्मान्तं-ஸார்வபௌமர் முதல் ப்ரஹ்மாவரை, श्रुत्या-சுருதியால், प्रतिपादितः-விளக்கப்பட்டிருக்கிறதோ. सः-அது, क्षयिष्णुः-குறைவடையும் ஸ்வபாவமுள்ளது सातिशयः-மேலும் கீழுமாக உள்ளது यः-எது, पुण्यैकसाधनः-புண்யம் ஒன்றையே ஸாதனமாக உடையதோ, एष विषयानन्दः-இந்த விஷயானந்தம், कारणे-காரணமான புண்யம், प्रक्षीणे-அழிந்தவுடன், लयं याति-நாசமடைகிறது.

பூமி பூராவும் ஆளும் சக்கிரவர்த்தி முதல் நான்முக பிரஹ்மாவரையில் வேதத்தில் பிரதிபாதிக்கப்பட்டிருக்கிறது எதுவோ அந்த விஷயாநந்தம் குறையக்கூடியது, மேல் கீழ் உள்ளது, புண்ணியத்திலேயே ஏற்படுகிறதாய் எந்த ஆனந்தமிருக்கிறதோ, அது காரணமான புண்ணியம் தீர்ந்தவுடன் தானும் லயத்தை யடைந்துவிடும். (649)

ये तु वैषयिकानन्दं भुञ्जते पुण्यकारिणः ।
दुःखं च भोगकालेऽपि तेषां अन्ते महत्तरम् ॥ ६५० ॥

யே து வைஷயிகாநந்தம் புஞ்ஜதே புண்யகாரிணः ।
துக்கம் ச போககாலேபி தேஷாமந்தே மஹத்தரம் ॥

पुण्यकारिणः-புண்யம் செய்த, ये तु-எவர்கள், वैषयिकानन्दं-விஷயத்திலிருந்து ஏற்படும் ஆனந்தத்தை, भुञ्जते-அனுபவிக்கிறார்களோ, तेषां-அவர்களுக்கு, भोगकालेऽपि-அனுபவிக்கும் காலத்திலும், दुःखं च-துக்கமும் உண்டு, अन्ते-முடிவில், महत्तरं-மிக அதிகமான துக்கம் உண்டு.

புண்ணியம் செய்த எவர்கள் விஷயத்திலிருந்து ஏற்படும் ஆனந்தத்தை அனுபவிக்கிறார்களோ, அவர்களுக்கு அனுபவிக்கிற காலத்திலும் கூட துக்கம் உண்டு, முடிவில் வெகு அதிகமான துக்கம் உண்டு. (650)

सुखं विषयसंपृक्तं विषसंपृक्तभक्तवत् ।
भोगकालेऽपि भोगान्ते दुःखमेव प्रयच्छति ॥ ६५१ ॥

ஸுகம் விஷய ஸம்ப்ருக்தம் விஷ ஸம்ப்ருக்த பக்தவத் ।
போக காலேபி போகாந்தே துக்கமேவ ப்ரயச்சதி ॥

विषयसंपृक्तं–விஷயத்துடன் ஸம்பந்தப்பட்ட, सुखं–ஸுக மானது, विषसंपृक्तभक्तवत्–விஷத்துடன் கலந்த அன்னம் போல, भोगकालेपि–அநுபவ ஸமயத்திலும், भोगान्ते–அநுபவத்தின் முடிவிலும், दुःखमेव-துக்கத்தையே, प्रयच्छति-கொடுக்கிறது.

விஷயத்துடன் ஸம்பந்தப்பட்ட ஸுகமானது விஷம் கலந்த அன்னம் போல, போக காலத்திலும் போகமுடிவிலும் துக்கத்தையே கொடுக்கிறது. (651)

सुखं उच्चावचत्वेन क्षयिष्णुत्वभयेन च ।
भोगकाले भवेत् नृणां ब्रह्मादिपदभाजिनाम् ॥ ६५२ ॥

ஸுகமுச்சாவசத்வேந க்ஷயிஷ்ணுத்வ பயேந ச ॥
போககாலே பவேத் ந்ருணம் ப்ரஹ்மாதிபத பாஜிநாம் ॥

उच्चावचत्वेन – மேலானதாகவும் கீழானதாகவுமிருப்பதாலும், क्षयिष्णुत्वभयेन च -குறைவடையும் தன்மையில் பயத்தாலும், ब्रह्मादिपदभाजिनां-ப்ரஹ்மா முதலியவர்களின் பதவியில் இருக்கும், नृणां–மனிதர்களுக்கு, सुखं–ஸுகமானது, भोगकाले–அநுபவிக்கும் காலத்தில், भवेत्–(துக்கமாக) ஆகிவிடும்.

விஷய ஸுகமானது, மேல் கீழ் தன்மையுள்ளதாயிருப்பதாலும், மறைந்துவிடக்கூடிய தன்மையுடையதே என்ற பயத்தினாலும், பிரஹ்மா முதலானவர்களுடைய பதவிகளில் இருக்கும் மனிதர்களுக்கு போக காலத்திலேயே (துக்கம்) இருக்கும். இங்கு 'भोगकाले भवेत् दुःखं' என்றும் 'सुखम' என்றும் பாடம் இருக்கலாம். (652)

राजस्थानप्रविष्टानां तारतम्यं मतं यथा ।
तथैव दुःखं जन्तूनां ब्रह्मादिपदभाजिनाम् ॥ ६५३ ॥

*ராஜஸ்தாந ப்ரவிஷ்டாநாம் தாரதம்யம் மதம் யதா ।*
*ததைவ துக்கம் ஜந்தூநாம் ப்ரஹ்மாதி பதபாஜிநாம் ॥*

यथा-எப்படி, राजस्थानप्रविष्टानां-ராஜபதவியில் நுழைந்திருப்பவர்களுக்கு, तारतम्यं-மேல் கீழ் தன்மை, मतं-ஸம்மதமோ, तथैव-அப்படியே, ब्रह्मादिपदभाजिनां-ப்ரஹ்மா முதலானவர்களின் பதவிகளை அடைந்த, जन्तूनां-பிராணிகளுக்கு, दुःखं-துக்கம் உண்டு.

எப்படி ராஜபதவியில் இருப்பவர்களுக்குள் சிற்றரசன், அரசன், மஹாராஜா, சக்ரவர்த்தி, ஸம்ராட் என்று மேல் கீழ் தன்மை உண்டோ அப்படியேதான் பிரஹ்மா முதலானவரின் பதவியை யடைந்திருக்கும் பிராணிகளுக்கும் துக்கம் உண்டு. இங்கு 'तथैव सर्वजन्तूनां' என்ற பாடம் இருந்தால் 'எல்லா பிராணிகளுக்கும் தாரதம்யம் உண்டு' என்று அர்த்தம் சொல்லலாம். (653

न काङ्क्षणीयं विदुषा तस्मात् वैषयिकं सुखम् ॥ ६५४ ॥

*ந காங்க்ஷணீயம் விதுஷா தஸ்மாத் வைஷயிகம் ஸுகம் ।*

तस्मात्-ஆகையால், विदुषा-அறிவுள்ளவனால், वैषयिकं सुखं-விஷயங்களிலிருந்து கிடைக்கும் ஸுகம், न काङ्क्षणीयं-விரும்பத்தக்கதல்ல.

ஆகையால் அறிவுள்ளவனால் விஷயத்திலிருந்து கிடைக்கும் ஸுகம் ஆசைப்படத்தகுந்ததில்லை. (654)

(அ) அப்படியானால், ஆசைப்படத்தகுந்த ஸுகம் எது என்று கேட்கத்தோன்றுமாதலால், எதன் பிரதிபிம்பமாக விஷயானந்தம் ஏற்படுகிறதோ, அந்த பிம்பமான ஆத்மானந்தம் தான் தேடத்தக்கது என்று காட்டுகிறார்:—

यो बिम्बभूत आनन्दः स आत्मानन्दलक्षणः ।

शाश्वतो निर्द्वयः पूर्णः नित्य एकोऽपि निर्भयः ॥ ६५५ ॥

लक्ष्यते प्रतिबिम्बेन आभासानन्देन बिम्बवत् ।

*யோ பிம்பபூத ஆநந்த: ஸ ஆத்மாநந்த லக்ஷண: ।*
*சாச்வதோ நிர்த்வய: பூர்ணோ நித்ய ஏகோபி நிர்பய: ॥*

*லக்ஷ்யதே ப்ரதிபிம்பேநாபாஸாநந்தேந பிம்பவத் ।*

यः--எது, बिम्बभूतः आनन्दः-பிம்பமாக இருக்கும் ஆனந்தமோ, सः-அது, आत्मानन्दलक्षणः-ஆத்மானந்த ஸ்வரூபமாக உள்ளது. शाश्वतः-எப்பொழுதும் இருக்கக் கூடியது, निर्द्वयः-இரண்டற்றது, पूर्णः-நிறைந்தது, नित्यः-அழிவற்றது, एकोपि-ஒன்ருக இருந்தாலும், निर्भयः-பயமற்றது. प्रतिबिम्बेन-பிரதிபிம்பத்தால், बिम्बवत्-பிம்பம்போல் आभासानन्देन-கொஞ்சமாக விளங்கும் பிரதிபிம்பானந்தத்தால் (பிம்பபூதமான ஆத்மாநந்தம்) लक्ष्यते-அறியப்படுகிறது.

பிம்பமாயிருக்கும் ஆனந்தம் எதுவோ, அது ஆத்மானந்த ஸ்வரூபமாக உள்ளது அது மாறுதலற்றது, இரண்டற்றது, பூர்ணமாயுள்ளது, நித்யமாயுள்ளது, ஒன்ருகவே உள்ளது, பயமற்றது. பிரதிபிம்பத்தால் பிம்பம் காட்டப்படுவதுபோல, ஆபாஸ (பிரதிபிம்ப) ஆனந்தத்தினுல் பிம்பமான ஆத்மானந்தம் காட்டப்படுகிறது.

प्रतिबिम्बो बिम्बमूलो विना बिम्बं न सिध्यति ॥ ६५६ ॥

यत् ततो बिम्ब आनन्दः प्रतिबिम्बेन लक्ष्यते ।
युक्त्यैव पण्डितजनैः, न कदाऽप्यनुभूयते ॥ ६५७ ॥

*ப்ரதிபிம்போ பிம்பமூலோ விநா பிம்பம் ந ஸித்யதி ॥*

*யத் ததோ பிம்ப ஆநந்த: ப்ரதிபிம்பேந லக்ஷ்யதே ।*
*யுக்த்யைவ பண்டிதஜனைர் ந கதாப்யநுபூயதே ॥*

यत्-எந்தக்காரணத்தால், बिम्बमूलः-பிம்பத்தைக் காரணமாக உடைய, प्रतिबिम्बः-பிரதிபிம்பமானது, बिम्बं

विना-பிம்பம் இல்லாமல், न सिध्यति-ஏற்படாதோ, ततः-ஆகையால், पण्डितजनैः-அறிவாளிகளான ஜனங்களால், युक्त्यैव-யுக்தியாலேயே, प्रतिबिम्बेन-பிரதிபிம்பத்தைக் கொண்டு, बिम्ब आनन्दः-பிம்பமான ஆனந்தமானது, लक्ष्यते-ஊகிக்கப்படுகிறது, कदापि-ஒரு பொழுதும், न अनुभूयते-(நேரில்) அனுபவிக்கப்படுகிறதில்லை.

பிரதிபிம்பமானது பிம்பத்தை மூலமாயுடையது பிம்பம் இல்லையானால் பிரதிபிம்பம் ஏற்படாது. இவ்விதமிருப்பதால், பிம்பமாயிருக்கிற ஆனந்தம் யுக்தியினாலேயே பிரதி பிம்பத்தைக்கொண்டு அறிவாளி ஜனங்களால் அறியவேண்டி யிருக்கிறது. அந்த ஆனந்தம் ஒரு பொழுதும் (நேரில விஷயங்கள் போல) அனுபவிக்கப்படுவதில்லை. (656-657)

अविद्याकार्यकरणसंघातेषु पुरोदितः ।
आत्मा जाग्रत्यपि स्वप्ने न भवत्येष गोचरः ॥ ६५८ ॥

அவித்யா கார்ய கரண ஸங்காதேஷு புரோதித: I
ஆத்மா ஜாக்ரத்யபி ஸ்வப்நே ந பவத்யேஷ கோசர: ॥

पुरा उदितः-முன்சொல்லப்பட்ட, एषः आत्मा-இந்த ஆத்மாவானது, अविद्याकार्यकरणसंघातेषु-அக்ஞானம், சரீரம், இந்திரியங்கள் முதலியவைகளின் கூட்டான தேஹங்களில், जाग्रत्यपि-ஜாக்ரத் நிலையிலும், स्वप्ने-கனவிலும், गोचरो न भवति-ஞானத்திற்கு விஷயமாக ஆகிறதில்லை.

முன் சொல்லப்பட்ட இந்த ஆத்மா அக்ஞானம், சரீரம், இந்திரியங்கள் சேர்ந்த கூட்டங்களில் ஜாக்கிரத் காலத்திலாவது ஸ்வப்னத்திலாவது ஞானத்திற்கு விஷயமாகிற தில்லை. (658)

स्थूलस्यापि च सूक्ष्मस्य दुःखरूपस्य वर्ष्मणः ।
लये सुषुप्तौ स्फुरति प्रत्यक् आनन्दलक्षणः ॥ ६५९ ॥

ஸ்தூலஸ்யாபி ச ஸூக்ஷ்மஸ்ய துக்கரூபஸ்ய வர்ஷ்மண: I
லயே ஸுஷுப்தௌ ஸ்புரதி ப்ரத்யகாநந்த லக்ஷண: ॥

दुःखरूपस्य–துக்கஸ்வரூபமான, स्थूलस्यापि–ஸ்தூலசரீரத்திற்கும், सूक्ष्मस्य वर्ष्मणश्च-ஸூக்ஷ்மசரீரத்திற்கும், लये–லயம் ஏற்பட்டபொழுது, सुषुप्तौ–ஸுஷுப்தியில், आनन्दलक्षणः–ஆனந்தஸ்வரூபமான, प्रत्यक्-பிரத்யகாத்மா, स्फुरति–பிரகாசிக்கிறது.

துக்கரூபமாயிருக்கும் ஸ்தூல சரீரமும் ஸூக்ஷ்ம சரீரமும் லயமடைந்திருக்கும்போது, ஸுஷுப்தியில் ஆனந்த ஸ்வரூபமான உள்ளிருக்கும் ஆத்மா விளங்குகிறார். (659)

न ह्यत्र विषयः कश्चित् नापि बुद्ध्यादि किंचन ।
आत्मैव केवलानन्दमात्रः तिष्ठति निर्द्वयः ॥ ६६० ॥

ந ஹ்யத்ர விஷய: கச்சித் நாபி புத்த்யாதி கிஞ்சந ।
ஆத்மைவ கேவலாநந்த மாத்ரஸ் திஷ்டதி நிர்த்வய: ॥

अत्र-இந்த ஸுஷுப்தியில், कश्चित् विषयः–ஒரு விஷயமும், नहि- இல்லையல்லவா! बुद्ध्याद्यपि किंचन–புத்தி முதலியவை ஒன்றும், न-இல்லை. निर्द्वयः-இரண்டாவதற்றதான, आत्मैव-ஆத்மாதான், केवलानन्दमात्रः–சுத்தமான ஆனந்தஸ்வரூபமாகவே, तिष्ठति–இருக்கிறது

இங்கே (ஸுஷுப்தியில்) எவ்வித விஷயமும் கிடையாது. புத்தி முதலானது எதுவும்கூடக் கிடையாது. ஆத்மாதான் சுத்தமான ஆனந்தமாத்திரனாய் இரண்டற்றவனாக இருக்கிறான். (660)

प्रत्यभिज्ञायते सर्वैरेष सुप्तोत्थितैर्जनैः ।
सुखमात्रतया नात्र संशयं कर्तुमर्हसि ॥ ६६१ ॥

ப்ரத்யபிஜ்ஞாயதே ஸர்வைரேஷ ஸுப்தோத்திதைர்ஜனை:
ஸுகமாத்ரதயா நாத்ர ஸம்சயம் கர்த்துமர்ஹஸி ॥

सुप्तोत्थितैः-தூங்கி எழுந்திருந்த, सर्वैः जनैः–எல்லாஜனங்களாலும், एषः-இந்த ஆத்மா, सुखमात्रतया-கேவல ஸுகஸ்வரூபமாக, प्रत्यभिज्ञायते-நினைத்துப் பார்க்கப்படுகிறது. अत्र

இவ்விஷயத்தில், संशयं कर्तुं-ஸந்தேஹத்தைச் செய்வதற்கு नार्हसि-தக்கவனாக இல்லை.

தூங்கி எழுந்திருந்த எல்லா ஜனங்களினாலும் கேவல ஸுகஸ்வருபமாகவே இருந்தோமென்று நினைத்துப் பார்க்கப் படுகிறது. இவ்விஷயத்தில் நீ ஸந்தேகப்படுவது உசிதமில்லை.

त्वयाऽपि प्रत्यभिज्ञातं सुखमात्रत्वं आत्मनः ।
सुषुप्तादुत्थितवता सुखमस्वाप्समित्यनु ॥ ६६२ ॥

த்வயாபி ப்ரத்யபிக்ஞாதம் ஸுகமாத்ரத்வமாத்மந: ।
ஸுஷுப்தாதுத்திதவதா ஸுகமஸ்வாப்ஸமித்யநு ॥

सुषुप्तात्-தூக்கத்திலிருந்து, उत्थितवता-எழுந்திருந்த, त्वयापि-உன்னாலும்கூட, सुखमस्वाप्समिति-ஸுகமாகத் தூங்கினேன் என்று, आत्मनः-ஆத்மாவின், सुखमात्रत्वं-ஸுக ஸ்வருபமாக மட்டும இருக்கும தன்மை, अनुप्रत्यभिज्ञातं-அநுபவத்தை அனுஸரித்து ஞாபகப்படுத்திக் கொள்ளப் பட்டிருக்கிறது.

தூக்கத்திலிருந்து எழுந்திருக்கும் உன்னால் கூட "நான் ஸுகமாய்த் தூங்கினேன்" என்று பின்னால் ஆத்மாவின் ஸுகமாத்திரத்தன்மை ஞாபகமாக நினைக்கப்படுகிறது. (662)

दुःखाभावः सुखमिति यदुक्तं पूर्ववादिना ।
अनाघ्रातोपनिषदा तदसारं मृषा वचः ॥ ६६३ ॥

துக்காபாவ: ஸுகமிதி யதுக்தம் பூர்வவாதிநா ।
அநாக்ராதோபநிஷதா ததஸாரம் ம்ருஷா வச: ॥

अनाघ्रातोपनिषदा-உபநிஷத்தை முகர்ந்துகூடபார்க்காத, पूर्ववादिना - பூர்வபக்ஷியினால், दुःखाभावः - துக்கமில்லாமை, सुखमिति-ஸுகமென்று, यत् वचः-எந்த வார்த்தை, उक्तं-சொல்லப்பட்டதோ, तत्-அந்த வார்த்தை, असारं - ஸார மற்றது, मृषा-பொய்.

துக்கமில்லாமைதான் ஸுகம் என்று உபநிஷத்தை முகர்ந்துகூடப் பார்க்காத அதன் வாஸனையைக்கூட அறியாத அதாவது உபநிஷத்தின் கருத்தைச் சிறிதும் அறிந்து கொள்ளாத பூர்வபக்ஷியினுல் சொல்லப்பட்ட வார்த்தை ஸாரமற்றது, பொய். (663)

दुःखाभावस्तु लोष्टादौ विद्यते नानुभूयते ।
सुखलेशोऽपि सर्वेषां प्रत्यक्षं तदिदं खलु ॥ ६६४ ॥

துக்காபாவஸ்து லோஷ்டாதௌ வித்யதே நாநுபூயதே ।
ஸுகலேசோபி ஸர்வேஷாம ப்ரத்யக்ஷம் ததிதம் கலு ॥

दुःखाभावः - துக்கமின்மை, लोष्टादौ - மண் கட்டி முதலியவற்றில, विद्यते-இருக்கிறது. तु-ஆனுல் सुखलेशोऽपि - சிறிது ஸுகம்கூட, नानुभूयते - அனுபவிக்கப் படுகிறதில்லை. तदिदं-அந்த இது, सर्वेषां-எல்லோருக்கும், प्रत्यक्षं खलु-நேரில் தெரிந்ததல்லவா!

துக்கமில்லாமை மண்கட்டி முதலியதில் இருக்கிறது, ஆனுல் ஸுகலேசம்கூட அனுபவிக்கப்படுவதில்லை. இது எல்லாருக்கும் நேரில் தெரிந்த விஷயமே. (664)

सत् अयं ह्येष एवेति प्रस्तुत्य वदति श्रुतिः ।
सद्घनोऽयं चिद्घनोऽयं आनन्दघन इत्यपि ॥ ६६५ ॥

आनन्दघनतामस्य स्वरूपं प्रत्यगात्मनः ।

ஸதயம் ஹ்யேஷ ஏவேதி ப்ரஸ்துத்ய வததி ச்ருதி: ।
ஸத்கநோயம் சித்கநோயமாநந்தகன இத்யபி ॥

ஆனந்தகநதாமஸ்ய ஸ்வரூபம் ப்ரத்யகாத்மந: ।

'सत्' - ஸத், 'अयं' - அயம் (இது) 'एष ह्येव' - ஏஷ ஹ்யேவ (இதுதான்), इति-என்றும், अयं-இது, सद्घनः- முழுவதும் ஸத்ஸ்வரூபம் अयं-இது, चिद्घनः-முழுவதும் சித்ஸ்வரூபம், आनन्दघनोऽपि - முழுவதும் ஆனந்த ஸ்வரூப

மாகவும் உள்ளது, इति-என்றும், प्रस्तुत्य-ஆரம்பித்து, श्रुतिः-உபநிஷத், आनन्दघनतां - ஆனந்தகனமாக இருக்கும் தன்மையை, अस्य - இந்த, प्रत्यगात्मनः-பிரத்யகாத்மாவின், स्वरूपं-ஸ்வரூபமாக, वक्ति-சொல்கிறது.

'ஸத்' என்றும் 'அயம்' என்றும் 'ஏஷ ஹ்யேவ' என்றும் இது ஸத்கனம், இது சித்கனம் ஆனந்தகனமும்கூட என்றும் ஆரம்பித்து உபநிஷத் இந்த ப்ரத்யகாத்மாவின் ஸ்வரூபம் ஆனந்தகனம் என்று கூறுகிறது. (सदेव सोम्येदमग्र आसीत् , अयमात्मा ब्रह्म एष ह्येवानन्दयाति இதுமுதலான சுருதிகள்)

(அ) வேதம் சொல்வதுமாத்திரமல்ல. பெரியோர்களின் அனுபவமும் அப்படியேயிருக்கிறதென்பதையும் காட்டுகிறார்:-

धन्यैः महात्मभिः धीरैः ब्रह्मविद्भिः सदुत्तमैः ॥ ६६६ ॥

अपरोक्षतयैवात्मा समाधौ अनुभूयते ।
केवलानन्दमात्रत्वेन एवमत्र न संशयः ॥ ६६७ ॥

தந்யைர் மஹாத்மபிர் தீரைர் ப்ரஹ்மவித்பி: ஸதுத்தமை: ॥
அபரோக்ஷதயைவாத்மா ஸமாதாவநுபூயதே ।

கேவலாநந்தமாத்ரத்வேநைவமத்ர ந ஸம்சய: ॥

धन्यैः-பாக்யசாலிகளும், महात्मभिः மஹான்களும், धीरैः-புத்திமான்களும், सदुत्तमैः-சிறந்த ஸாதுக்களுமான, ब्रह्मविद्भिः ப்ரஹ்மவித்துக்களால், समाधौ - ஸமாதிநிலையில், आत्मा-ஆத்மாவானது, केवलानन्दमात्रत्वेन - சுத்தமான ஆனந்த ஸ்வரூபமாகவே, एवं-இவ்வாறு, अपरोक्षतयैव-நேரிலேயே, अनुभूयते - அனுபவிக்கப்படுகிறது. अत्र - இவ்விஷயத்தில், न संशयः-ஸந்தேஹமில்லை.

தன்யர்களாயும், பெரியோர்களாயும், நல்ல சுத்தமான புத்தியுள்ளவர்களாயும், பிரஹ்மத்தை அறிந்தவர்களாயுமுள்ள ஸாது சிரேஷ்டர்களால் ஸமாதி தசையில் தனித்து ஆனந்த மாத்திரமாக ஆத்மா நேரில் பிரத்யக்ஷமாகவே அனுபவிக்கப்படுகிறது. ஆகையால் இவ்விஷயத்தில் ஸந்தேகமில்லை.

(அ) பிரஹ்மவித்துக்களின் அனுபவமிருக்கட்டும். ஸர்வ பிராணிகள் அனுபவிப்பதும் அந்த ஆனந்தமேதானாகும் என்று விவரிக்கிறார் :—

स्वस्वोपाध्यनुरूपेण ब्रह्माद्याः सर्वजन्तवः ।
उपजीवन्त्यमुष्यैव मात्रां आनन्दलक्षणाम् ॥ ६६८ ॥

ஸ்வஸ்வோபாத்யனுரூபேண ப்ரஹ்மாத்யா: ஸர்வஜந்தவ:
உபஜீவந்த்யமுஷ்யைவ மாத்ராமாநந்தலக்ஷணம் ॥

ब्रह्माद्याः-ப்ரஹ்மா முதலான, सर्वजन्तवः-எல்லா பிராணிகளும், स्वस्वोपाध्यनुरूपेण-தன் தன் உபாதிக்குத் தகுந்ததாக अमुष्य - இந்த ஆத்மாவின், आनन्दलक्षणां - ஆனந்த ஸ்வரூபமான, मात्रामेव-லேசத்தையே, उपजीवन्ति-அடைந்து வாழ்கிறார்கள்.

பிரஹ்மா முதலான எல்லா ஜந்துக்களும் இதனுடைய ஆனந்த லக்ஷணமான அம்சத்தையே தங்கள் தங்கள் உபாதிகளுக்குத் தக்கபடி எடுத்துக்கொண்டு ஜீவித்திருக்கிறார்கள். "एतस्यैवानन्दस्य अन्यानि भूतानि मात्रामुपजीवन्ति"

आस्वाद्यते यो भक्ष्येषु सुखकृत् मधुरो रसः ।
स गुडस्यैव नो तेषां माधुर्यं विद्यते क्वचित् ॥ ६६९ ॥

ஆஸ்வாத்யதே யோ பக்ஷ்யேஷு ஸுகக்ருன் மதுரோ ரஸ:।
ஸ குடஸ்யைவ நோ தேஷாம் மாதுர்யம் வித்யதே க்வசித் ॥

भक्ष्येषु - தின்பண்டங்களில், सुखकृत् - ஆனந்தத்தைத் தருகின்ற, यः-எந்த, मधुरो रसः-தித்திப்பு சுவை, आस्वाद्यते-ருசிக்கப்படுகிறதோ, सः-அது, गुडस्यैव-வெல்லத்தினுடையதுதான். तेषां-அந்த தின்பண்டங்களுக்கு, क्वचित्-ஒரு ஸமயத்திலும், माधुर्यं-(தனியாக) இனிப்பு, नो विद्यते-இல்லை,

பக்ஷணங்களில் ஸுகத்தைக்கொடுக்கும் எந்த தித்திப்பு ரஸம் ருசிக்கப்படுகிறதோ, அது வெல்லத்தினுடையதேதான். அந்த பக்ஷணங்களுக்குத்தனியாக எக்காலத்திலும் தித்திக்கும் தன்மை கிடையாது. (669)

तत्तद्विषयसांनिध्यात् आनन्दो यः प्रतीयते ।
बिम्बानन्दांशविस्फूर्तिरेवासौ न जडात्मनाम् ॥ ६७० ॥

*தத்தத் விஷய ஸாந்நித்யாதாநந்தோ ய: ப்ரதீயதே ।*
*பிம்பாநந்தாம்ச விஸ்பூர்த்திரேவாஸௌ ந ஜடாத்மநாம் ॥*

तत्तद्विषयसान्निध्यात्– அந்தந்த விஷயங்கள் அருகிலிருப்பதால், यः–எந்த, आनन्दः – ஆனந்தம். प्रतीयते - அறியப்படுகிறதோ, असौ–அது, बिम्बानन्दांशविस्फूर्तिरेव–பிம்பமான ஆத்மானந்தத்தினுடைய லேசத்தின் தோற்றமேயாகும். न जडात्मनां–ஜடரூபமான விஷயங்களுடையது அல்ல.

அந்தந்த விஷயங்களின் ஸந்நிதி ஏற்படும்போது எந்த ஆனந்தம் தெரிகிறதோ, அது பிம்பமாயுள்ள ஆத்மாவின் ஆனந்தத்தினுடைய அம்சத்தின் வெளித்தோற்றமேயாகும். ஜடஸ்வரூபமான அந்த விஷயங்களைச் சேர்ந்ததாகாது. (670)

यस्य कस्यापि योगेन यत्र कुत्रापि दृश्यते ।
आनन्दः स परस्यैव ब्रह्मणः स्फूर्तिलक्षणः ॥ ६७१ ॥

*யஸ்ய கஸ்யாபி யோகேந யத்ர குத்ராபி த்ருச்யதே ।*
*ஆநந்த: ஸ பரஸ்யைவ ப்ரஹ்மண: ஸ்பூர்த்திலக்ஷண: ॥*

यस्य कस्यापि–ஏதாவது ஒரு வஸ்துவின், योगेन–சேர்க்கையால், यत्र कुत्रापि–எங்கேயாவது, आनन्दः–ஆனந்தம், दृश्यते–காணப்படுகிறதேயானால், सः–அது, परस्य ब्रह्मणः–பரப்ரஹ்மத்தின், स्फूर्तिलक्षणः एव–பிரகாசத்தையே ஸ்வரூபமாக உடையது.

ஏதாவது ஒரு வஸ்துவின் சேர்க்கையினால் எங்கேயாவது ஆனந்தம் காணப்பட்டால் அது பரபிரஹ்மத்தின் பிரகாசத்தையே லக்ஷணமாக உடையது. (671)

यथा कुवलयोल्लासः चन्द्रस्यैव प्रसादतः ।
तथाऽऽनन्दोदयोऽप्येषां स्फुरणादेव वस्तुनः ॥ ६७२ ॥

யதா குவலயோல்லாஸ: சந்த்ரஸ்யைவ ப்ரஸாதத: ।
ததாநந்தோதயோப்யேஷாம் ஸ்புரணாதேவ வஸ்துந: ॥

यथा-எப்படி, कुवलयोल्लासः-குவலய மலரின் மலர்ச்சி चन्द्रस्यैव प्रसादतः-சந்திரனின் பிரஸாதத்தினுலேயே ஏற்படுகிறதோ, तथा-அப்படி, एषां-இந்த விஷயங்களுக்கு, आनन्दोदयोपि-ஆனந்தம் ஏற்படுவதும், वस्तुनः-ஆத்ம வஸ்துவின், स्फुरणादेव-பிரகாசத்தால்தான்.

குவலய புஷ்பத்தின் மலர்தல் எப்படி சந்திரனுடைய பிரஸாதத்தினுலேயே ஏற்படுகிறதோ, அப்படியே இந்த விஷயங்களுக்கு ஆனந்தத்தன்மை ஏற்படுவதும் வஸ்துவான (ஆனந்தஸ்வரூபனுன) ஆத்மாவின் ஸ்புரணத்தினுல்தான். இங்கு 'चन्द्रस्यैव प्रकाशतः' என்று பாடம் இருக்கலாம்.

(அ) இதுவரை ஆத்மா ஸத் என்று 612 முதல் 617 சுலோகங்களிலும் சித் என்று 618 முதல் 622 சுலோகங்களிலும் 623 முதல் 672 சுலோகங்களில் ஆனந்தம் என்றும் சொல்லி, இவை மூன்றும் ஆத்மாவின் லக்ஷணம் என்று 610 வது சுலோகத்தில் கண்டிருப்பதையனுஸரித்து அவை ஆத்மாவின் ஸ்வரூபத்தைச்சேர்ந்தவைகளே தவிர குணங்கள் என்று நினைத்துவிடக்கூடாது என்பதை இப்பொழுது வற்புறுத்துகிருர்:—

सत्त्वं चित्त्वं तथाऽऽनन्दः स्वरूपं परमात्मनः ।
निर्गुणस्य गुणायोगात् गुणास्तु न भवन्ति ते ॥ ६७३ ॥

ஸத்த்வம் சித்த்வம் ததாநந்த: ஸ்வரூபம் பரமாத்மந: ।
நிர்குணஸ்ய குணயோகாத் குணஸ்து ந பவந்தி தே ॥

सत्त्वं-ஸத்தாக (முக்காலத்திலும் அழியாததாக) இருக்கும் தன்மை, चित्त्वं-சித்தாக (அறிவாக) இருக்கும் தன்மை, तथा-அப்படியே, आनन्दः-ஆனந்தம் (இவை),

परमात्मनः - பரப்ரஹ்மத்தின், स्वरूपं - ஸ்வரூபமாகும், तु- ஆனால், निर्गुणस्य-குணமற்ற வஸ்துவிற்கு, गुणायोगात्-குணம் சேராததால், ते- அவை, गुणाः-குணங்களாக, न भवन्ति- ஆகிறதில்லை.

ஸத்தாயிருக்கும் தன்மை, சித்தாயிருக்கும் தன்மை, ஆனந்தமாயிருக்கும் தன்மை, இவை பரமாத்மாவின் ஸ்வரூபமேயாகும். குணமற்ற வஸ்துவிற்கு குணத்தின் சேர்க்கை கிடையாததால் இவை குணங்களாகா. (673)

विशेषणं तु व्यावृत्त्यै भवेत् द्रव्यान्तरे सति ॥ ६७४ ॥

परमात्माऽद्वितीयोऽयं प्रपञ्चस्य मृषात्वतः ।
वस्त्वन्तरस्याभावेन न व्यावर्त्यः कदाचन ॥ ६७५ ॥

விசேஷணம் து வ்யாவ்ருத்த்யை பவேத் த்ரவ்யாந்தரே ஸதி ।
பரமாத்மாऽத்விதீயோऽயம் ப்ரபஞ்சஸ்ய ம்ருஷாத்வத: ।
வஸ்த்வந்தரஸ்யாபாவேன ந வ்யாவர்த்ய: கதாசந ॥

द्रव्यान्तरे सति - வேறு பொருள் இருக்கும்பொழுது व्यावृत्त्यै - (அதை) விலக்குவதற்காக, विशेषणं तु- விசேஷணமோவெனில், भवेत्-இருக்கும், प्रपञ्चस्य பிரபஞ்சம் मृषात्वतः - பொய்யாக இருப்பதால், अयं परमात्मा - இந்த பரமாத்மா, अद्वितीयः-இரண்டாவது பொருள் அற்றது. वस्त्वन्तरस्य अभावेन-வேறு பொருள் இல்லாததால், व्यावर्त्यः- விலக்கத்தக்கது कदाचन-ஒருக்காலும், न-இல்லை.

விசேஷணம் (அடைமொழி) என்பது வேறு பதார்த்த மிருந்தால் அதிலிருந்து பிரித்துக்காட்டுவதற்கு வேண்டி யிருக்கும். ஜகத் பொய்யாயிருப்பதினால், இந்த ஆத்மா அத்விதீயம், இரண்டாவது பொருளற்றது. இதைக்காட்டிலும் வேறு வஸ்து இல்லாததால் விலக்கத்தகுந்தது ஒருக்காலு மில்லை. வெளுப்பு நிறமாயும் கருப்பு நிறமாயும் பல மாடுகள் இருக்குமிடத்தில் கருப்பு நிறமுள்ளமாட்டை விலக்குவதற்காக அதாவது அந்த மாட்டை கொண்டுவராமலிருப்பதற்காக வெள்ளை மாட்டை கொண்டு வா என்று சொல்கிறான். இங்கு

வென்னை என்பது விசேஷணம், இது கருப்புநிறமுள்ள மாட்டை விலக்குகிறது. வேறு பொருள் இருந்தால்தான் அதை விலக்குவதற்காக விசேஷணம் தேவைப்படும். இங்கு பிரபஞ்சம் பொய்யானதாலும் ப்ரஹ்மம் ஒன்றேயானதாலும் விசேஷணத்தால் விலக்குவதற்கு வேறு வஸ்து ஒன்றுமில்லை. ஆகையால் ஸத்வம், சித்வம், ஆனந்தம் இவை விசேஷணம் அல்ல. ப்ரஹ்மத்தின் ஸ்வருபம்தான். (674-675)

केवलो निर्गुणश्चेति निर्गुणत्वं निरुच्यते ।
श्रुत्यैव न ततस्तेषां गुणत्वं उपपद्यते ॥ ६७६ ॥

கேவலோ நிர்குணஸ்சேதி நிர்குணத்வம் நிருச்யதே।
ச்ருத்யைவ ந ததஸ் தேஷாம் குணத்வமுபபத்யதே ॥

केवलः-தனித்து இருப்பது, निर्गुणश्च-குணமற்றது, इति-என்று, श्रुत्यैव - சுருதியாலேயே, निर्गुणत्वं - குணமில்லாத் தன்மை, निरुच्यते-சொல்லப்படுகிறது. ततः-ஆகையால், तेषां - அவைகளுக்கு, गुणत्वं - குணத்தன்மை, न उपपद्यते-பொருந்தாது.

வேதத்தினுலேயே "தனித்தது, குணமற்றது" என்று நிர்குணத் தன்மை தெளிவுபடுத்தப்பட்டிருக்கிறது. ஆகையால் ஸத், சித், ஆனந்தம் ஆகிய அவைகளுக்கு குணமாக இருக்கும் தன்மை ஒவ்வாது. 'साक्षी चेता केवलो निर्गुणश्च'

उष्णत्वं च प्रकाशश्च यथा वन्हेः तथाऽऽत्मनः ।
सत्त्वचित्त्वानन्दतादि स्वरूपमिति निश्चितम् ॥ ६७७ ॥

உஷ்ணத்வம் ச ப்ரகாசஸ்ச யதா வஹ்நேஸ் ததாத்மந: ।
ஸத்வசித்வாநந்ததாதி ஸ்வருபமிதி நிச்சிதம் ॥

वन्हेः-நெருப்பிற்கு, उष्णत्वं च-உஷ்ணமாயிருக்கும் தன்மையும், प्रकाशश्च-பிரகாசமும், यथा-எப்படியோ, तथा-அப்படி, सत्त्वचित्त्वानन्दतादि-ஸத்வம் சைதன்யம் ஆனந்தத் தன்மை முதலானது, आत्मनः-ஆத்மாவினுடைய, स्वरूपं-ஸ்வருபம், इति-என்று, निश्चितं-தீர்மானிக்கப்பட்டிருக்கிறது.

உஷ்ணமாயிருக்கும் தன்மையும் பிரகாசமும் எப்படி அக்நியின் ஸ்வருபமோ, அப்படியே ஸத் தன்மை, சித் தன்மை, ஆனந்தத் தன்மை முதலானது ஆத்மாவின் ஸ்வருபமென்று தீர்மானிக்கப்பட்டிருக்கிறது. (677)

अत एव सजातीयविजातीयादिलक्षणः ।
भेदो न विद्यते वस्तुनि अद्वितीये परात्मनि ॥ ६७८ ॥

*அத ஏவ ஸஜாதீய விஜாதீயாதி லக்ஷண: ।*
*பேதோ ந வித்யதே வஸ்துந்யத்விதீயே பராத்மனி ॥*

अत एव - ஆகையாலேயே, वस्तुनि – உண்மைப் பொருளாயும், अद्वितीये–இரண்டற்றதாயும் உள்ள, परात्मनि - பரமாத்மாவில் सजातीयविजातीयादिलक्षणः – ஸஜாதீயம் விஜாதீயம் முதலானவை ரூபமான, भेदः-வேற்றுமை, न- विद्यते–இல்லை.

ஸத்வம், சித்வம், ஆனந்தத்தன்மை ஆத்மாவின் ஸ்வருபமாயிருப்பதால் ஸஜாதீயம் (ஸமமான இனத்தைச் சேர்ந்தது), விஜாதீயம் (வேறு இனத்தைச் சேர்ந்தது), முதலிய லக்ஷணங்களோடு கூடிய வேற்றுமையானது வஸ்துவாய் இரண்டற்றதாயிருக்கும் பரமாத்மாவில் கிடையாது. (678)

(அ) வேற்றுமை என்பது மூன்றுவிதம் என்பார்கள். மரம் என்கிற முறையில் மாமரமும் வேப்பமரமும் ஒரே இனமாயிருந்தாலும் வெவ்வேறுதான். அப்படியே ஒரு மாமரமும் மற்றொரு மாமரமும் இரண்டும் மாமரமாகவே ஒரே இனமாக இருந்தபோதிலும் வெவ்வேறுதான். இந்த வேற்றுமையை ஸஜாதீயபேதம் என்பார்கள். மரமும் கல்லும் வெவ்வேறு இனங்களைச் சேர்ந்திருப்பதால் அவைகளுக்குள் இருக்கும் வேற்றுமை விஜாதீய பேதம் எனப்படும். ஒரே மரத்திற்குள்ளேயே வேர், கிளை, இலை, பூ, காய், பழம் என்றிருக்கிற வேற்றுமை ஸ்வகத பேதம் எனப்படும். ஆத்மா ஒன்றேயானபடியால் பல ஆத்மாக்களில்லாததால் அதுவும் இன்னொன்றும் ஒரே இனத்தைச் சேர்ந்ததென்று சொல்வதற்கில்லை. அதைவிட வேறு இரண்டாவது பதார்த்தமே கிடையாததினால், விஜாதீய பேதத்திற்குமிடமில்லை. ஆத்மா ஏகருபமாய் அவயவங்களற்று இருப்பதால், அதற்குள் பேதம்

இருப்பதாகச் சொல்லவும் முடியாது. இவ்விதமாக ஆத்மா விஷயத்தில் எவ்வித பேதத்திற்குமிடமில்லை. இவ்விதம் சொல்லிவிட்டால், ஆத்மாவின் லக்ஷணத்திற்கு நேர்விரோதமான லக்ஷணத்தையுடைய அநாத்மாவாகிய ஜகத் வேறாகவே தெரிவதால் விஜாதீய பேதமில்லையென்று எப்படிச் சொல்லமுடியும்? பரமாத்மாவின் லக்ஷணமான சைதன்யம் ஜீவர்களிடத்திலும் காணப்படுவதாலும் ஜீவர்கள் பலவாக இருப்பதாலும் ஸஜாதீய பேதமில்லையென்றுதான் எப்படிச் சொல்லமுடியும்? ஜகத்தை ஸ்ருஷ்டிபண்ணுவதற்கு முக்குணங்களுள்ள மாயையை பரமாத்மா தனக்கு உதவியாக வைத்துக்கொள்ள வேண்டியிருப்பதாலும், முன்னால் அவர் தன் சைதன்யாம்சத்தினால் ஜகத்திற்குகுயவன்போல நிமித்த காரணம் என்றும், அக்ஞான அம்சத்தினால் மண்போல உபாதான காரணம் என்றும் சொல்லியிருப்பதினாலும், தனக்குள் பேதம் கிடையாது என்று எப்படிச் சொல்லமுடியும்? என்றெல்லாம் ஸந்தேகங்கள் ஏற்படக்கூடியதே. இவைகளுக்கு ஸமாதானம் ஜகத் வெறும் தோற்றமானதினால் அது தனிப் பதார்த்தமாகாது என்றும், ஜீவன் பிரஹ்ம சைதன்யத்தைத் தவிர வேறில்லை என்றும், ஜீவர்களுக்குள்ளும் ஸ்வரூபத்தில் பேதமில்லை என்றும், மாயை அந்த சைதன்யத்தை விட்டு தனியாய் இருக்கவோ, சைதன்யத்திற்குள் பேதத்தை உண்டுபண்ணக்கூடியதோ இல்லை என்றும் கூறி மூன்றுவித வேற்றுமைகளும் ஆத்மாவில் இல்லை என்று காட்டுவதற்காக ஸ்ரீமத் ஆசார்யார் ஆரம்பிக்கிறார் :—

प्रपञ्चस्यापवादेन विजातीयकृता भिदा ।
नेष्यते तत्प्रकारं ते वक्ष्यामि शृणु सादरम् ॥ ६७९ ॥

ப்ரபஞ்சஸ்யாபவாதேந விஜாதீயக்ருதா பிதா ।
நேஷ்யதே தத்ப்ரகாரம் தே வக்ஷ்யாமி ச்ருணு ஸாதரம் ॥

प्रपञ्चस्य - பிரபஞ்சத்தின், अपवादेन - அபவாதத்தால், विजातीयकृता-விஜாதீயம் மூலமாக ஏற்பட்ட, भिदा- வேற்றுமை, नेष्यते-ஒப்புக்கொள்ளப்படுகிறதில்லை. तत्प्रकारं- அதன ப்ரகாரத்தை, ते-உனக்கு, वक्ष्यामि - சொல்கிறேன் सादरं- ஆதரவுடன், शृणु-கேள்.

ஜகத்தை அபவாதம் செய்வதால் வேறு இனத்தைச் சேர்ந்த வஸ்துவின் மூலம் ஏற்படக்கூடிய பேதம் ஆத்மா விடம் ஒப்புக்கொள்ளப்படுவதில்லை. அது எப்படி என்கிற முறையை உனக்குச் சொல்கிறேன், கவனமாகக் கேள். (679)

अहेः गुणविवर्तस्य गुणमात्रत्ववत् सतः ।
विवर्तस्यास्य जगतः सन्मात्रत्वेन दर्शनम् ।
अपवाद इति प्राहुः अद्वैतब्रह्मदर्शिनः ॥ ६८० ॥

*அஹேர் குணவிவர்த்தஸ்ய குணமாத்ரத்வவத் ஸத: ।*
*விவர்த்தஸ்யாஸ்ய ஜகத: ஸந்மாத்ரத்வேந தர்சநம் ।*
*அபவாத இதி ப்ராஹுரத்வைத ப்ரஹ்மதர்சிந: ॥*

गुणविवर्तस्य-கயிற்றின் விவர்த்தமான, अहेः-பாம்பிற்கு, गुणमात्रत्ववत्-கயிறாகவே இருக்கும் தன்மைபோல, सतः-ஸத்ரூபமான ப்ரஹ்மத்தின், विवर्तस्य-விவர்த்தமான (தோற்றமான), अस्य जगतः-இந்த பிரபஞ்சத்தை, सन्मात्रत्वेन ஸத்தான ப்ரஹ்மமாகவே, दर्शनं-அறிவது, अपवादः-அபவாதம், इति-என்று, अद्वैतब्रह्मदर्शिनः - இரண்டற்ற ப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்தாக அறிந்தவர்கள், प्राहुः-சொல்கிறார்கள்.

கயிற்றின் விவர்த்தமான (வெறும் தோற்றமான) ஸர்பத்திற்கு கயிறு மாத்திரமாயிருக்கும் தன்மைபோல ஸத் (வாஸ்தவமாயிருக்கிற பிரஹ்மத்) தின் விவர்த்தமான (வெறும் தோற்றமான) இந்த ஜகத்திற்கு ஸத் (பிரஹ்ம) மாத்திரமாயிருக்கும் தன்மைதான் என்று அறிவது அபவாதம் என்று இரண்டற்ற பிரஹ்மத்தை அறிந்தவர்கள் சொல்கிறார்கள். (680)

(அ) இதை எப்படி அறிகிறதென்றால், முன்னால் அத்யாரோபம் என்ற ரீதியில் சுத்த சைதன்யத்திலிருந்து படிப்படியாக ஸ்தூல சரீரம் வரை ஸ்ருஷ்டி சொல்லப்பட்டது. அதற்கு நேர்மாறுயுள்ள ரீதியில் ஸ்தூல சரீரத்தில் ஆரம்பித்து படிப்படியாக ஒவ்வொன்றின் தத்வத்தை விசாரித்தால் எல்லாம் அந்த சைதன்யத்தைத் தவிர வேறில்லை என்பது தெரியும் என்கிறார்:-

व्युत्क्रमेण तदुत्पत्तेः द्रष्टव्यं सूक्ष्मबुद्धिभिः ।
प्रतीतस्यास्य जगतः सन्मात्रत्वं सुयुक्तिभिः ॥ ६८१ ॥

வ்யுத்க்ரமேண ததுத்பத்தேர் த்ரஷ்டவ்யம் ஸூக்ஷ்ம
புத்திபி: ।
ப்ரதீதஸ்யாஸ்ய ஜகத: ஸன்மாத்ரத்வம் ஸுயுக்திபி: ॥

सूक्ष्मबुद्धिभिः-ஸூக்ஷ்மமான புத்தி உடையவர்களால் सुयुक्तिभिः-நல்லயுக்திகளால், तदुत्पत्तेः-அந்த ஜகத்தின் ஸிருஷ்டியைக்காட்டிலும், व्युत्क्रमेण-நேர் எதிரிடையான க்ரமமாக, प्रतीतस्य-தோன்றுகின்ற, अस्य जगतः -இந்த பிரபஞ்சத்தின், सन्मात्रत्वं-ஸத் ஸ்வரூபமாகவே இருக்கும் தன்மை ,द्रष्टव्यम्-காணத்தக்கது.

அந்த ஜகத்தின் உத்பத்தி எந்த கிரமத்தில் ஏற்பட்டதோ, அதற்கு நேர் விபரீதமான கிரமத்தில் ஸூக்ஷ்மமான புத்தியுள்ளவர்களால் நல்ல யுக்திகளைக்கொண்டு தோன்றிக் கொண்டிருக்கும் இந்த ஜகத் ஸத்(பிரஹ்ம சைதன்யம்) மாத்திரம்தான் என்று பார்க்கப்படவேண்டும். (681)

(அ) அந்த விபரீத கிரமத்தையும் மேலால் படிப்படியாக எடுத்துக்காட்டுகிறார் :—

चतुर्विधं स्थूलशरीरजातं तद्भोज्यं अन्नादि तदाश्रयादि ।
ब्रह्माण्डमेतत् सकलं स्थविष्ठं ईक्षेत पञ्चीकृतभूतमात्रम् ॥

சதுர்விதம் ஸ்தூலசரீரஜாதம்
தத்போஜ்யமந்நாதி ததாச்ரயாதி ।
ப்ரஹ்மாண்டமேதத் ஸகலம் ஸ்தவிஷ்டம்
ஈக்ஷேத பஞ்சீக்ருதபூதமாத்ரம் ॥

चतुर्विधं-நான்குவிதமான, स्थूलशरीरजातं-ஸ்தூலசரீர ஸமூஹம், तद्भोज्यं-அவைகளுக்கு உணவான, अन्नादि-அந்நம் முதலியவை, तदाश्रयादि-அவைகளின் இருப்பிடம் முதலியவை ஆகிய, स्थविष्ठं-மிகஸ்தூலமான, एतत् ब्रह्माण्डं

सकलं-இந்த ப்ரஹ்மாண்டம் எல்லாம், पञ्चीकृतभूतमात्रं-பஞ்சீ கரணம் செய்யப்பட்ட பூதங்களாகவே, ईक्षेत-பார்க்க வேண்டும்.

ஜராயுஜம், அண்டஜம், ஸ்வேதஜம், உத்பிஜ்ஜம் என்கிற நான்குவிதமான ஸ்தூல சரீரங்கள் எல்லாம், அவைகளுக்கு ஆஹாரமாயுள்ள அன்னம் முதலானது, இவைகளுக்கு இருப்பிடமான உலகங்கள் அடங்கிய இந்த பிரஹ்மாண்டம் ஆகிய மிக ஸ்தூலமான எல்லாவற்றையும் அவைகளின் காரணமாகிய பஞ்சீகரணம் செய்யப்பட்ட பூதங்களாகவே பார்க்கவேண்டும். (பஞ்சீகரணத்தைப்பற்றி 398–400 சுலோகங்களில் விவரிக்கப்பட்டுள்ளது) (682)

यत्कार्यरूपेण यदीक्ष्यते तत् तन्मात्रमेवात्र विचार्यमाणे ।
मृत्कार्यभूतं कलशादि सम्यक् विचारितं सत् न मृदो विभिद्यते ॥

*யத்கார்யரூபேண யதீக்ஷ்யதே தத்*
*தன்மாத்ரமேவாத்ர விசார்யமாணே ।*
*ம்ருத்கார்யபூதம் கலசாதி ஸம்யக்*
*விசாரிதம் ஸத் ந ம்ருதோ விபித்யதே ॥*

अत्र-இந்த பிரபஞ்சத்தில், यत्-எது, यत्कार्यरूपेण-எதனுடைய கார்ய ஸ்வரூபமாக, ईक्ष्यते பார்க்கப்படுகிறதோ तत्-அது, विचार्यमाणे-ஆராய்ந்து பார்க்கப்படும் பொழுது, तन्मात्रमेव-அந்தக் காரண ஸ்வரூபம் தான், मृत्कार्यभूतं-மண்ணின் கார்யமாக உள்ள, कलशादि-குடம் முதலியவை सम्यक्-நன்கு, विचारितं सत्-ஆராயப்பட்டதாய்க் கொண்டு, मृदः-மண்ணைக்காட்டிலும், न विभिद्यते-வேறுபடுகிறதில்லை.

எதனுடைய கார்யரூபமாக எது பார்க்கப்படுகிறதோ, அது நன்கு விசாரித்துப் பார்த்தால் அதுவேதான். மண்ணின் கார்யமாயிருக்கும் குடம் முதலியது நன்கு விசாரிக்கப்பட்டால் மண்ணிலிருந்து வேறு ஆகாது. (683)

अन्तर्बहिश्चापि मृदेव दृश्यते मृदो न भिन्नं कलशादि किंचन ।
ग्रीवादिमत् यत् कलशं तदित्थं न वाच्यं एतच्च मृदेव नान्यत् ॥

அந்தர் பஹிஸ்சாபி ம்ருதேவ த்ருச்யதே
ம்ருதோ ந பிந்நம் கலசாதி கிஞ்சந ।
க்ரீவாதிமத் யத் கலசம் ததித்தம்
ந வாச்யமேதச்ச ம்ருதேவ நாந்யத் ॥

अन्तः-உள்ளும், बहिश्चापि-வெளியிலும், मृदेव-மண் தான் दृश्यते-காணப்படுகிறது, कलशादि किंचन-குடம் முதலானவை ஒன்றும், मृदः-மண்ணைக்காட்டிலும், भिन्नं-வேறானதாக न-இல்லை. यत्-எது, ग्रीवादिमत्-கழுத்து முதலியவைகளுடன் கூடியதோ, तत्-அது, कलशं-குடம், इत्थं-இவ்வாறு, न वाच्यं-சொல்லக் கூடாது. एतच्च-இதுவும், मृदेव-மண் தான், नान्यत्-வேறு அல்ல.

உள்ளேயும் வெளியிலும் மண்தான் தெரிகிறது. குடம் முதலியது ஒன்றும் மண்ணைத்தவிர வேறானதாக இல்லை. "கழுத்து முதலானதுடன் கூடியது எதுவோ அது குடம்" என்று சொல்லக்கூடாது. அதுவும் மண்தான் வேறு இல்லை.

स्वरूपतः तत् कलशादिनाम्ना मृदेव मूढैः अभिधीयते ततः ।
नाम्नो हि भेदो न तु वस्तुभेदः प्रदृश्यते तत्र विचार्यमाणे ॥६८५॥

ஸ்வருபதஸ் தத் கலசாதி நாம்நா
ம்ருதேவ மூடைரபிதீயதே தத: ।
நாம்நோ ஹி பேதோ நது வஸ்துபேத:
ப்ரத்ருச்யதே தத்ர விசார்யமாணே ॥

स्वरूपतः-ஸ்வருபத்தில், तत्-அந்த, मृदेव-மண் தான் मूढैः-மூடர்களால், कलशादिनाम्ना-கலசம் முதலான பெயரால், अभिधीयते-சொல்லப்படுகிறது, ततः-ஆகையால், नाम्नो हि भेदः-பெயருக்குத்தான் வித்யாஸம், विचार्यमाणे-விசாரிக்கப்படும் பொழுது, तत्र-அங்கு, वस्तुभेदः-வஸ்துவின் பேதம், न तु प्रदृश्यते-காணப்படுகிறதில்லை.

வாஸ்தவ ஸ்வருபத்தில் மண்தான் குடம் முதலான பெயரினால் மூடர்களால் சொல்லப்படுகிறது. ஆகையால்

பெயரில்தான் வித்யாஸம், அங்கு விசாரிக்கையில் வஸ்துவில் பேதம் இல்லவே இல்லை. (685)

तस्माद्धि कार्यं न कदाऽपि भिन्नं स्वकारणात् अस्ति यतस्ततोऽङ्ग ।
यत् भौतिकं सर्वमिदं तथैव तद्भूतमात्रं न ततो विभिन्नम् ॥ ६८६ ॥

தஸ்மாத்தி கார்யம் ந கதாபி பிந்நம்
ஸ்வகாரணாதஸ்தி யதஸ் ததோऽங்க ।
யத் பௌதிகம் ஸர்வமிதம் ததைவ
தத் பூதமாத்ரம் ந ததோऽபி பிந்நம் ॥

तस्मात्-ஆகையால், कार्यं-காரியமானது, स्वकारणात्-தன் காரணத்திலிருந்து, कदापि-ஒரு போதும், भिन्नं-வேறுபட்டதாக, नास्ति-இல்லை என்பது, यतः-எதனாலோ, ततः-ஆகையால், अङ्ग-அப்பா! यत् भौतिकं-எது பூதங்களிலிருந்து உண்டானதோ, इदं सर्वं-இது எல்லாம், तथैव-அப்படியே, तद्भूतमात्रं-அந்த பூதமேதான், ततः-அதைக் காட்டிலும், विभिन्नं-வேறுபட்டதாக न-இல்லை.

ஆகையால் காரியமானது தன்னுடைய காரணத்திற்கு வேறாக எப்பொழுதும் இல்லையென்பதினால் இது எல்லாம் பூதங்களிலிருந்து ஏற்பட்டிருப்பதினால் அப்படியே பூதங்களே தான். பூதங்களிலிருந்து வேறுபட்டதல்ல. (686)

तच्चापि पञ्चीकृतभूतजातं शब्दादिभिः स्वस्वगुणैश्च सार्धम् ।
वपूंषि सूक्ष्माणि च सर्वमेतत् भवत्यपञ्चीकृतभूतमात्रम् ॥ ६८७ ॥

தச்சாபி பஞ்சீக்ருத பூதஜாதம்
சப்தாதிபி: ஸ்வஸ்வகுணைஸ்ச ஸார்த்தம் ।
வபூம்ஷி ஸூக்ஷ்மாணி ச ஸர்வமேதத்
பவத்யபஞ்சீக்ருத பூதமாத்ரம் ॥

शब्दादिभिः-சப்தம் முதலான, स्वस्वगुणैश्च सार्धं-தன் தன் குணங்களுடன் கூட, तच्चापि पञ्चीकृतभूतजातं-அந்த எல்லா பஞ்சீக்ருத பூதங்களும், सूक्ष्माणि वपूंषि च-ஸூக்ஷ்ம சரீரங்

களும், सर्वं एतत्-இது எல்லாம், अपञ्चीकृतभूतमात्रं பஞ்சீ கரணம் ஆகாத பூதமாகவே, भवति-இருக்கிறது.

தன் தன் குணங்களாகிய சப்தம் முதலியவைகளுடன்கூட, அந்த பஞ்சீக்ருதமான பூதங்கள் எல்லாமும், ஸூக்ஷ்ம சரீரங் களும், இது எல்லாம் பஞ்சீகரணமாகாத பூதங்கள்தான் ஆகும். (687)

तदप्यपञ्चीकृतभूतजातं रजस्तमःसत्त्वगुणैश्च सार्धम् ।
अव्यक्तमात्रं भवति स्वरूपतः साभासं अव्यक्तं इदं स्वयं च ॥६८८॥

आधारभूतं यदखण्डं आद्यं शुद्धं परं ब्रह्म सदैकरूपम् ।
सन्मात्रमेवास्ति अथ नो विकल्पः सतः परं केवलमेव वस्तु ॥६८९॥

ததப்யபஞ்சீக்ருத பூதஜாதம்
ரஜஸ் தமஸ் ஸத்வகுணைஸ்ச ஸார்த்தம் ।
அவ்யக்த மாத்ரம் பவதி ஸ்வரூபத:
ஸாபாஸமவ்யக்தமிதம் ஸ்வயம் ச ॥

ஆதாரபூதம் யதகண்டமாத்யம்
சுத்தம் பரம் ப்ரஹ்ம ஸதைகரூபம் ।
ஸந்மாத்ரமேவாஸத்யத நோ விகல்ப:
ஸத: பரம் கேவலமேவ வஸ்து ॥

तत्-அந்த, अपञ्चीकृतभूतजातमपि - பஞ்சீகரணமாகாத எல்லா பூதமும், रजस्तमस्सत्वगुणैश्च सार्धं-ரஜஸ், தமஸ், ஸத்வம் என்ற குணங்களோடு கூட, स्वरूपतः-ஸ்வரூபத்தில், अव्यक्तमात्रं भवति-அவ்யக்தமாகவே ஆகிறது, साभासं-சைதன்ய ப்ரதிபிம்பத்துடன் கூடிய, इदं-இந்த, अव्यक्तं च-அவ்யக்தமும், स्वयं-தான், आधारभूतं-ஆதாரமாக உள்ள தாயும், अखण्डं-பிரிவு இல்லாததாயும, आद्यं-முதன்மையான தாயும், शुद्धं-தோஷமற்றதாயும், सदा एकरूपं-எப்பொழுதும் ஒரே ஸ்வரூபமாக இருப்பதாயும், सन्मात्रं-ஸத்தாகவே இருக்கிறதாயுமுள்ளது, यत्-எதுவோ (அந்த) परं ब्रह्मैव-

பரப்ரஹ்மமாகவே, अस्ति-இருக்கிறது. अथ-பிறகு, सतः परं-ஸத்வஸ்துவுக்கு மேல், नो विकल्पः-வேற்றுமை இல்லை, केवलं-एव वस्तु-(அது) தனித்தே இருக்கும் வஸ்து.

அந்த அபஞ்சீக்ருத பூதங்கள் எல்லாம், ரஜஸ் தமஸ் ஸத்வ குணங்களோடு சேர்ந்து ஸ்வரூபத்தில் அவ்யக்த மாத்திரம்தான் ஆகும். இந்த அவ்யக்தமும் தானும் தன்னிடம் பிரதிபிம்பித்திருக்கிற சைதன்யத் தோற்றமுள்பட, இவைகளுக்கெல்லாம் ஆதாரமாயும் பரிபூர்ணமாயும் எல்லா வற்றிற்கும் முதலாயும் சுத்தமாயும் மேலானதாயும் எப்பொழுதும் ஒரே ஸ்வரூபத்துடன் (மாறுதலடையாமல்) இருப்பதாயும் ஸத் (இருப்பு) மாத்திரமாயுள்ள பிரஹ்மமாகவே இருக்கிறது. இதற்குப் பிறகு ஸத் பதார்த்தத்திற்கு மேலாக விகல்பம் செய்ய இடமில்லை. அது தனித்து வாஸ்தவமாய் இருக்கும் வஸ்து. (688–689)

एकश्चन्द्रः सद्वितीयो यथा स्यात् दृष्टेर्दोषादेव पुंसः तथैकम्।
ब्रह्मास्त्येतत् बुद्धिदोषेण नाना दोषे नष्टे भाति वस्त्वेकमेव ॥ ६९० ॥

ஏகஸ் சந்த்ர: ஸத்விதீயோ யதா ஸ்யாத்
த்ருஷ்டேர் தோஷாதேவ பும்ஸஸ் ததைகம் ।
ப்ரஹ்மாஸ்த்யேதத் புத்திதோஷேண நாநா
தோஷே நஷ்டே பாதி வஸ்த்வேகமேவ ॥

यथा-எப்படி, पुंसः-புருஷனுடைய, दृष्टेः दोषादेव-கண்ணின் தோஷத்தாலேயே, एकः चन्द्रः-ஒரு சந்திரன், सद्वितीयः-இரண்டாவது சந்திரனுடன் கூடியவனாக, स्यात्-ஆவானோ, तथा-அப்படி, एतत्-இந்த, एकं ब्रह्म-ஒரு ப்ரஹ்மம் बुद्धिदोषेण-புத்தியின் தோஷத்தால், नाना अस्ति-பலவாக இருக்கிறது, दोषे नष्टे-தோஷம் நீங்கியவுடன், वस्तु-வஸ்து, एकमेव-ஒன்றாகவே, भाति-விளங்குகிறது.

ஒன்றாகவே இருக்கிற சந்திரன் புருஷனுடைய கண்ணின் தோஷத்தினாலேதான் எப்படி இரண்டாவது சந்திரனுடன் இருப்பதுபோல் தோன்றுகிறதோ, அப்படியேதான் ஒன்றாக

இருக்கும் இந்த பிரஹ்மம் புத்தியின் தோஷத்தினால் பலவாகத் தோன்றுகிறது. தோஷம் நிவிருத்தியாகிவிட்டால், ஒரே வஸ்துதான் பிரகாசிக்கும். (690)

रज्जोः स्वरूपाधिगमेन सर्पधीः रज्ज्वां विलीना तु यथा तथैव ।
ब्रह्मावगत्या तु जगत्प्रतीतिः तत्रैव लीना तु सह भ्रमेण ॥ ६९१ ॥

ரஜ்ஜோ: ஸ்வரூபாதிகமேந ஸர்பதீ:
ரஜ்ஜ்வாம் விலீநா து யதா ததைவ ।
ப்ரஹ்மாவகத்யா து ஜகத் ப்ரதீதிஸ்
தத்ரைவ லீநா து ஸஹ ப்ரமேண ॥

यथा-எப்படி, रज्जोः- கயிற்றின், स्वरूपाधिगमेन-ஸ்வரூபத்தை அறிவதால், सर्पधीः-பாம்பின் தோற்றம், रज्ज्वां-கயிற்றில், विलीना-மறைந்து விடுகிறதோ, तथैव-அப்படியே, ब्रह्मावगत्या तु-ப்ரஹ்ம ஞானத்தால், जगत्प्रतीतिः-பிரபஞ்சத் தோற்றம், भ्रमेण सह-ப்ராந்தியுடன் கூடவே, तत्रैव-அங்கேயே, लीना-மறைந்து விடுகிறது.

கயிற்றின் ஸ்வரூபத்தை தெரிந்துகொள்வதினால் ஸர்ப்பம் என்கிற எண்ணம் எப்படி கயிற்றிலேயே மறைந்துவிடுகிறதோ அப்படியே பிரஹ்மத்தை அறிவதினால் ஜகத்தின் தோற்றம் பிராந்தியுடன் கூட அந்த பிரஹ்மத்திலேயே லயமடைந்து விடும். (691)

भ्रान्त्योदितद्वैतमतिप्रशान्त्या सदेकमेवास्ति सदाऽद्वितीयम् ।
ततो विजातीयकृतोऽत्र भेदो न विद्यते ब्रह्मणि निर्विकल्पे ॥ ६९२ ॥

ப்ராந்த்யோதித த்வைதமதி ப்ரசாந்த்யா
ஸதேகமேவாஸ்தி ஸதாऽத்விதீயம் ।
ததோ விஜாதீய க்ருதோऽத்ர பேதோ
ந வித்யதே ப்ரஹ்மணி நிர்விகல்பே ॥

भ्रान्त्या-ப்ரமத்தால், उदित-உண்டான, द्वैतमति प्रशान्त्या-வேற்றுமைத் தோற்றம் அடங்கிவிடுவதால், सदा-எப்பொழு

தும், अद्वितीयं-இரண்டாவதற்றதான. सदेकमेव-ஸத் வஸ்து ஒன்றுதான், अस्ति-இருக்கிறது. ततः-ஆகையால், निर्विकल्पे-விகல்பமற்றதான, अत्र ब्रह्मणि-இந்த ப்ரஹ்மத்தில், विजातीयकृतः-வேறு இனத்தைச் சேர்ந்த வஸ்துவால் ஏற்பட்ட, भेदः-வேற்றுமை, न विद्यते-இல்லை.

பிராந்தியினால் உண்டான வேற்றுமை எண்ணம் நன்கு அடங்கிவிடுவதால் ஸத் பதார்த்தம் ஒன்றுதான் எப்பொழுதும் இரண்டாவதற்றதாக இருக்கும். ஆகையால் விகல்பத்திற்கு இடமில்லாத இந்த பிரஹ்மத்தினிடத்தில் விஜாதீய பதார்த்தத்தினால் ஏற்படும் பேதம் கிடையாது. (692)

यदाऽस्त्युपाधिः तदभिन्न आत्मा तदा सजातीय इवावभाति ।
स्वप्नार्थवत् तस्य मृषात्मकत्वात् तदप्रतीतौ स्वयमेष आत्मा ।
ब्रह्मैकतामेति पृथक् न भाति ततः सजातीयकृतो न भेदः ॥ ६९३ ॥

யதாஸ்த்யுபாதிஸ் ததபின்ந ஆத்மா
 ததா ஸஜாதீய இவாவபாதி ।
ஸ்வப்நார்த்தவத் தஸ்ய ம்ருஷாத்மகத்வாத்
 ததப்ரதீதௌ ஸ்வயமேஷ ஆத்மா ॥
ப்ரஹ்மைகதாமேதி ப்ருதக் ந பாதி
 ததஃ ஸஜாதீய க்ருதோ ந பேதஃ ॥

यदा-எப்பொழுது, उपाधिः-உபாதி, अस्ति-இருக்கிறதோ, तदा-அப்பொழுது, तदभिन्न आत्मा-அதனுடன் ஒன்றாகக் கலந்துள்ள ஆத்மா, सजातीय इव-ஸஜாதீயம்போல, अवभाति-தோன்றுகிறது, स्वप्नार्थवत्-ஸ்வப்னப் பொருள்போல, तस्य मृषात्मकत्वात्-அது பொய்யான ஸ்வரூபத்தையுடையதால், तदप्रतीतौ-அது தோன்றாதபொழுது, एष आत्मा-இந்த ஆத்மா स्वयं-தானே, 'ब्रह्मैकताम् एति-ப்ரஹ்மத்துடன் ஐக்யத்தை அடைகிறது'. पृथक्-வேறாக, न भाति-தோன்றுகிறதில்லை. ततः-ஆகையால், सजातीयकृतः-ஸஜாதீய வஸ்துவால் ஏற்பட்ட, भेदः- வேற்றுமை, न-இல்லை.

உபாதி எப்பொழுது இருக்கிறதோ அப்பொழுது உபாதியுடன் ஒன்றுகக் கலந்துள்ள ஆத்மா ஸஜாதீயம் போலத் தோன்றுகிறது. அது ஸ்வப்ன பதார்த்தம்போலவே பொய்த் தன்மையுடையதால், அந்த உபாதி தெரியாமலிருக்கும்போது இந்த ஆத்மா தானுகவே பிரஹ்மத்துடன் ஐக்யத்தை அடைந்துவிடுகிறது. தனியாக பிரகாசிக்கிறதில்லை. ஆகையால் ஸஜாதீயத்தினுல் ஏற்படும் பேதமும் இல்லை (693)

घटाभावे घटाकाशो महाकाशो यथा तथा ।
उपाध्यभावे त्वात्मैष स्वयं ब्रह्मैव केवलम् ॥ ६९४ ॥

கடாபாவே கடாகாசோ மஹாகாசோ யதா ததா ।
உபாத்யபாவே த்வாத்மைஷ ஸ்வயம் ப்ரஹ்மைவ
கேவலம் ॥

यथा-எப்படி, घटाभावे குடமில்லாதுபோனுல், घटाकाशः-கடாகாசம், महाकाशः-மஹாகாசமாக ஆகிறதோ, तथा-அப்படியே, उपाध्यभावे तु-உபாதி இலலாவிட்டால், एष आत्मा-இந்த ஆத்மா, स्वयं-தான், ब्रह्मैव केवलं-தனியாக உள்ள ப்ரஹ்மமாகவே இருக்கும்.

குடம் இல்லாமல் போனுல் குடத்தில் உள்ள ஆகாசம் எப்படி மஹாகாசமாகவே இருக்கிறதோ அப்படியே உபாதியில்லாமல் போனுல் இந்த ஆத்மாதானே தனித்த பிரஹ்மமாகவே இருக்கும். (694)

पूर्ण एव सदाऽऽकाशो घटे सत्यप्यसत्यपि ।
नित्यपूर्णस्य नभसो विच्छेदः केन सिध्यति ॥ ६९५ ॥

பூர்ண ஏவ ஸதாऽऽகாசோ கடே ஸத்யப்யஸத்யபி ।
நித்யபூர்ணஸ்ய நபஸோ விச்சேத: கேந ஸித்யதி ॥

घटे सत्यपि-குடம் இருந்தாலும், असत्यपि-இல்லாவிட்டாலும், आकाशः-ஆகாசம், सदा-எப்பொழுதும், पूर्ण एव-எங்கும் நிறைந்ததாகவே இருக்கிறது, नित्यपूर्णस्य-எப்பொழுதும் நிறைந்துள்ள. नभसः-ஆகாசத்திற்கு, केन-எதனுல், विच्छेदः-பிரிவு, सिध्यति-ஏற்படும் ?

குடம் இருந்தாலும் இல்லாமல் போனாலும் ஆகாசம் எப்பொழுதும் நிறைந்ததாகவே இருக்கிறது எப்பொழுதும் நிறைந்ததாயிருக்கிற ஆகாசத்திற்கு எதைக்கொண்டு பிளவு ஏற்படும்? (695)

अच्छिन्नः छिन्नवत् भाति पामराणां घटादिना ।
ग्रामक्षेत्राद्यवधिभिः भिन्नेव वसुधा यथा ॥ ६९६ ॥

*அச்சிந்நஸ் சிந்நவத் பாதி பாமராணாம் கடாதிநா ।*
*க்ராம க்ஷேத்ராத்யவதிபிர் பிந்நேவ வஸுதா யதா ॥*

**यथा**-எப்படி, **वसुधा**-பூமி, **ग्रामक्षेत्राद्यवधिभिः**-கிராமம், வயல் முதலான எல்லைகளால், **भिन्नेव**-வேறுபட்டதுபோல் காண்கிறதோ (அப்படியே), **अच्छिन्नः**-பிரிவுபடாத ஆகாசம் **पामराणां**-பாமரர்களுக்கு, **घटादिना**-குடம் முதலியவற்றால், **छिन्नवत्**-பிரிந்ததுபோல், **भाति**-தோன்றுகிறது.

கிராமம், வயல் முதலான வரம்புகளினால் பூமி எப்படி பிரிக்கப்பட்டதுபோல் தோன்றுகிறதோ, அப்படியே ஆகாசம், குடம் முதலானதுகளால் பிரிக்கப்பட்டதுபோல் பாமர ஜனங்களுக்குத் தோன்றுகிறது. (696)

तथैव परमं ब्रह्म महतां च महत्तमम् ।
परिच्छिन्नमिवाभाति भ्रान्त्या कल्पितवस्तुना ।

*ததைவ பரமம் ப்ரஹ்ம மஹதாம் ச மஹத்தமம் ।*
*பரிச்சிந்நமிவாபாதி ப்ராந்த்யா கல்பித வஸ்துநா ।*

**तथैव**-அப்படியே. **महतां** பெரியவைகளுக்கும், **महत्तमं**-மிகப்பெரியதான, **परमं ब्रह्म**-பரப்ரஹ்மம், **भ्रान्त्या**-ப்ரமத்தால், **कल्पितवस्तुना**-கல்பிக்கப்பட்ட வஸ்துவினால், **परिच्छिन्नमिव**-எல்லைக்குட்பட்டதுபோல், **आभाति**-தோன்றுகிறது.

அப்படியேதான் எல்லாவற்றிற்கும் மேலாய் பெரிதுகளுக்கெல்லாம் மிகப் பெரிதாயுள்ள பிரஹ்மம் பிராந்தியினால் கல்பிக்கப்பட்ட வஸ்துவினால் வரம்பிற்கு உட்பட்டதுபோல் தோன்றுகிறது.

तस्मात् ब्रह्मात्मनोः भेदः कल्पितो न तु वास्तवः ॥ ६९७ ॥

*தஸ்மாத் ப்ரஹ்மாத்மனோர் பேத: கல்பிதோ நது வாஸ்தவ: ॥*

**तस्मात्**-ஆகையால், **ब्रह्मात्मनोः**-ப்ரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும், **भेदः**-வேற்றுமை, **कल्पितः**-கல்பிக்கப்பட்டது, **न तु वास्तवः**-உண்மையானதல்ல.

ஆகையினால் பிரஹ்மத்திற்கும் பிரத்யக் ஆத்மாவிற்கும் உள்ள பேதம் கல்பிதமே தவிர வாஸ்தவமில்லை. (697)

अत एव मुहुः श्रुत्याऽप्येकत्वं प्रतिपाद्यते ।
ब्रह्मात्मनोः तत्त्वं असि इत्यद्वयत्वोपपत्तये ॥ ६९८ ॥

*அத ஏவ முஹு: ச்ருத்யாப்யேகத்வம் ப்ரதிபாத்யதே ।*
*ப்ரஹ்மாத்மனோஸ் தத்த்வமஸீத்யத்வயத்வோபபத்தயே ॥*

**अत एव**-ஆகையால்தான், **श्रुत्यापि**-உபநிஷத்தாலும், **अद्वयत्वोपपत्तये**-அத்வைதம் பொருந்துவதற்காக, **मुहुः**-திருப்பித்திருப்பி, **तत् त्वं असि**-தத்த்வம் அஸி(நீ அதுவாக இருக்கிறாய்), **इति**-என்று **ब्रह्मात्मनोः**-ப்ரஹ்மத்திற்கும்ஆத்மாவிற்கும், **एकत्वं**-ஒன்றாயிருக்கும் தன்மை, **प्रतिपाद्यते**-விளக்கப்படுகிறது.

அதனால்தான் வேதத்தினாலும், அத்வைதம் பொருந்துவதற்காக "தத்த்வம் அஸி" என்று திருப்பித்திருப்பி பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் ஒன்றாயிருக்கும் தன்மை விளக்கப்படுகிறது. (698)

प्रत्यक्षादिविरोधेन वाच्ययोः नोपपद्यते ।
तत्त्वंपदार्थयोः ऐक्यं लक्ष्ययोरेव सिध्यति ॥ ६९९ ॥

*ப்ரத்யக்ஷாதி விரோதேந வாச்யயோர் நோபபத்யதே ।*
*தத்த்வம்பதார்த்தயோரைக்யம் லக்ஷ்யயோரேவ ஸித்யதி ॥*

प्रत्यक्षादिविरोधेन-பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களுக்கு விரோதம் ஏற்படுவதால், वाच्ययोः-வாச்யங்களான, तत्त्वंपदार्थयोः-தத்த்வம் இந்த இரு பதங்களின் பொருள்களுக்கு, ऐक्यं-அபேதம், नोपपद्यते-பொருந்துவதில்லை, लक्ष्ययोरेव-லக்ஷ்யங்களான அர்த்தங்களுக்குத்தான், सिध्यति-ஸித்திக்கிறது.

தத், த்வம், இந்த இருபதங்களுக்கும் சக்தியால் கிடைக்கக்கூடிய வாச்யமான இரு அர்த்தங்களுக்கும் ஐக்யம் பொருந்தாது. ஏனெனில் இது ப்ரத்யக்ஷம் முதலான பிரமாணங்களுக்கு விருத்தம். ஆகையால் லக்ஷணையால் கிடைக்கக்கூடிய இரு பதங்களின் லக்ஷ்யார்த்தங்களுக்கும் ஐக்யம் சொல்லப்படுகிறது. ப்ரத்யக்ஷாதி விரோதமில்லாததால் இது பொருந்துகிறது. (699)

शिष्यः —

स्यात् तत्त्वंपदयोः स्वामिन् अर्थः कतिविधो मतः ।
पदयोः को नु वाच्यार्थो लक्ष्यार्थ उभयोश्च कः ॥ ७०० ॥

*ஸிஷ்ய :—*

*ஸ்யாத் தத்த்வம் பதயோ: ஸ்வாமிந்நர்த்த:*
*கதிவிதோ மத:*
*பதயோ: கோநு வாச்யார்த்தோ லக்ஷ்யார்த்த*
*உபயோஸ்ச க: ||*

स्वामिन् -ஸ்வாமியே, तत्त्वं पदयोः-தத் த்வம் பதங்களுக்கு कतिविधः-எத்தனைவிதமான, अर्थः-பொருள், मतः स्यात्-ஒப்புக்கொள்ளப்பட்டதாகும், उभयोः पदयोश्च-இரண்டு பதங்களுக்கும், को नु वाच्यार्थः-எது வாச்யமான பொருள்? लक्ष्यार्थः-லக்ஷ்யமான பொருள், कः-எது?

ஹே ஸ்வாமின், தத் த்வம் என்கிற இரண்டு பதங்களுக்கு எத்தனைவிதமான பொருள் ஒப்புக்கொள்ளப்படுகிறது? அப்பதங்களுக்கு வாச்யார்த்தம் (நேராக சொல்லப்படும் பொருள்) என்ன? அவ்விரண்டிற்கும் லக்ஷ்யார்த்தம் (குறிக்கப்படும் பொருள்) என்ன? (700)

वाच्यैकत्वविवक्षायां विरोधः कः प्रतीयते ।
लक्ष्यार्थयोः अभिन्नत्वे स कथं विनिवर्तते ॥ ७०१ ॥

வாச்யைகத்வ விவக்ஷாயாம் விரோத: க: ப்ரதீயதே ।
லக்ஷ்யார்த்தயோரபிந்நத்வே ஸ கதம் விநிவர்த்ததே ॥

वाच्यैकत्वविवक्षायां-வாச்யமான அர்த்தங்களுக்கு அபேதம் சொல்ல நினைத்தால், को विरोधः-என்ன விரோதம் प्रतीयते-தோன்றுகிறது? लक्ष्यार्थयोः-லக்ஷ்யமான அர்த்தங்களுக்கு, अभिन्नत्वे-ஐக்யத்தில், सः-அந்த விரோதம், कथं विनिवर्तते-எப்படி நீங்குகிறது?

வாச்யார்த்தங்களுக்குள் ஒன்றாயிருக்கும் தன்மை உண்டென்று சொல்ல நினைத்தால், என்ன விரோதம் தெரிகிறது? லக்ஷ்யார்த்தங்களுக்குள் வேற்றுமையில்லாத் தன்மையென்றால் அந்த விரோதம் எப்படி நிவிருத்தியாகிறது?

एकत्वकथने का वा लक्षणाऽत्रोररीकृता ।
एतत् सर्वं करुणया सम्यक् त्वं प्रतिपादय ॥ ७०२ ॥

ஏகத்வ கதநே கா வா லக்ஷணாத்ரோரரீக்ருதா ।
ஏதத் ஸர்வம் கருணயா ஸம்யக் தவம் ப்ரதிபாதய ॥

एकत्वकथने-அபேதம் சொல்வதில், अत्र-இங்கு, का वा लक्षणा-எந்த லக்ஷணை, उररीकृता-ஒப்புக்கொள்ளப்பட்டது, एतत् सर्वं-இது எல்லாவற்றையும், करुणया-தயவினால், त्वं-நீங்கள், सम्यक्-நன்றாக, प्रतिपादय-விளக்கிக் கூறவேணும்.

(லக்ஷ்யார்த்தங்களுக்குள்) ஒன்றாயிருக்கும் தன்மையை சொல்லும் விஷயத்தில எந்த்விதமான லக்ஷணை இங்கு அங்கிகரிக்கப்படுகிறது? இது எல்லாவற்றையும் கருணையுடன் தாங்கள் நன்றாக எடுத்துச்சொல்லவேண்டும். (702)

श्रीगुरुः —

शृणुष्वावहितो विद्वन् अद्य ते फलितं तपः ।
वाक्यार्थश्रुतिमात्रेण सम्यग्ज्ञानं भविष्यति ॥ ७०३ ॥

ஸ்ரீ குரு:—

ச்ருணுஷ்வாவஹிதோ வித்வன்னத்ய தே பலிதம் தப: ।
வாக்யார்த்த ச்ருதிமாத்ரேண ஸம்யக் ஞானம் பவிஷ்யதி ॥

विद्वन् -அறிவுள்ளவனே, अवहितः-கவனமுள்ளவனாக, शृणुष्व-கேள். अद्य-இப்பொழுது, ते तपः-உனது தவம், फलितं-பலித்துவிட்டது, वाक्यार्थश्रुतिमात्रेण - வாக்யத்தின் அர்த்தத்தை கேட்டமாத்திரத்திலேயே, सम्यग्ज्ञानं-நல்ல ஞானம், भविष्यति-ஏற்படும்.

ஹே வித்வன், கவனமாகக் கேள். இப்பொழுது உன்னுடைய தபஸ் எல்லாம் ஸபலமாய்விட்டது. மஹாவாக்யத்தின் அர்த்தத்தைக் கேட்பதினாலேயே நல்ல ஞானம் (ஜீவ ப்ரஹ்மைக்ய ஞானம்) ஏற்பட்டுவிடும். (703)

यावन्न तत्त्वंपदयोरर्थः सम्यक् विचार्यते ।
तावदेव नृणां बन्धो मृत्युसंसारलक्षणः ॥ ७०४ ॥

யாவத் ந தத்த்வம்பதயோரர்த்த: ஸம்யக் விசார்யதே ।
தாவதேவ ந்ருணாம் பந்தோ ம்ருத்யு ஸம்ஸார லக்ஷண: ॥

यावत् -எதுவரை, तत्त्वंपदयोः-தத், த்வம் இந்த இரு பதங்களின், अर्थः-பொருள், सम्यक्-நன்றாக, न विचार्यते-விசாரிக்கப்படவில்லையோ, तावदेव-அதுவரைதான், नृणां-மனிதர்களுக்கு, मृत्युसंसार लक्षणः-மரணஜன்மரூபமான, बन्धः-பந்தம் இருக்கும்.

தத், த்வம் என்ற இரு பதங்களுடைய அர்த்தம் எதுவரை நன்கு விசாரிக்கப்படவில்லையோ, அதுவரைதான் மனிதர்களுக்கு மரணம் ஸம்ஸாரம் இவைகளை லக்ஷணமாயுடைய பந்தம் (கட்டு) இருக்கும். (704)

अवस्था सच्चिदानन्दाखण्डैकरसरूपिणी ।
मोक्षः सिध्यति वाक्यार्थापरोक्षज्ञानतः सताम् ॥ ७०५ ॥

அவஸ்த்தா ஸச்சிதாநந்தாகண்டைக ரஸரூபிணீ ।
மோக்ஷ: ஸித்யதி வாக்யார்த்தாபரோக்ஷ ஞாநத: ஸதாம் ॥

सतां-ஸாதுக்களுக்கு, वाक्यार्थापरोक्षज्ञानतः-வாக்யார்த்தத்தை நேரில் தெரிந்துகொள்வதால், सच्चिदानन्दाखण्डैकरसरूपिणी-ஸச்சித்தாநந்த பரிபூர்ணரஸம் ஒன்றையே ஸ்வரூபமாக உடைய अवस्था-நிலையாகிற, मोक्षः-மோக்ஷம், सिध्यति-ஸித்திக்கிறது.

ஸத்தாய், சித்தாய், ஆனந்தமாய், பரிபூர்ண ரஸஸ்வரூபமாகவே இருக்கும் நிலைதான் மோக்ஷம். இது தத்த்வமஸி மஹாவாக்யத்தினுடைய அர்த்தத்தை நேராக அனுபவித்து அறிவதினால் ஸாதுக்களுக்கு ஏற்படுகிறது. (705)

वाक्यार्थ एव ज्ञातव्यो मुमुक्षोः भवमुक्तये ।
तस्मात् अवहितो भूत्वा शृणु वक्ष्ये समासतः ॥ ७०६ ॥

வாக்யார்த்த ஏவ ஞாதவ்யோ முமுக்ஷோர் பவமுக்தயே।
தஸ்மாதவஹிதோ பூத்வா ச்ருணு வக்ஷ்யே ஸமாஸத:॥

मुमुक्षोः-மோக்ஷம் அடைய விரும்புபவனுக்கு, भवमुक्तये-ஸம்ஸாரத்திலிருந்து விடுதலைபெறுவதற்காக, वाक्यार्थ एव-மஹாவாக்யத்தின் அர்த்தம்தான், ज्ञातव्यः-அறியத்தக்கது. तस्मात्-ஆகையால், अवहितो भूत्वा-கவனமுள்ளவனாக இருந்து शृणु-கேள். समासतः சுருக்கமாக, वक्ष्ये-சொல்கிறேன்.

முமுக்ஷுவிற்கு ஸம்ஸாரத்திலிருந்து விடுதலையடைவதற்கு வாக்யார்த்தம்தான் அறியப்படவேண்டியது. ஆகையால் கவனமாயிருந்துகொண்டு கேள். சுருக்கமாகச் சொல்கிறேன்.

अर्था बहुविधाः प्रोक्ता वाक्यानां पण्डितोत्तमैः ।
वाच्यलक्ष्यादिभेदेन प्रस्तुतं श्रूयतां त्वया ॥ ७०७ ॥

அர்த்தா பஹுவிதா: ப்ரோக்தா வாக்யாநாம்
பண்டிதோத்தமை:
வாச்ய லக்ஷ்யாதி பேதேந ப்ரஸ்துதம் ச்ரூயதாம் த்வயா ॥

पण्डितोत्तमैः-உத்தமமான பண்டிதர்களால், वाच्यलक्ष्यादिभेदेन-வாச்யம் லக்ஷ்யம் முதலான பேதத்தால், वाक्यानां अर्थाः-வாக்யங்களின் அர்த்தங்கள், बहुविधाः-பலவிதமாக, प्रोक्ताः-சொல்லப்பட்டுள்ளன. प्रस्तुतं-ப்ரக்ருதமானது, त्वया-உன்னால், श्रूयतां-கேட்கப்படட்டும்.

வாச்யம் லக்ஷ்யம் முதலிய வேறுபாட்டால் வாக்கியங்களின் அர்த்தங்கள் பலவிதமென்று, பண்டித சிரேஷ்டர்களால், சொல்லப்படுகின்றன. (அவைகளில் இப்பொழுது) பிரஸ்தாவிக்கப்படுவதைக் கேள். (707)

वाक्ये तत् त्वं असि इत्यत्र विद्यते यत् पदत्रयम् ।
तत्रादौ विद्यमानस्य तत्-पदस्य निगद्यते ॥ ७०८ ॥

வாக்யே தத்த்வமஸீத்யத்ர வித்யதே யத் பதத்ரயம்।
தத்ராதௌ வித்யமாநஸ்ய தத்பதஸ்ய நிகத்யதே ॥

तत्त्वमसीत्यत्र वाक्ये-'தத்த்வமஸி' என்ற இந்த வாக்பத்தில், यत्-யாதொரு, पदत्रयं-('தத்' 'த்வம்' 'அஸி' என்ற) மூன்று பதங்கள் विद्यते-உள்ளதோ, तत्र-அவற்றில், आदौ विद्यमानस्य-முதலில் இருக்கிற, तत्पदस्य-'தத்' என்ற பதத்திற்கு, निगद्यते-(பொருள்) சொல்லப்படுகிறது.

"அதாக நீ இருக்கிருய்" என்ற வாக்கியத்தில் உள்ள மூன்று பதங்களில் முதலில் இருக்கிற "அது" என்கிற பதத்திற்குப் பொருள் சொல்லப்படுகிறது. (708)

शास्त्रार्थकोविदैः अर्थो वाच्यो लक्ष्य इति द्विधा ।
वाच्यार्थं ते प्रवक्ष्यामि पण्डितैर्य उदीरितः ॥ ७०९ ॥

சாஸ்த்ரார்த்த கோவிதைரர்த்தோ வாச்யோ லக்ஷ்ய
இதி த்விதா।
வாச்யார்த்தம் தே ப்ரவக்ஷ்யாமி பண்டிதைர் ய உதீரிதः ॥

शास्त्रार्थकोविदैः-சாஸ்திரங்களின் அர்த்தத்தை நன்கு அறிந்தவர்களால், वाच्यः-வாச்யம், लक्ष्य-லக்ஷ்யம், इति-

என்று, अर्थः- அர்த்தம், द्विधा-இரண்டுவிதமாக (சொல்லப் படுகிறது). यः-எது, पण्डितैः-பண்டிதர்களால், उदीरितः சொல்லப்பட்டதோ (அந்த), वाच्यार्थं-வாச்யமான அர்த்தத்தை, ते-உனக்கு, प्रवक्ष्यामि-சொல்லப்போகிறேன்.

சாஸ்திரங்களின் தாத்பர்யத்தை அறிந்தவர்களால் வாச்யம் என்றும் லக்ஷ்யம் என்றும் அர்த்தம் இருவிதமாகச் சொல்லப்படுகிறது. பண்டிதர்களால் சொல்லப்பட்ட வாச்யார்த்தத்தை உனக்குச் சொல்கிறேன். (709)

(அ) இவ்விதமாக விஷயத்தின் கௌரவத்தை எடுத்துச் சொல்லி, சிஷ்யனை நன்கு கவனிக்கும்படி செய்தபிறகு, குரு மூன்று சுலோகங்களால் தத் (அது) என்ற வார்த்தையினால் நேரே சொல்லப்படும் அதாவது சக்தியால் கிடைக்கும் வாச்யார்த்தம் எது என்பதை விஸ்தாரமாகச் சொல்கிறார்.—

समष्टिरूपं अज्ञानं साभासं सत्त्वबृंहितम् ।
वियदादिविराडन्तस्वकार्येण समन्वितम् ॥ ७१० ॥

चैतन्यं तदवच्छिन्नं सत्यज्ञानादिलक्षणम् ।
सर्वज्ञत्वेश्वरत्वान्तर्यामित्वादिगुणैर्युतम् ॥ ७११ ॥

जगत्स्रष्टृत्वपातृत्वसंहर्तृत्वादिधर्मकम् ।
सर्वात्मना भासमानं यत् अमेयं गुणैश्च तत् ।
अव्यक्तं अपरं ब्रह्म वाच्यार्थ इति कथ्यते ॥ ७१२ ॥

ஸமஷ்டிரூபமக்ஞானம் ஸாபாஸம் ஸத்வப்ரும்ஹிதம் ।
வியதாதி விராடந்த ஸ்வகார்யேண ஸமந்விதம் ॥

சைதன்யம் ததவச்சின்னம் ஸத்யஞானாதி லக்ஷணம் ।
ஸர்வக்ஞத்வேச்வரத்வாந்தர்யாமித்வாதி குணைர்யுதம் ॥

ஜகத் ஸ்ரஷ்ட்ருத்வ பாத்ருத்வ ஸம்ஹர்த்ருத்வாதி தர்மகம் ।
ஸர்வாத்மனா பாஸமானம் யதமேயம் குணைச்ச தத் ।
அவ்யக்தமபரம் ப்ரஹ்ம வாச்யார்த்த இதி கத்யதே ॥

साभासं-பிரதிபிம்பத்துடன் கூடியதும், सत्त्वबृंहितं-ஸத்வகுணம் மேலிட்டதும், वियदादिविराडन्तस्वकार्येण समन्वितं-ஆகாசம் முதல் விராட்வரையிலுள்ள தன் கார்யத்துடன் கூடியதுமான, समष्टिरूपं अज्ञानं-ஸமஷ்டியான அக்ஞானம் அதாவது மாயை, तदवच्छिन्नं-அந்த மாயையால் வரையறுக்கப்பட்ட, चैतन्यं-சைதன்யம் (அதாவது) सत्यज्ञानादिलक्षणं-ஸச்சிதானந்த ரூபமாயும், सर्वज्ञत्वेश्वरत्वान्तर्यामित्वादिगुणैः युतं-ஸர்வக்ஞத்வம், ஈசுவரத்வம், அந்தர்யாமித்வம் முதலான குணங்களுடன் கூடியதும், जगत्स्रष्टृत्व-ஜகத்தைப்படைக்கும் தன்மை, पातृत्व-காக்கும் தன்மை, संहर्तृत्वादिधर्मकं-அழிக்கும் தன்மை முதலானவற்றை கர்மமாக உடையதும், सर्वात्मना-எல்லோருக்கும் ஆத்மாவாக, भासमानं-விளங்குவதும், गुणैः अमेयं च-குணங்களால் அளவிடமுடியாததும், अव्यक्तं-ஸ்பஷ்டமாக புலப்படாததுமான, यत् अपरं ब्रह्म-எந்த அபர ப்ரஹ்மமுண்டோ, तत् - அது वाच्यार्थः इति-தத்பதத்தின் வாச்யமான அர்த்தம் என்று, कथ्यते-சொல்லப்படுகிறது

ஸத்வகுணம் மேலிட்டு சைதன்யத் தோற்றத்துடன் கூடியதும் ஆகாசம் முதல் விராட் பர்யந்தமான தன் கார்யங்களோடு கூடியதுமான ஸமஷ்டி அக்ஞானத்தால் அதாவது மாயையால் வரையறுக்கப்பட்ட சைதன்யம் அதாவது ஸச்சிதானந்த ரூபமாயும் எல்லாவற்றையும் அறிகிறதாயும் ஈசுவரனாயும் எல்லாவற்றிலும் உள்ளிருந்து நியமனம் செய்கிறதாயும் உலகை ஆக்கிக் காத்து அழிக்கிறதாயும் எல்லாருக்கும் ஆத்மாவாக விளங்குவதாயும் அளவற்ற குணங்களுடன் கூடியதாயும் இந்திரியங்கள் மனம் இவற்றிற்கு புலப்படாதபடி ஸூக்ஷ்மமாயும் உள்ள அபரப்ரஹ்மசைதன்யம் அதாவது ஈசுவர ஸ்வரூபம் தத் பதத்திற்கு வாச்யார்த்தம் சக்தியால் நேரிடையாகக் கிடைக்கும் பொருள் என்று சொல்லப்படுகிறது.

[சுருக்கமாக முன் 311, 312 சுலோகங்களில் "அவ்யாக்ருதம்", "அவ்யக்தம்", "ஈச்வரன்" என்று சொல்லியிருக்கும் தத்வம்தான் வாச்யார்த்தம். சுத்த சைதன்யம் இதில் மாயையினால் வரையறுக்கப்பட்டிருப்பதினால் இதைக் கீழ்ப்பட்ட ப்ரஹ்மம் என்று சொல்லவேண்டியிருக்கிறது.

பிரஹ்மம் வாஸ்தவத்தில் மேல்பட்டது, கீழ்ப்பட்டது என்ற வித்தியாஸத்துடன் பலவகையாகக் கிடையாது. ஆனாலும் விஷயம் தெளிவுபடவேண்டியதற்காக அவ்வித வித்தியாஸம் இருப்பதுபோல் வியவஹரிக்கவேண்டியிருக்கிறது. (710-712)

(அ) இந்த வாச்சியார்த்தத்தை அப்படியே எடுத்துக் கொண்டால் வாக்கியத்தின் அர்த்தம் சரியாக வாராதென்று முன் சொன்னதற்குள்ள காரணத்தை இங்கு நன்கு தெளிவு படுத்துகிறார் :—

'नीलं उत्पलं' इत्यत्र यथा वाक्यार्थसंगतिः ।
तथा 'तत् त्वं असि' इत्यत्र नास्ति वाक्यार्थसंगतिः ॥ ७१३॥

*நீலமுத்பலமித்யத்ர யதா வாக்யார்த்த ஸங்கதி: ।*
*ததா தத்த்வமஸீத்யத்ர நாஸ்தி வாக்யார்த்த ஸங்கதி: ॥*

यथा-எப்படி, नीलं उत्पलं-நீலநிறமுள்ள ஆம்பல், इत्यत्र-என்னுமிங்கு, वाक्यार्थ संगतिः-வாக்யத்தின் அர்த்தத்திற்குப் பொருத்தம் உள்ளதோ, तथा-அப்படி, तत् त्वं असि-நீ அதுவாக இருக்கிறாய், इत्यत्र-என்னுமிங்கு, वाक्यार्थसंगतिः-வாக்யத்தின் அர்த்தத்திற்குப் பொருத்தம், नास्ति-இல்லை.

"ஆம்பல் நீலமாயிருக்கிறது" என்ற வாக்கியத்தில் எப்படி அர்த்தமானது வாச்சியார்த்தத்தை அப்படியே எடுத்துக்கொண்டால் பொருத்தமாயிருக்கின்றதோ, அவ்விதம் "நீ பிரஹ்மமாய் இருக்கிறாய்" என்ற வாக்யத்தில் அர்த்தம் பொருந்தக்கூடியதில்லை. (713)

पटात् व्यावर्तते नीलः उत्पलेन विशेषितः ।
शौक्ल्यात् व्यावर्तते नीलेन उत्पलं तु विशेषितम् ॥ ७१४ ॥

*படாத் வ்யாவர்த்ததே நீல உத்பலேன விசேஷித: ।*
*சௌக்ல்யாத் வ்யாவர்த்ததே நீலேனோத்பலம் து*
*விசேஷிதம் ॥*

उत्पलेन-உத்பலம், (ஆம்பல்) என்ற சொல்லால், विशेषितः-சுட்டிக்காட்டப்பட்ட, नीलः-நீலநிறமுள்ள வஸ்து,

पटात् -வஸ்திரத்திலிருந்து, व्यावर्तते-விலகி விடுகிறது. नीलेन-நீலம் என்ற வார்த்தையால், विशेषितं-சுட்டிக்காட்டப் பட்ட, उत्पलं तु-உத்பலமோவெனில், शौक्ल्यात् -வெண்மை யிலிருந்து, व्यावर्तते-விலகி விடுகிறது.

நீலம் (கருப்பு நிறமுள்ளது) என்று மட்டும் சொன்னால் இது கருப்பு வஸ்திரத்தையும் குறிக்கும். நீலம் என்பதுடன் உத்பலம் என்பதைச் சேர்த்துவிட்டால் வஸ்திரத்தை விலக்கி நீலோத்பலத்தைத்தான் குறிக்கும். இதுபோல் உத்பலம் என்று மட்டும் சொன்னால் வெளுப்பான உத்பலத்தையும் குறிக்கும். அதற்காக நீலம் என்பதைச் சேர்த்தால் வெண்மையை விலக்கி நீலமான உத்பலத்தையே குறிக்கிறது.

[ஒரு பதத்தின் அர்த்தமாகிய பொருளைத் தனித்துக் காட்டுவதற்காக உபயோகப்படும் இன்னொரு பதம் விசேஷணம் என்றும், அதினால் தனித்துக்காட்டப்படும் பொருள் விசேஷ்யம் என்றும், சொல்வார்கள். தனித்துக் காட்டுவது என்றாலே வேறு பொருளிலிருந்து இதைப் பிரித்து சுட்டிக்காட்டுவதுதான் ஆகும் இவ்விதமாக நீலம் என்பதால் வேறு நிறமில்லையென்றும், ஆம்பல் என்பதால் வேறு பொருள் இல்லையென்றும் சொல்லி, இரண்டு பதங்களும் சேர்ந்து எது நீலமாயும் ஆம்பலாயும் இருக்கிறதோ அப் பொருளையே குறிக்கின்றன. இந்த இரண்டு பதங்களுக்குள் இருக்கும் ஸம்பந்தம் விசேஷண-விசேஷ்யத்தன்மை என்று சொல்லப்படுகிறது.] (714)

इत्थं अन्योन्यभेदस्य व्यावर्तकतया तयोः ।
विशेषणविशेष्यत्वसंसर्गस्य इतरस्य वा ॥ ७१५ ॥

वाक्यार्थत्वे प्रमाणान्तरविरोधो न विद्यते ।
अतः संगच्छते सम्यक् वाक्यार्थो बाधवर्जितः ॥ ७१६ ॥

இத்தமந்யோந்யபேதஸ்ய வ்யாவர்தகதயா தயோ: ।
விசேஷண விசேஷ்யத்வ ஸம்ஸர்கஸ்யேதரஸ்ய வா ॥

வாக்யார்த்தத்வே ப்ரமாணாந்தர விரோதோ ந வித்யதே ।
அத: ஸங்கச்சதே ஸம்யக் வாக்யார்த்தோ பாதவர்ஜித: ॥

इत्थं-இவ்வாறு, अन्योन्यभेदस्य-ஒன்றுக்கொன்று வேற்றுமையை, व्यावर्तकतया-விலக்குவதாக இருப்பதால், तयोः-அவ்விரண்டிற்கும (நீலம் உத்பலம் இரண்டிற்கும்) विशेषणविशेष्यत्वसंसर्गस्य-விசேஷண விசேஷ்யபாவம் என்ற ஸம்பந்தமோ, इतरस्य वा-வேறு ஸம்பந்தமோ, वाक्यार्थत्वे-வாக்யார்த்தமாவதில், प्रमाणान्तरविरोध-வேறு பிரமாணங்களின விரோதம், न विद्यते-இல்லை. अतः-ஆகையால், वाक्यार्थः-வாக்யார்த்தமானது, बाधवर्जितः-பாதமில்லாமல், सम्यक्-நன்ருக, संगच्छते-பொருந்துகிறது.

இவ்வாறு அந்த நீலம், உத்பலம் என்ற இரண்டு பதங்களும் சேர்ந்து அந்யோந்ய பேதத்தை (ஒன்றுக்கொன்று பேதத்தை) விலக்குகிறது. அதாவது, நீலநிறமுள்ள உத்பலம் என்று சொல்லும் பொழுது நீலநிற முள்ளது உத்பலம்தான். உத்பலத்தைக் காட்டிலும் வேறல்லவென்றும், உத்பலம் நீல நிறமுள்ளதுதான் வேறு அல்லவென்றும் கூறுவதன் மூலம் விசேஷண - விசேஷ்யத்தன்மையுள்ள ஸம்பந்தம் அல்லது வேறுவிதமாக ஸம்பந்தம் என்று வைத்துக்கொண்டாலும் இரண்டு பதங்களையும் சேர்த்து ஏற்பட்டிருக்கும் வாக்கியத்திற்கு அப்பதங்களின் நேர் வாச்சியார்த்தங்களை வைத்துக் கொண்டு அர்த்தமாவதில் வேறு எந்த பிரமாணத்திற்கும் விரோதம் கிடையாது. ஆகையால் இங்கே எவ்வித தடையுமன்னியில் வாக்கியத்தின் அர்த்தம் நன்கு பொருத்தமாக சேருகிறது. (716-716)

एवं तत् त्वं असि इत्यत्र वाक्यार्थो न समञ्जसः ॥ ७१७ ॥

ஏவம் தத்த்வமஸீத்யத்ர வாக்யார்த்தோ ந ஸமஞ்ஜஸ: ।

एवं-இம்மாதிரி, तत् त्वं असि-நீ அதுவாக இருக்கிருய், इत्यत्र-என்றஇடத்தில், वाक्यार्थः-வாக்யார்த்தம், न समञ्जसः-பொருத்தமாக இல்லை.

"அது நீ" என்கிற விடத்தில் இதே மாதிரி வாக்யத்தின் அர்த்தம் பொருத்தமாக இராது. (717)

(அ) ஏன் பொருந்தாது என்பதை மேலால் காட்டுகிருர்:

तदर्थस्य परोक्षत्वादिविशिष्टचितेरपि ।
त्वमर्थस्यापरोक्षत्वादिविशिष्टचितेरपि ॥ ७१८ ॥

तथैवान्योन्यभेदस्य व्यावर्तकतया तयोः ।
विशेषणविशेष्यत्वसंसर्गस्य इतरस्य वा ॥ ७१९ ॥

वाक्यार्थत्वे विरोधोऽस्ति प्रत्यक्षादिकृतः ततः ।
संगच्छते न वाक्यार्थः तद्विरोधं च वच्मि ते ॥ ७२० ॥

ததர்த்தஸ்ய பரோக்ஷத்வாதி விசிஷ்ட சிதேரபி ।
த்வமர்த்தஸ்யாபரோக்ஷத்வாதி விசிஷ்ட சிதேரபி ॥

ததைவாந்யோந்ய பேதஸ்ய வ்யாவர்தகதயா தயோ: ।
விசேஷண விசேஷ்யதவ ஸம்ஸர்கஸ்யேதரஸ்ய வா ॥

வாக்யார்த்தத்வே விரோதோஸ்தி ப்ரத்யக்ஷாதி
க்ருதஸ் தத: ।
ஸங்கச்சதே ந வாக்யார்த்தஸ் தத்விரோதம் ச வச்மி தே ॥

तदर्थस्य-'தத்' பதத்தின் வாச்யார்த்தமான, परोक्षत्वादि-विशिष्टचितेरपि-பரோக்ஷத்வம் (நேரில் அறியப்படாத தன்மை) முதலானவைகளுடன் கூடிய சைதன்யத்திற்கும், त्वमर्थस्य-'த்வம்' பதத்தின வாச்யார்த்தமான, अपरोक्षत्वादि-विशिष्टचितेरपि-நேரில் அறியப்படும தன்மை முதலானவை களுடனகூடிய சைதன்யத்திற்கும், तथैव-அதுபோலவே, अन्योन्यभेदस्य-ஒன்றுக்கொன்று வேற்றுமையை, व्यावर्तकतया-விலக்குவதன் மூலம, तयोः-அவ்விரண்டிற்கும், विशेषण-विशेष्यत्वसंसर्गस्य-விசேஷண விசேஷ்ய பாவரூபமான ஸமபந்தமோ, इतरस्य वा-வேறு ஸம்பந்தமோ, वाक्यार्थत्वे-தத்வமஸி வாக்யார்த்தத்திற்கு அர்த்தமாகுமானல், प्रत्यक्षादिकृतः-ப்ரத்யக்ஷம் முதலான பிரமாணங்களால் ஏற்பட்ட, विरोधः-விரோதம், अस्ति-இருக்கிறது. ततः-ஆகையால், वाक्यार्थः-வாக்யார்த்தம, न संगच्छते பொருந்து

கிறதில்லை. तद्विरोधं च-அதன் விரோதத்தை. ते-உனக்கு, वच्मि-சொல்கிறேன்.

'நேரில் தெரியாமலிருக்கும் தன்மை முதலிய தனித் தன்மைகளுடன் கூடிய சைதன்யம்' என்ற தத் (அது) என்கிற பதத்தின் வாச்சியமான அர்த்தத்திற்கும், நேரில் தெரியும் தன்மை முதலிய தனித் தன்மைகளுடன் கூடிய சைதன்யம் என்ற த்வம் (நீ) எனகிற பதத்தின் வாச்சியமான அர்த்தத்திற்கும், நீல ஆம்பல் என்றவிடத்தில் சொன்னதுபோல ஒன்றுக்கொன்று வேற்றுமையை விலக்குவதன்மூலம், தத்பத வாச்சியார்த்தத்தைக் காட்டிலும் த்வம்பத வாச்யார்த்தம் வேறு அல்ல, த்வம்பத வாச்யார்த்தத்தைக் காட்டிலும் தத் பத வாச்யார்த்தம் வேறு அல்ல என்று கூறும் முறையில் விசேஷண-விசேஷ்ய பாவ ஸம்பந்தம் அல்லது வேறுவித மான ஸம்பந்தம் வாக்கியத்திற்கு அர்த்தம் என்றால் பிரத்யக்ஷம் முதலிய பிரமாணங்களுக்கு விரோதமாகும். ஆகையால் அவ்வித வாக்கியார்த்தம் பொருத்தமாகாது. அந்த விரோதம் எப்படி என்று உனக்குச் சொல்கிறேன்.

सर्वेशत्वस्वतन्त्रत्वसर्वज्ञत्वादिभिः गुणैः ।
सर्वोत्तमः सत्यकामः सत्यसंकल्पः ईश्वरः ॥ ७२१ ॥

तत्पदार्थः, त्वमर्थस्तु किंचिज्ज्ञो दुःखजीवनः ।
संसारी अयं तद्गतिको जीवः प्राकृतलक्षणः ॥ ७२२ ॥

ஸர்வேசத்வ ஸ்வதந்த்ரத்வ ஸர்வக்ஞத்வாதிபிர்குணை: ॥
ஸர்வோத்தம: ஸத்யகாம: ஸத்யஸங்கல்ப ஈச்வர: ॥

தத்பதார்த்தஸ் த்வமர்த்தஸ்து கிஞ்சிஜ்ஞோ துக்கஜீவந:।
ஸம்ஸார்யயம் தத்கதிகோ ஜீவ: ப்ராக்ருதலக்ஷண: ॥

सर्वेशत्व-எல்லாவற்றையும் ஆளும் தன்மை, स्वतन्त्रत्व-ஸ்வதந்த்ரனாக இருக்கும் தன்மை, सर्वज्ञत्वादिभिः-எல்லா வற்றையும் அறிகிறவராக இருக்கும் தன்மை முதலான, गुणैः-குணங்களால், सर्वोत्तमः-எல்லோருக்கும் மேலான வராயும், सत्यकामः-ஸத்யமான காமங்களை உடையவராயும்,

सत्यसंकल्पः-ஸத்யமான ஸங்கல்பத்தை உடையவராயும், உள்ள, ईश्वरः-ஈசுவரன், तत्पदार्थः-'தத்' என்ற பதத்தின் வாச்யமான பொருள். त्वमर्थस्तु-'த்வம்' என்ற பதத்தின் வாச்யமான பொருளோவெனில், किंचिज्ज्ञः-கொஞ்சமான அறிவுள்ளவனும், दुःखजीवनः கஷ்டமான வாழ்க்கை உள்ளவனும், संसारी-ஸம்ஸாரியாயும், तदाश्रितः-அந்த ஈசுவரனையே புகலிடமாகக் கொண்டவனும், प्राकृतलक्षणः-ப்ரக்ருதிக்கு (மாயைக்கு) உட்பட்ட ஸ்வபாவமுள்ளவனுமாயும் இருக்கும், अयं जीवः-இந்த ஜீவன்,

எல்லாவற்றையும் ஆளுபவராயிருக்கும் தன்மை பிறருக்குக் கட்டுப்படாமல் ஸ்வதந்திரராயிருக்கும் தன்மை, எல்லாம் அறிந்தவராயிருக்கும் தன்மை முதலான குணங்களினால், எல்லாவற்றிற்கும் மேலானவராயும், விரும்புவதையெல்லாம் நிறைவேற்றக்கூடியவராயும், எண்ணுவதையெல்லாம் நடத்தக் கூடியவராயும், இருக்கும் ஈசுவரர் தத் என்ற பதத்தின் வாச்யமான பொருள். மிக அல்பமாக அறிந்தவன், துக்கத்துடன் ஜீவிப்பவன், பிறவி மரணமுள்ளவன் அந்த ஈசுவரனையே கதியாயுடையவன் ப்ரக்ருதிக்குட்பட்ட ஸ்வபாவமுடையவன், இத்தகைய இந்த ஜீவன் த்வம் பதத்தின் பொருள். (721-722)

कथं एकत्वं अनयोः घटते विपरीतयोः ।
प्रत्यक्षेण विरोधोऽयं उभयोः उपलभ्यते ॥ ७२३ ॥

கதமேகத்வமநயோர் கடதே விபரீதயோ: ।
ப்ரத்யக்ஷேண விரோதோயமுபயோருபலப்யதே ॥

उभयोः-ஜீவன் ஈசுவரன் இருவருக்கும், अयं विरोधः-இந்த விரோதம், प्रत्यक्षेण-நேரில், उपलभ्यते-அறியப்படுகிறது. विपरीतयोः-விருத்தமான தர்மங்களுடன் கூடிய, अनयोः-இவ்விருவருக்கும், एकत्वं-ஒன்றாயிருக்கும் தன்மை, कथं घटते-எப்படிப் பொருந்தும் ?

இவ்விதம் தத் பதத்தின் வாச்சியார்த்தமான ஈசுவரனுக்கும் த்வம் பதத்தின் வாச்சியார்த்தமான ஜீவனுக்கும் இரு

வருக்கும் இந்த விரோதம் பிரத்யக்ஷமாகத் தெரிகிறது. அப்படி விபரீதத் தன்மையோடு இருக்கும் இவ்விருவருக்கும் ஒன்றாய் இருக்கும் தன்மை எப்படி முடியும்? (723)

विरुद्धधर्माक्रान्तत्वात् परस्परविलक्षणौ ।
जीवेशौ वह्नितुहिनाविव शब्दार्थतोऽपि च ॥ ७२४ ॥

*விருத்த தர்மாக்ராந்தத்வாத் பரஸ்பர விலக்ஷணௌ ।*
*ஜீவேசௌ வஹ்நி துஹிநாவிவ சப்தார்த்ததோபி ச ॥*

**विरुद्धधर्माक्रान्तत्वात्**-விருத்தமான தர்மங்களுடன் கூடியுள்ளதால், **जीवेशौ** ஜீவனும் ஈசுவரனும், **वह्नितुहिनाविव**-நெருப்பும் பனியும் போல, **शब्दार्थतोऽपि च**-சொல்லிலும் பொருளிலும், **परस्परविलक्षणौ** ஒருவருக்கொருவர் விலக்ஷணமானவர்கள்.

விருத்தமான தர்மங்களையுடையவைகளாயிருப்பதால், ஜீவனும் ஈசுவரனும், அக்நியும் பனியும்போல, வார்த்தையிலும் அதனுல் சொல்லப்படும் பொருளிலும் ஒன்றுக்கொன்று வேறுபட்ட லக்ஷணங்களோடு கூடியவர்கள். (724)

प्रत्यक्षादिविरोधः स्यात् इति ऐक्ये तयोः परित्यक्ते ।
श्रुतिवचनविरोधो भवति महान् स्मृतिवचनविरोधश्च ॥७२५॥

*ப்ரத்யக்ஷாதி விரோதः ஸ்யாதித்யைக்யே தயோः*
*பரித்யக்தே ।*
*ச்ருதிவசநவிரோதோ பவதி மஹான் ஸ்மிருதிவசன*
*விரோதச்ச ॥*

**प्रत्यक्षादिविरोधः स्यात्**-பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களுடன் விரோதம் ஏற்படும், **इति**-என்ற காரணத்தால், **तयोः**-அந்த ஜீவன் ஈசுவரன் இருவருக்கும், **ऐक्ये**- அபேதம், **परित्यक्ते**-கைவிடப்பட்ட பொழுது, **महान्**-பெரிய, **श्रुतिवचनविरोधः** - வேதவாக்கியங்களின் விரோதமும், **स्मृतिवचनविरोधश्च**-ஸ்மிருதி வாக்கியங்களின் விரோதமும், **भवति**-ஏற்படுகிறது.

ஜீவனும் ஈசுவரனும் ஒன்று என்ருல் பிரத்யக்ஷம் முதலான பிரமாணங்களுக்கு விரோதம் ஏற்படுமேயென்று, அவ்விரண்டிற்கும் ஐக்யத்தை விட்டுவிட்டால் ஜீவனும் ஈசுவரனும் ஒன்று என்று கூறும் வேத வாக்கியங்களுக்கும் ஸ்மிருதி வாக்கியங்களுக்கும் பெரிதான விரோதம் ஏற்படுகிறது. (725)

श्रुत्याऽप्येकत्वं अनयोः तात्पर्येण निगद्यते ।
मुहुः तत् त्वं असि इति अस्मात् अङ्गीकार्यं श्रुतेर्वचः ॥७२६॥

ச்ருத்யாப்யேகத்வமநயோஸ் தாத்பர்யேண நிகத்யதே ।
முஹுஸ் தத்த்வமஸீத்யஸ்மாதங்கீகார்யம் ச்ருதேர் வச: ॥

श्रुत्यापि-வேதத்தாலோவெனில், मुहुः- அடிக்கடி, तत् त्वं असि- நீ அதுவாக இருக்கிருய், इति-என்று, तात्पर्येण-கருத்துடன், अनयोः-இவ்விரண்டிற்கும், एकत्वं-ஒன்ருயிருக்கும் தன்மை, निगद्यते-சொல்லப்படுகிறது, अस्मात् - இதனல், श्रुतेः वचः-வேதத்தின் வார்த்தை, अङ्गीकार्यं-ஒப்புக்கொள்ளத் தக்கது.

வேதத்தாலே திரும்பத் திரும்ப 'தத்த்வம் அஸி' (நீ அதுவாக இருக்கிருய்) என்று, கருத்துடன் ஜீவன் ஈசுவரன் இவ்விருவருக்கும் அபேதம் சொல்லப்படுகிறது. இந்தக் காரணத்தினுல், வேதத்தின் வார்த்தை அங்கீகரிக்க வேண்டியதே. (726)

वाक्यार्थत्वे विशिष्टस्य संसर्गस्य च वा पुनः ।
अयथार्थतया सोऽयं वाक्यार्थो न मतः श्रुतेः ॥ ७२७ ॥

வாக்யார்த்தத்வே விசிஷ்டஸ்ய ஸம்ஸர்கஸ்ய ச வா புந: ।
அயதார்த்ததயா ஸோயம் வாக்யார்த்தோ ந மத: ச்ருதே:॥

विशिष्टस्य-விசேஷணத்துடன் கூடியதோ, संसर्गस्य च वा पुनः-வேறு ஸம்பந்தமோ, वाक्यार्थत्वे-வாக்யார்த்தமானுல், अयथार्थतया-யதார்த்தமில்லாததால், सोऽयं वाक्यार्थः-அந்த இந்த வாக்யார்த்தம், श्रुतेः न मतः-வேதத்திற்கு ஸம்மதமில்லை.



இவ்விதம் விசேஷணத்துடன் கூடியதையோ வேறு ஸம்பந்தத்தையோ வாக்கியார்த்தமாகச் சொன்னால் அது பாதிதமாகிறபடியால் அது வாஸ்தவமான வாக்யார்த்த மாகாது. ஆகையால் அது வேத ஸம்மதமல்ல. (727)

अखण्डैकरसत्वेन वाक्यार्थः श्रुतिसंमतः ॥ ७२८ ॥

அகண்டைகரஸத்வேந வாக்யார்த்த: ச்ருதி ஸம்மத: ॥

अखण्डैकरसत्वेन-பிரிவு இல்லாத ஒரே ஸ்வரூபமாக (சொல்லும்) वाक्यार्थः-வாக்யத்தின் அர்த்தம், श्रुतिसंमतः-வேதத்திற்கு ஸம்மதமானது.

வேற்றுமையற்று ஏகரஸத் தன்மையுடன் சொல்லப்படும் வாக்யார்த்தம்தான் வேதத்திற்குப் பொருத்தமாகும். (728)

(அ) ஏகரஸத் தன்மை என்பது என்னவென்பதை மேலால் தெரியப்படுத்துகிறார் :—

स्थूलसूक्ष्मप्रपञ्चस्य सन्मात्रत्वं पुनः पुनः ।
दर्शयित्वा, सुषुप्तौ सद्ब्रह्माभिन्नत्वं आत्मनः ॥ ७२९ ॥

उपपाद्य, सदेकत्वं प्रदर्शयितुमिच्छया ।
ऐतदात्म्यं इदं सर्वं इत्युक्त्वैव, सदात्मनोः ।
ब्रवीति श्रुतिः एकत्वं ब्रह्मणोऽद्वैतसिद्धये ॥ ७३० ॥

ஸ்தூல ஸூக்ஷ்ம ப்ரபஞ்சஸ்ய ஸன்மாத்ரத்வம் புந: புந: ।
தர்சயித்வா ஸுஷுப்தௌ ஸத் ப்ரஹ்மாபிந்நத்வ
மாத்மந: ॥

உபபாத்ய ஸதேகத்வம் ப்ரதர்சயிதுமிச்சயா ।
ஐததாத்ம்யமிதம் ஸர்வம் இத்யுக்த்வைவ ஸதாத்மநோ: ।
ப்ரவீதி ச்ருதிரேகத்வம் ப்ரஹ்மணோऽத்வைத ஸித்தயே ॥

श्रुतिः-உபநிஷத்தானது, सदेकत्वं-ஸத்வஸ்துவின் ஏகத் தன்மையை, प्रदर्शयितुं-காட்டுவதற்கு, इच्छया-விருப்பத்தால்,

स्थूलसूक्ष्मप्रपञ्चस्य-ஸ்தூல பிரபஞ்சத்திற்கும் ஸூக்ஷ்ம பிரபஞ்சத்திற்கும், सन्मात्रत्वं-ஸத ஸ்வரூபமாகவே இருக்கும் தன்மையை, पुनः पुनः-அடிக்கடி, दर्शयित्वा-காட்டி, सुषुप्तौ-ஸுஷுப்தியில், आत्मनः-ஆத்மாவிற்கு, सद्ब्रह्माभिन्नत्वं--ஸத்ரூபமான ப்ரஹ்மத்துடன் வேறுபடாத தன்மையை, उपपाद्य-விளக்கி एतदात्म्यं इदं सर्वं-இந்த பிரபஞ்சமெல்லாம் இந்த ஸத்ரூபம்தான, इति उक्त्वैव-என்று சொல்லிவிட்டு, ब्रह्मणः-ப்ரஹ்மத்திற்கு, अद्वैतसिद्धये-அத்வைதம் (இரண்டாவது பொருளற்றது என்பது) ஸித்திப்பதற்காக, सदात्मनोः-ஸத் வஸ்துவுககும் ஆத்மாவுக்கும், एकत्वं-ஐக்யத்தை, ब्रवीति-சொல்கிறது.

சாந்தோக்ய உபநிஷத்தில் ஸத் வஸ்து ஒன்றே உளது என்று காட்டுவதற்காக ஸ்தூல பிரபஞ்சமும் ஸூக்ஷ்ம பிரபஞ்சமும் ஸத் ஸ்வரூபமாகவே உள்ளது என்பதை அடிக்கடி காட்டி, ஸுஷுப்தியில் ஆத்மா பிரஹ்மத்துடன் வேருக இல்லாமலிருப்பதை விளக்கி இந்தப் பிரபஞ்சமெல்லாம் இந்த ஸத் ஸ்வரூபம்தான் என்றுசொல்லி ப்ரஹ்மம் அத்வைதம், இரண்டாவது பொருளில்லை என்பதை வெளிப்படுத்துவதற்காக ஸத் என்ற பிரஹ்மமும் ஆத்மாவும் ஒன்றுதான் என்று கூறுகிறது.

[இந்த ஸ்ரீமத் ஆசார்யார் சாந்தோக்ய உபநிஷத் 6-வது அத்யாயத்தில் உத்தாலகர் சுவேதகேதுவிற்கு உபதேசித்த விஷயம் பூராவையும் ஸங்கிரஹித்துச் சொல்லியிருக்கிருர். இதை விவரிக்கிறதாகுல் அந்த அத்யாயத்தில் கண்ட விஷயங்கள் யாவற்றையும் எடுத்துச்சொல்லவேண்டிவரும். பிரபஞ்சம் பூராவும் பிரஹ்மத்தின் கார்யமாயிருப்பதிஞல் பிரஹ்மத்தைத்தவிர வேறல்ல. ஆத்மாவும் சைதன்யமாயிருப்பதிஞல் பிரஹ்மத்தைத் தவிர வேறல்ல, ஆகையால் பிரஹ்மத்தைத் தவிர பிரபஞ்சமோ ஜீவனே தனித்து வேறுபட்ட பதார்த்தமல்லாததிஞல் பிரஹ்மம் ஒன்றுதான் ஸத், இருக்கிற பதார்த்தம் என்பது அதன் சுருக்கம்.] (729-730)

(அ) அவ்விரண்டும் வேருக இருந்துவிட்டால் பிரஹ்மத்திற்கு பிரஹ்மமாயிருக்கும் தன்மையே போய்விடும். அது

பிரஹ்மமாயிருப்பது இரண்டற்ற தன்மையினால்தான் என்பதை மேலால் காட்டுகிறார்:—

सति प्रपञ्चे जीवे वाऽद्वैतत्वं ब्रह्मणः कुतः ।
अतः तयोः अखण्डत्वं एकत्वं श्रुतिसंमतम् ॥ ७३१ ॥

ஸதி ப்ரபஞ்சே ஜீவே வாऽத்வைதத்வம் ப்ரஹ்மண: குத: ।
அதஸ் தயோரகண்டத்வமேகத்வம் ச்ருதி ஸம்மதம் ॥

प्रपञ्चे-பிரபஞ்சமோ, जीवे वा-ஜீவனோ, सति-இருக்குமேயானால், ब्रह्मण:-பிரஹ்மத்திற்கு, अद्वैतत्वं-இரண்டற்ற தன்மை, कुत:-எப்படி இருக்கும்? अत:-ஆகையால், तयो:-அந்த (ஜீவன், ப்ரஹ்மம்) இரண்டிற்கும், अखण्डत्वं-பிரிவற்றிருக்கும் தன்மை, एकत्वं-ஒன்றுயிருக்கும் தன்மை, श्रुति संमतम्-வேதத்திற்கு ஸம்மதமானது.

பிரபஞ்சமோ ஜீவனோ வாஸ்தவமாகத் தனித்து இருக்குமேயானால், பிரஹ்மத்திற்கு இரண்டற்ற தன்மை எப்படி இருக்கும்? ஆகையால் அந்த ஜீவன் பிரஹ்மம் இரண்டிற்கும் பிரிவற்றிருக்கும் தன்மை, ஒன்றுயிருக்கும் தன்மை வேதத்தினால் ஒப்புக்கொள்ளப்படுகிறது. (731)

(அ) வேதத்தின் தாத்பர்யம் ஐக்யத்தில் ஒன்றுயிருக்கும் தன்மையில் இருக்கலாம். ஆனாலும் அது உபயோகித்திருக்கும் வார்த்தைகளின் நேர் அர்த்தங்களைக் கவனிக்கும்போது அத்தன்மை ஸித்திக்காதுபோலிருக்கிறதேயென்றால் அது ஸித்திப்பதற்குள்ள முறையைக் காட்டுகிறார்:—

विरुद्धांशपरित्यागात् प्रत्यक्षादिः न बाधते ।
अविरुद्धांशग्रहणात् न श्रुत्याऽपि विरुध्यते ॥ ७३२ ॥

விருத்தாம்ச பரித்யாகாத் ப்ரத்யக்ஷாதிர் ந பாததே ।
அவிருத்தாம்ச க்ரஹணாத் ந ச்ருத்யாபி விருத்யதே ॥

विरुद्धांशपरित्यागात्-விருத்தமான அம்சங்களை விட்டுவிடுவதால், प्रत्यक्षादि:-ப்ரத்யக்ஷம் முதலானது, न बाधते-

பாதிக்கிறதில்லை, **अविरुद्धांशग्रहणात्**-விருத்தமில்லாத அம்சங்களை க்ரஹிப்பதனால், **श्रुत्यापि**-உபநிஷத்தோடும், **न विरुध्यते**-விரோதப்படுகிறதில்லை.

விருத்தமான அம்சங்களை விட்டுவிடுவதினால், பிரத்யக்ஷம் முதலானது பாதிக்காது. விருத்தமில்லாத அம்சங்களை வைத்துக்கொள்வதினால் வேதத்துடனும் விரோதமில்லை. (732)

लक्षणा ह्युपगन्तव्या ततो वाक्यार्थसिद्धये ॥ ७३३ ॥

லக்ஷணா ஹ்யுபகந்தவ்யா ததோ வாக்யார்த்த ஸித்தயே ॥

**ततः**-ஆகையால், **वाक्यार्थसिद्धये**-வாக்யத்தின் அர்த்தம் ஸித்திப்பதற்காக, **लक्षणा हि** - லக்ஷணைதான், **उपगन्तव्या**-ஒப்புக்கொள்ளத்தக்கது.

ஆகையால் (பதங்களின் வாச்சியார்த்தங்களை எடுத்துக் கொண்டால் வாக்கியார்த்தம் சரியாக ஏற்படாததினால்) வாக்கியத்தின் அர்த்தம் ஸித்திப்பதற்காக லக்ஷணைதான் அங்கீகரிக்கவேண்டியிருக்கிறது. (733)

(அ) அந்த லக்ஷணை என்பது எப்பொழுது அவசியப்படும், அது எத்தனை விதம், இங்கு எந்தவித லக்ஷணையை எடுத்துக்கொள்ளவேண்டும் என்பதையெல்லாம் விஸ்தாரமாக 734 முதல் 762 வரை உள்ள சுலோகங்களில் நிர்வசனம் செய்கிறார் :—

वाच्यार्थानुपपत्त्यैव लक्षणाऽभ्युपगम्यते ।
संबन्धोऽनुपपत्त्या च लक्षणेति जगुः बुधाः ॥ ७३४ ॥

வாச்யார்த்தானுபபத்த்யைவ லக்ஷணாऽப்யுபகம்யதே ।
ஸம்பந்தோநுபபத்த்யா ச லக்ஷணேதி ஜகுர் புதா: ॥

**वाच्यार्थानुपपत्त्यैव** - வாச்யமான (சொல்லிலிருந்து கிடைக்கும்) அர்த்தம் பொருந்தாததால் தான், **लक्षणा**-லக்ஷணை என்னும் விருத்தியானது, **अभ्युपगम्यते**-ஒப்புக் கொள்ளப்படுகிறது **अनुपपत्त्या**-வாச்யமான அர்த்தத்தின் அன்வயம் பொருந்தாததால், **संबन्धः**-வாச்யமான அர்த்தத்

தின் தொடர்பு, लक्षणा इति-லக்ஷணை என்று, बुधाः-வித்வான்கள், जगुः-சொல்கிறார்கள்.

பதத்தின் வாச்யமான அர்த்தத்தின் அந்வயம் பொருந்தாததால்தான் லக்ஷணை ஒப்புக்கொள்ளப்படுகிறது. गंगायां घोषः என்ற இடத்தில் கங்கா பதத்தின் வாச்சியார்த்தமான ப்ரவாஹத்துடன் கோஷ பதார்த்தத்திற்கு அந்வயம் பொருந்தாததால் வாச்யார்த்தத்தை விட்டுவிட்டு வாச்யார்த்தமான ப்ரவாஹத்துடன் ஸம்பந்தமுள்ள 'தீரம்' (கரை) என்பதில் கங்கா பதத்திற்கு லக்ஷணை ஒப்புக்கொள்ளப்படுகிறது. வாச்யார்த்தம் பொருந்தாத காரணத்தால் வாச்யார்த்தத்தின் ஸம்பந்தத்தைக் குறிப்பது என்பதை லக்ஷணையின் லக்ஷணமாக வித்வான்கள் சொல்கிறார்கள். வாச்யார்த்தத்தின் ஸம்பந்தம் எதில் உள்ளதோ அது லக்ஷணையால் கிரஹிக்கப்படுகிறது. लक्षणा शक्यसंबन्धस्तात्पर्यानुपपत्तितः என்பது காரிகாவளி.

[வாச்சியார்த்தம் பூராவையும் விட்டுவிட்டு வேறு அர்த்தம் சொன்னால் "ஜஹத் லக்ஷணை" என்றும், வாச்சியார்த்தம் பூராவையும் விடாமலே வேறு அர்த்தமும் சொன்னால் "அஜஹத் லக்ஷணை" என்றும், வாச்சியார்த்தத்தில் ஒரு பாகத்தை விட்டுவிட்டு ஒரு பாகத்தை வைத்துக்கொண்டு அர்த்தம் சொன்னால் "ஜஹத் அஜஹத் லக்ஷணை" அல்லது 'பாக லக்ஷணை' என்றும் சொல்வார்கள். இவைகளுக்குள்ள உதாஹரணங்களை ஸ்ரீமத் ஆசார்யரே அந்தந்த இடங்களில் சொல்கிறார்.] (734)

'गङ्गायां घोषः' इत्यादौ या जहल्लक्षणा मता।
न सा तत्त्वमसि इत्यत्र वाक्य एषा प्रवर्तते ॥ ७३५ ॥

கங்காயாம் கோஷ இத்யாதௌ யா ஜஹல் லக்ஷணா மதா।
ந ஸா தத்த்வமஸீத்யத்ர வாக்ய ஏஷா ப்ரவர்த்ததே ॥

गङ्गायां-கங்காநதியில், घोषः-இடைச்சேரி, इत्यादौ-என்பது முதலான இடத்தில், या-எந்த, जहल्लक्षणा-ஜஹல் லக்ஷணையானது, मता-ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறதோ, सा एषा-அந்த இது, तत्त्वमसि इति अत्र वाक्ये-தத் த்வம் அஸி என்ற இந்த வாக்யத்தில், न प्रवर्तते-வராது.

"கங்கையில் இடைச்சேரி" என்பதுபோலுள்ள இடத்தில் எந்த "ஜஹத்லக்ஷணை" எண்ணப்படுகிறதோ, அந்த லக்ஷணை "தத்த்வமஸி" என்கிற இந்த வாக்கியத்தில் பிரயோஜனப்படாது. (735)

गङ्गायाः अपि घोषस्य आधाराधेयत्वलक्षणः ।
सर्वो विरुद्धो वाक्यार्थः तत्र प्रत्यक्षतः ततः ।
गङ्गासंबन्धवत्तीरे लक्षणा संप्रवर्तते ॥ ७३६ ॥

*கங்காயா அபி கோஷஸ்யாதாராதேயத்வ லக்ஷண: ।*
*ஸர்வோ விருத்தோ வாக்யார்த்தஸ் தத்ர ப்ரத்யக்ஷதஸ் தத: ।*
*கங்காஸம்பந்தவத் தீரே லக்ஷணா ஸம்ப்ரவர்த்ததே ॥*

तत्र–அதில், गङ्गायाः–கங்கைக்கும், घोषस्यापि – இடைச் சேரிக்கும், आधाराधेयत्वलक्षणः– ஆதாராதேய பாவரூபமான, वाक्यार्थः सर्वः–வாக்யத்தின் அர்த்தமெல்லாம், प्रत्यक्षतः– பிரத்யக்ஷத்தோடு, विरुद्धः–விருத்தமாக உள்ளது, ततः– ஆகையால், गङ्गासंबन्धवत्तीरे-கங்கையின் ஸம்பந்தத்தோடு கூடியகரையில், लक्षणा–லக்ஷணை, संप्रवर्तते-ப்ரவர்த்திக்கிறது.

'கங்கா' பதத்தின் வாச்யார்த்தம் 'கங்கா பிரவாஹம்' 'கோஷ' பதத்தின் வாச்யமான அர்த்தம் 'இடைச்சேரி.' இரண்டு பதங்களும் சேர்ந்துள்ள 'கங்காயாம் கோஷ:' என்ற வாக்யத்தில் 'கங்காயாம்' என்பது ஏழாவது வேற்றுமைச் சொல்லானபடியால் கங்கைக்கும் கோஷத்திற்கும் ஆதாராதேயபாவ ஸம்பந்தத்தைக் கொண்டு கங்கா பிரவாஹத்தில் இடைச்சேரி என்று வாக்யத்தின் பொருளாகிறது. நீரோட்டமுள்ள நதீப்ரவாஹத்தில் இடைச்சேரி எப்படி இருக்கமுடியும்? ஆகவே இது அஸம்பாவிதம் ப்ரத்யக்ஷப்ரமாண விருத்தம். பிரவாஹம் கோஷத்திற்கு ஆதாரமாகாது. கோஷம் ஆதேயமாக (ப்ரவாஹத்தின்மேல் இருப்பதாக) ஆகாது. முழுவதும் விருத்தமாகிறபடியால் பிரவாஹம் என்ற வாச்யார்த்தத்தை விட்டு கங்கா பதத்திற்கு கங்கை நதிக்கரை என்ற அர்த்தம் லக்ஷணையால் கொள்ளப்படுகிறது. நதிக்கரையில் உள்ள பூமியில் இடைச்

சேரி இருக்கலாம். கரை ஆதாரமாகவும் இடைச்சேரி ஆதேயமாகவும் ஆகிறது. இப்பொழுது ப்ரத்யக்ஷ விரோதம் இல்லை. இது ஜஹல் லக்ஷணை. (736)

तथा तत्त्वमसि इत्यत्र चैतन्यैकत्वलक्षणे ।
विवक्षिते तु वाक्यार्थेऽपरोक्षत्वादिलक्षणः ॥ ७३७ ॥

विरुध्यते भागमात्रो न तु सर्वो विरुध्यते ।
तस्मात् जहल्लक्षणायाः प्रवृत्तिः नात्र युज्यते ॥ ७३८ ॥

ததா தத்த்வமஸீத்யத்ர சைதன்யைகத்வ லக்ஷணே ।
விவக்ஷிதே து வாக்யார்த்தேऽபரோக்ஷத்வாதி லக்ஷண: ॥

விருத்யதே பாகமாத்ரோ நது ஸர்வோ விருத்யதே ।
தஸ்மாத் ஜஹத்லக்ஷணாயா: ப்ரவ்ருத்திர் நாத்ர யுஜ்யதே ॥

तथा- அப்படி, तत्त्वमसीत्यत्र தத்த்வமஸி என்ற இடத்தில், चैतन्यैकत्वलक्षणे-சைதன்யத்தின் ஐக்யரூபமான, वाक्यार्थे- வாக்யத்தின் அர்த்தமானது, विवक्षिते - கருத்தாயிருக்கும் பொழுது, अपरोक्षत्वादिलक्षण: - அபரோக்ஷத்தன்மை முதலானது ரூபமான, भागमात्र:-அம்சம் மட்டும் தான், विरुध्यते - விரோதப்படுகிறது. तु-ஆனால், सर्वो न विरुध्यते- எல்லாம் விரோதப்படுகிறதில்லை, तस्मात्-ஆகையால், अत्र- இங்கே, जहल्लक्षणायाः - ஜஹத் லக்ஷணையின், प्रवृत्तिः- ப்ரவிருத்தி, न युज्यते-உசிதமாகாது.

"தத்த்வம் அஸி" (நீ அது) என்கிறவிடத்தில் சைதன்யம் ஒன்றாயிருக்கிறதென்பதைக் காட்டக்கூடிய வாக்யார்த்தமே தாத்பர்யமானால், அபரோக்ஷமாயிருக்கும் தன்மை முதலியவையாகிற ஒரு பாகம் மாத்திரம் விரோதப்படுகிறதே தவிர பூரா வாச்யார்த்தமும் விரோதப்படவில்லை. ஆகையால் இங்கு ஜஹத் லக்ஷணையின் பிரவிருத்தி உசிதமாகாது. (737-738)

वाच्यार्थस्य तु सर्वस्य त्यागे न फलं ईक्ष्यते ।
नालिकेरफलस्येव कठिनत्वधिया नृणाम् ॥ ७३९ ॥

வாச்யார்த்தஸ்ய து ஸர்வஸ்ய த்யாகே ந பலமீக்ஷ்யதே ।
நாளிகேர பலஸ்யேவ கடிநத்வதியா ந்ருணாம் ॥

नृणां-மனிதர்களுக்கு, कठिनत्वधिया - கடினத்தன்மை என்ற எண்ணத்தால், नालिकेरफलस्येव - தேங்காயைப் போல, वाच्यार्थस्य तु सर्वस्य - வாச்யமான அர்த்தம் முழுவதையும், त्यागे -விட்டுவிட்டால், फलं-பலன், न ईक्ष्यते- காணப்படவில்லை.

தேங்காயின் மேல் ஓடு (கொட்டாங்கச்சி) கடினமாக இருக்கிறது என்பதற்காகத் தேங்காயைத் தூர வீசி எறிந்து விட்டால் அவனுக்குத் தேங்காயின் பலன் கிடைக்குமா? அதுபோல வாச்யமான அர்த்தம் முழுவதையும் விட்டு விட்டால் ஒரு பலனுமில்லை. (739)

गङ्गापदं यथा स्वार्थं त्यक्त्वा लक्षयते तटम् ।
तत्पदं त्वंपदं वाऽपि त्यक्त्वा स्वार्थं तथाऽखिलम् ॥ ७४० ॥

त्वमर्थं वा तदर्थं वा यदि लक्षयति स्वयम् ।
तदा जहल्लक्षणायाः प्रवृत्तिः उपपद्यते ॥ ७४१ ॥

न शङ्कनीयं इत्यार्यैः, ज्ञातार्थे न हि लक्षणा ॥ ७४२ ॥

கங்காபதம் யதா ஸ்வார்த்தம் த்யக்த்வா லக்ஷயதே தடம் ।
தத்பதம் த்வம்பதம் வாபி த்யக்த்வா ஸ்வார்த்தம்
ததாऽகிலம் ॥

த்வமர்த்தம் வா ததர்த்தம் வா யதி லக்ஷயதி ஸ்வயம் ।
ததா ஜஹல்லக்ஷணாயா: ப்ரவ்ருத்திருபபத்யதே ॥

ந சங்கநீயமித்யார்யைர் ஞாதார்த்தே நஹி லக்ஷணா ।

गङ्गापदं-'கங்கா' என்ற பதமானது, यथा-எப்படி, स्वार्थं தனது அர்த்தமான பிரவாஹத்தை, त्यक्त्वा-விட்டு விட்டு, तटं-கரையை, लक्षयते-குறிக்கிறதோ, तथा-அப்படி, तत्पदं-'தத்' என்ற பதமோ, त्वंपदं वापि-'த்வம்' என்ற பதமோ, स्वार्थं अखिलं-தனது அர்த்தம் முழுவதையும், त्यक्त्वा-

விட்டு விட்டு, स्वयं-தானே, त्वमर्थं वा-த்வம் பதத்தின் அர்த்தத்தையோ, तदर्थं वा-தத் பதத்தின் அர்த்தத்தையோ, यदि लक्षयसि-குறிக்கிறதேயானால், तदा - அப்பொழுது, जहल्लक्षणायाः - ஜஹத்லக்ஷணையின், प्रवृत्तिः - ப்ரவ்ருத்தி, उपपद्यते-பொருந்துகிறது, इति-என்று, आर्यैः - பெரியவர்களால், न शङ्कनीयं-சங்கை கொள்ளவேண்டாம், ज्ञातार्थे-அறிந்த அர்த்தத்தில், लक्षणा नहि-லக்ஷணை கிடையாதல்லவா?

"गंगायां घोषः" என்ற இடத்தில் கங்கா பதத்திற்கு சக்தியால் கிடைக்கும் அர்த்தம் 'பிரவாஹம்.' இது 'இடைச்சேரி' என்பதோடு விரோதப்படுவதால் பிரவாஹம் என்ற அர்த்தம் முழுவதையும் விட்டுவிட்டு 'கரை' என்ற அர்த்தத்தை லக்ஷிணையால் குறிக்கிறது. வாச்யார்த்தம் முழுவதையும் விட்டுவிட்டு வேறு அர்த்தத்தைக் குறிப்பதால் இது ஜஹத் லக்ஷிணை எனப்படும். இதேபோல 'தத்த்வமஸி' என்ற இடத்திலும் தத்பத வாச்யார்த்தமான பரோக்ஷத்வாதி விசிஷ்ட சைதன்யத்திற்கும், த்வம்பத வாச்யார்த்தமான அபரோக்ஷத்வாதி விசிஷ்ட சைதன்யத்திற்கும் விரோதம் ஏற்படுவதால் வாச்யமான அர்த்தம் முழுவதையும் விட்டு தத்பதம் த்வம்பதார்த்தத்தையோ, த்வம்பதம் தத்பதார்த்தத்தையோ குறிக்குமானால் ஜஹத் லக்ஷிணை என்றே சொல்லலாமே என்று சிலர் கேட்கலாம். ஆனால் இது சரியல்ல. வாச்யமான அர்த்தம் முழுவதையும் விட்டுவிட்டு அந்த வாக்யத்திலுள்ள பதங்களிலிருந்து சக்தியால் கிடைக்காத வேறு அர்த்தத்தை அந்தச் சொல்லுக்குப் பொருளாகச் சொன்னால்தான் அது ஜஹல்லக்ஷிணையாகும். கங்கா, கோஷம் இவ்விரண்டிலிருந்தும் கிடைக்காத 'தீரம்' என்பதை அதன் பொருளாகக் கூறுவதால் இதை ஜஹத் லக்ஷிணை என்று கூறுகிறோம். 'தத்த்வமஸி' என்ற இடத்தில் தத்பதத்திலிருந்து அதன் அர்த்தமும் த்வம்பதத்திலிருந்து அதன் அர்த்தமும் சக்தியாலேயே அறியப்பட்டுவிட்டபடியால் அறிந்த அர்த்தத்திலேயே மறுபடியும் லக்ஷிணை சொல்வது யுக்தமில்லை. (741-வது சுலோகத்தில் त्वमर्थं वा तदर्थं वा என்றுபாடம் சரியானது.) (740—742)

तत्पदं त्वंपदं वाऽपि श्रूयते च, प्रतीयते ।
तदर्थश्च, कथं तत्र संप्रवर्तेत लक्षणा ॥ ७४३ ॥

*தத்பதம் த்வம்பதம் வாபி ச்ரூயதே ச ப்ரதீயதே।*
*ததர்த்தஸ்ச கதம் தத்ர ஸம்ப்ரவர்த்தேத லக்ஷணா ॥*

तत्पदं-தத் என்ற பதமும், त्वंपदं वापि-த்வம் என்ற பதமும், श्रूयते च-கேட்கப்படுகிறது, तदर्थश्च-அவைகளின் அர்த்தமும், प्रतीयते-அறியப்படுகிறது, तत्र-அதில், लक्षणा-லக்ஷணையானது, कथं संप्रवर्तेत-எப்படி பிரவர்த்திக்கும்.

தத்த்வமஸி என்ற வாக்யத்தில் 'தத், த்வம்' என்ற இரண்டு பதங்களும் இருக்கின்றன. இவ்விரண்டு பதங்களிலிருந்தும் சக்தியாலேயே அதன் அர்த்தம் நமக்குத் தெரிகிறது. இப்படியிருக்க இங்கு லக்ஷணைக்கு என்ன உபயோகம்? (743)

(அ) இவ்விதமாக ஜஹத்லக்ஷணை ஒத்துவராது என்று காண்பித்துவிட்டு, அஜஹத் லக்ஷணையும் சரியாகாது என்று காட்டுகிறார் :—

अत्र 'शोणो धावति' इति वाक्यवत् न प्रवर्तते ।
अजहल्लक्षणा वाऽपि सा जहल्लक्षणा यथा ॥ ७४४ ॥

*அத்ர சோணோ தாவதீதி வாக்யவத் ந ப்ரவர்த்ததே।*
*அஜஹல்லக்ஷணா வாபி ஸா ஜஹல்லக்ஷணா யதா ॥*

अत्र-இங்கே (தத்வமஸி வாக்யத்தில்) सा जहल्लक्षणा यथा-அந்த ஜஹத் லக்ஷணை எப்படி (ஸம்பவிக்காதோ அப்படியே), शोणो धावति-சிகப்பு ஓடுகிறது, इति वाक्यवत्-என்ற வாக்யமபோல், अजहल्लक्षणा वाऽपि-அஜஹத் லக்ஷணையும்கூட, न प्रवर्तते-ஸம்பவிக்காது.

"சிவப்பு ஓடுகிறது" என்கிற வாக்யத்தில் அஜஹத் லக்ஷணை ஏற்படுவதுபோல தத்த்வமஸி வாக்யத்தில் அஜஹத் லக்ஷணையும் ஜஹத் லக்ஷணையைப் போலவே பிரவிருத்திக்காது. (744)

गुणस्य गमनं लोके विरुद्धं द्रव्यमन्तरा ।
अतः तं अपरित्यज्य तद्गुणाश्रयलक्षणः ।
लक्ष्यादिः लक्ष्यते, तत्र लक्षणाऽसौ प्रवर्तते ॥ ७४५ ॥

குணஸ்ய கமநம் லோகே விருத்தம் த்ரவ்யமந்தரா ।
அதஸ் தமபரித்யஜ்ய தத்குணாச்ரய லக்ஷண: ।
லக்ஷ்யாதிர் லக்ஷ்யதே தத்ர லக்ஷணாऽஸௌ ப்ரவர்த்ததே ॥

लोके-உலகில், द्रव्यमन्तरा-திரவ்யமில்லாமல், गुणस्य-குணத்திற்கு, गमनं-செலகை, विरुद्धं-விருத்தமானது, अतः-ஆகையால், तं-அந்த குணத்தை, अपरित्यज्य-விடாமலே, तद्गुणाश्रयलक्षणः-அந்த குணத்தின் ஆசிரயரூபமான, लक्ष्यादिः குதிரை முதலானவை, लक्ष्यते-குறிப்பிடப்படுகிறது, तत्र-அங்கு, असौ लक्षणा-அந்த அஜஹத் லக்ஷணை, प्रवर्तते-ப்ரவர்த்திக்கிறது.

திரவியமன்னியில் குணம் மட்டும் போவதென்பது உலகத்திலுள்ள அனுபவத்திற்கு விருத்தம். ஆகையால், அந்தக் குணத்தை விட்டுவிடாமலே, அந்த குணத்திற்கு ஆசிரயமாயிருக்கும் தன்மையுள்ள குதிரை முதலான திரவியம் குறிப்பிடப்படுகிறது. அங்கே இந்த அஜஹத லக்ஷணை பிரவிருத்திக்கும்.

वाक्ये तत्त्वमसि इत्यत्र ब्रह्मात्मैकत्वबोधके ।
परोक्षत्वापरोक्षत्वादिविशिष्टचितोः द्वयोः ॥ ७४६ ॥

एकत्वरूपवाक्यार्थो विरुद्धांशाविवर्जनात् ।
न सिध्यति यतः तस्मात् नाजहल्लक्षणा मता ॥ ७४७ ॥

வாக்யே தத்த்வமஸீத்யத்ர ப்ரஹ்மாத்மைகத்வ போதகே ।
பரோக்ஷத்வாபரோக்ஷத்வாதி விசிஷ்ட சிதோர் த்வயோ: ॥

ஏகத்வரூப வாக்யார்த்தோ விருத்தாம்சாவிவர்ஜநாத் ।
ந ஸித்யதி யதஸ் தஸ்மாத் நாஜஹல்லக்ஷணா மதா ॥

ब्रह्मात्मैकत्वबोधके-ப்ரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் அபேதத்தை போதிக்கிற. तत्त्वमसीति-தத்வமஸி என்ற, अत्र वाक्ये-இந்த வாக்யத்தில், यतः-எதனால், द्वयोः-இரண்டு, परोक्षत्वापरोक्षत्वादि-பரோக்ஷத்வம் அபரோக்ஷத்வம் முதலியவைகளுடன், विशिष्टचितोः-கூடியசைதன்யங்களுக்கு- विरुद्धांशापवर्जनात्-விருத்தமான அம்சங்களை விடாவிட்டால், एकत्वरूपवाक्यार्थः-அபேத ரூபமான வாக்யார்த்தம், न सिध्यति-ஸித்திக்கிறதில்லையோ, तस्मात् - அதனால், अजहल्लक्षणा-அஜஹத்லக்ஷணையானது, न मता - ஒப்புக்கொள்ளப்படவில்லை.

பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்குமுள்ள ஒன்றாயிருக்கும் தன்மையை போதிக்கிற "தத்த்வம் அஸி" (நீ அது) என்கிற இந்த வாக்யத்தில், பரோக்ஷத் தன்மை அபரோக்ஷத் தன்மை முதலானவைகளுடன் கூடியுள்ள இரண்டு சைதன்யங்களுக்கும், விரோதமான அம்சங்களை விடாவிட்டால், ஒன்றாயிருக்கும் தன்மையைக் காட்டும் வாக்யார்த்தம் ஸித்திக்கமுடியாது என்ற காரணத்தினால் அஜஹத்லக்ஷணை ஒப்புக்கொள்ளப்படவில்லை. (746-747)

तत्पदं त्वंपदं चापि स्वकीयार्थविरोधिनम् ।
अंशं सम्यक् परित्यज्य स्वाविरुद्धांशसंयुतम् ॥ ७४८ ॥

त्वमर्थं वा तदर्थं वा सम्यक् लक्षयतः स्वयम् ।
भागलक्षणया साध्यं किं अस्तीति न शङ्क्यताम् ॥ ७४९ ॥

தத்பதம் த்வம்பதம் சாபி ஸ்வகீயார்த்த விரோதிநம் ।
அம்சம் ஸம்யக் பரித்யஜ்ய ஸ்வாவிருத்தாம்ச ஸம்யுதம் ॥

த்வமர்த்தம் வா ததர்த்தம் வா ஸம்யக் லக்ஷயத: ஸ்வயம் ।
பாகலக்ஷணயா ஸாத்யம் கிமஸ்தீதி ந சங்க்யதாம் ॥

तत्पदं-தத் என்ற பதமும், त्वंपदं चापि-த்வம் என்ற பதமும், स्वकीयार्थविरोधिनं-தன்னுடையதான அர்த்தத்தில் விரோதமுள்ள, अंशं-அம்சத்தை, सम्यक्-நன்கு, परित्यज्य-

விட்டு விட்டு, स्वाविरुद्धांशसंयुतं-தன்னுடைய விரோத மில்லாத அம்சத்துடன் கூடிய, त्वमर्थं वा-த்வம்பதார்த்தத் தையோ, तदर्थं वा-தத்பதார்த்தத்தையோ, स्वयं-தான் सम्यक् -நன்ருக, लक्षयतः -குறிப்பிடுகின்றன. (ஆகவே), भागलक्षणया- பாகலக்ஷணையால், साध्यं - ஸாதிக்கத்தக்கது, किमस्तीति-என்ன இருக்கிறது என்று, न शंक्यतां-சந்தேஹப் படவேண்டாம்.

தத் பதத்திற்கு பரோக்ஷ சைதன்யம் என்று அர்த்தம். இதை த்வம் பதார்த்தமான அபரோக்ஷசைதன்யத்துடன் சேர்க்கும் பொழுது தத்பதார்த்தத்தில் பரோக்ஷம் என்ற அம்சம் விரோதப்படுகிறது ஆகையால் விருத்தமான பரோக்ஷாம்சத்தை விட்டுவிட்டு விரோதமில்லாத சைதன் யாம்சத்தை மட்டும் விடாமல் வைத்துக்கொண்டு தத்பத மானது லக்ஷணையால் த்வம் பதார்த்தமான கிஞ்சித்ஜ்ஞத்வாதி விசிஷ்ட சைதன்யத்தைக் குறிக்கிறது. அல்லது த்வம் பதார்த்தமான அபரோக்ஷ சைதன்யம் என்பதில் அபரோக்ஷம் என்ற அம்சமானது தத்பதார்த்தமான பரோக்ஷாம்சத்துடன் விரோதப்படுவதால் அபரோக்ஷாம்சத்தை விட்டுவிட்டு விரோதப்படாத சைதன்யாம்சத்தை மட்டும் விடாமல வைத்துக்கொண்டு த்வம்பதமானது தத்பதார்த்தமான ஸர்வக்ஞத்வாதிவிசிஷ்ட சைதன்யத்தை லக்ஷணையால் குறிக் கிறது. இவ்வாறு சொன்னோமானுல் தனது அர்த்தத்தில் ஒரு அம்சத்தை விட்டாலும் ஒரு அம்சத்தை விடாமல் வேறு அர்த்தத்தைக் குறிப்பதால் அஜஹத் லக்ஷணை என்றேசொல்லி விடலாமே! எதற்காக பாகலக்ஷணையை ஒப்புக்கொள்ள வேண்டும்.

(748-749)

अविरुद्धं पदार्थान्तरांशं स्वांशं च तत् कथम् ।
एकं पदं लक्षणया संलक्षयितुमर्हति ॥ ७५० ॥

அவிருத்தம் பதார்த்தாந்தராம்சம் ஸ்வாம்சம் ச தத் கதம்।
ஏகம் பதம் லக்ஷணயா ஸம்லக்ஷயிதுமர்ஹதி ॥

एकं पदं-ஒரு பதமானது, अविरुद्धं-விரோதப்படாத, पदार्थान्तरांशं-வேறு பதத்தின் பொருளின் அம்சத்தையும்,

स्वांशं च तत्-அந்த தனது பொருளின் அம்சத்தையும், लक्षणया- லக்ஷணையால், संलक्षयितुं - குறிப்பிடுவதற்கு, कथं अर्हति-எப்படி தகுதியுள்ளதாகும் ?

ஒரே பதமானது தனக்கு விரோதமில்லாததான வேறு பதார்த்தத்தின் அம்சத்தையும் தன்னுடைய அம்சத்தையும் இரண்டையும் லக்ஷணையால் எப்படி குறிப்பிட முடியும் ?

पदान्तरेण सिद्धायां पदार्थप्रमितौ स्वतः ।
तदर्थप्रत्ययापेक्षा पुनर्लक्षणया कुतः ॥ ७५१ ॥

*பதாந்தரேண ஸித்தாயாம் பதார்த்த ப்ரமிதௌ ஸ்வத: ।*
*ததர்த்த ப்ரத்யயாபேக்ஷா புநர் லக்ஷணயா குத: ॥*

पदान्तरेण-வேறு பதத்தால், स्वतः-தானாகவே, पदार्थप्रमितौ-பதார்த்தத்தின் ஞானம், सिद्धायां-கிடைத்திருக்கும் பொழுது, पुनः-மறுபடியும், लक्षणया-லக்ஷணையால், तदर्थप्रत्ययापेक्षा-அந்த அர்த்தஞானத்தின் அபேக்ஷை कुतः-எதற்காக ?

வேறு பதத்தினாலேயே பதத்தின் அர்த்தக்ஞானம் தானாகவே ஏற்பட்டுவிட்டால் மறுபடியும் லக்ஷணையினால் அந்த அர்த்தஞானத்தின் அபேக்ஷை எதற்காக ? 751)

(அ) தத் த்வம் அஸி என்ற வாக்யத்திற்கு அர்த்தம் செய்யும்போது மேலே கண்ட ரீதியாய் ஜஹத் லக்ஷணையும் பொருந்தாது அஜஹத்லக்ஷணையும் பொருந்தாது என்று ஏற்படுவதினால், இரண்டும் கலந்த ஜஹத்-அஜஹத் லக்ஷணையாகிய பாக லக்ஷணைதான் அங்கீகரிக்கப்பட வேண்டும் என்பதை வற்புறுத்தி, அது எப்படிப்பொருந்துகிற தென்பதைக் காட்டுகிறார் :—

तस्मात् तत्त्वमसि इत्यत्र लक्षणा भागलक्षणा ।
वाक्यार्थस्य त्वखण्डैकरसतासिद्धये मता ॥ ७५२ ॥

*தஸ்மாத் தத்த்வமஸீத்யத்ர லக்ஷணா பாகலக்ஷணா ।*
*வாக்யார்த்தஸ்ய த்வகண்டைக ரஸதா ஸித்தயே மதா ॥*

**तस्मात्**-ஆகையால், **तत्त्वमसीत्यत्र**-தத்த்வமஸி என்ற இடத்தில், **वाक्यार्थस्य**-வாக்யார்த்தத்திற்கு, **अखण्डैकरसता-सिद्धये**-பிரிவற்ற ஒரே ஸ்வரூபமாக இருக்கும் தன்மை கிடைப்பதற்காக, **भागलक्षणा**-பாகலக்ஷணை என்ற, **लक्षणा**-லக்ஷணை, **मता**-ஒப்புக்கொள்ளப்பட்டிருக்கிறது.

ஆகையினால், "தத்த்வம் அஸி" என்றவிடத்தில் வாக்யார்த்தத்திற்கு அகண்டமாய் ஏகரஸமாயிருக்கும் தன்மை ஏற்படவேண்டியதற்காக, பாக லக்ஷணை என்ற லக்ஷணை அங்கீகரிக்கப்படுகிறது (752)

भागं विरुद्धं संत्यज्य अविरोधो लक्ष्यते यया ।
सा भागलक्षणा इत्याहुः लक्षणज्ञा विचक्षणाः ॥ ७५३ ॥

பாகம் விருத்தம் ஸந்த்யஜ்யாவிரோதோ லக்ஷ்யதே யயா।
ஸா பாகலக்ஷணேத்யாஹுர் லக்ஷணக்ஞா விசக்ஷணா: ॥

**विरुद्धं भागं**-விரோதப்படும் அம்சத்தை, **संत्यज्य**-விட்டு விட்டு, **अविरोधः**-விரோதமில்லாத தன்மை, **यया**-எதனால், **लक्ष्यते**-குறிக்கப்படுகிறதோ, **सा**-அது, **भाग लक्षणा**-பாக லக்ஷணை, **इति**-என்று, **लक्षणज्ञाः**-லக்ஷணமறிந்த, **विचक्षणाः**-வித்வான்கள், **आहुः**-சொல்கிறார்கள்.

விருத்தமான பாகத்தை விட்டுவிட்டு, விரோதமில்லாத தன்மை எதனால் குறிக்கப்படுகிறதோ, அது பாக லக்ஷணை என்று லக்ஷணமறிந்த அறிவாளிகள் சொல்கிறார்கள். (753)

सोऽयं देवदत्तः इति वाक्यं वाक्यार्थ एव वा ।
देवदत्तैक्यरूपस्ववाक्यार्थानवबोधकम् ॥ ७५४ ॥

देशकालादिवैशिष्ट्यं विरुद्धांशं निरस्य च ।
अविरुद्धं देवदत्तदेहमात्रं स्वलक्षणम् ॥ ७५५ ॥

भागलक्षणया सम्यक् लक्षयत्यनया यथा ।

ஸோயம் தேவதத்த இதி வாக்யம் வாக்யார்த்த ஏவ வா ।
தேவதத்தைக்ய ரூப ஸ்வ வாக்யார்த்தாநவ போதகம் ॥

தேச காலாதி வைசிஷ்ட்யம் விருத்தாம்சம் நிரஸ்ய ச ।
அவிருத்தம் தேவதத்த தேஹமாத்ரம் ஸ்வலக்ஷணம் ॥

பாகலக்ஷணயா ஸம்யக் லக்ஷயத்யநயா யதா ।

**सोयं देवदत्तः**-அவன் இந்த தேவதத்தன், **इति वाक्यं**-என்ற வாக்யமோ, **वाक्यार्थ एव वा**-வாக்யத்தின் அர்த்தம் மட்டுமோ, **देवदत्तैक्यरूप**-தேவதத்தன் ஒருவன் என்னும், **स्ववाक्यार्थानवबोधकं**-தனது வாக்யார்த்தத்தை போதிக்காத, **विरुद्धांशं**-விரோதப்படும் அம்சமான, **देशकालादि वैशिष्ट्यं**-தேசம், காலம் முதலியவற்றுடன் கூடியிருக்கும் தன்மையை, **निरस्य**-நீக்கி விட்டு, **अविरुद्धं**-விரோதப்படாத, **स्वलक्षणं**-தன் ஸ்வரூபமான, **देवदत्तदेहमात्रं**-தேவதத்தனது தேஹத்தை மட்டும், **अनया**-இந்த, **भागलक्षणया**-பாக லக்ஷணையால், **यथा**-எப்படி, **सम्यक्**-நன்றாக, **लक्षयति**-குறிக்கிறதோ.

"அவன் இந்த தேவதத்தன்" என்கிற வாக்கியமோ, அந்த வாக்யத்தின் வாச்யார்த்தம் மட்டுமோ, ஒரே தேவ தத்தன் என்ற தனது வாக்யத்தின் தாத்பர்யத்தைக் காட்டாத விருத்தமான அம்சமாகிய தேசம் காலம் முதலியவற்றுடன் கூடியிருக்கும் தன்மை என்பதை விலக்கிவிட்டு விரோதம் இல்லாமலிருக்கிற தனது தாத்பர்யமான தேவதத்தனுடைய சரீரம் என்பதை மட்டும் இந்த பாகலக்ஷணையால் நன்கு குறிப்பிடப்படுகிறது எப்படியோ, (754 755)

तथा तत्त्वमसि इत्यत्र वाक्यं वाक्यार्थ एव वा ॥ ७५६ ॥

परोक्षत्वापरोक्षत्वादिविशिष्टचितोः द्वयोः ।
एकत्वरूपवाक्यार्थविरुद्धांशं उपस्थितम् ॥ ७५७ ॥

परोक्षत्वापरोक्षत्वसर्वज्ञत्वादिलक्षणम् ।
बुद्ध्यादिस्थूलपर्यन्तं आविद्यकं अनात्मकम् ॥ ७५८ ॥



परित्यज्याविरुद्धांशं शुद्धचैतन्यलक्षणम् ।
वस्तु केवलसन्मात्रं निर्विकल्पं निरञ्जनम् ॥ ७५९ ॥

लक्षयत्यनया सम्यक् भागलक्षणया ततः ।

ததா தத்வமஸீத்யத்ர வாக்யம் வாக்யார்த்த ஏவ வா ॥

பரோக்ஷத்வாபரோக்ஷத்வாதி விசிஷ்ட சிதோர் த்வயோ: ।
ஏகத்வரூப வாக்யார்த்த விருத்தாம்சமுபஸ்திதம் ॥

பரோக்ஷத்வாபரோக்ஷத்வ ஸர்வஜ்ஞத்வாதி லக்ஷணம் ।
புத்த்யாதி ஸ்தூல பர்யந்தமாவித்யகமநாத்மகம் ॥

பரித்யஜ்யாவிருத்தாம்சம் சுத்த சைதன்ய லக்ஷணம் ।
வஸ்து கேவல ஸன்மாத்ரம் நிர்விகல்பம் நிரஞ்ஜனம் ॥

லக்ஷயத்யநயா ஸம்யக் பாகலக்ஷணயா தத: ।

**तथा**- அப்படி, **तत्त्वमसीत्यत्र**-தத்த்வமஸி என்ற இடத்தில் **वाक्यं**-வாக்யமோ, **वाक्यार्थ एव वा**-வாக்யார்த்தம் மட்டுமோ, **परोक्षत्वापरोक्षत्वादिविशिष्टचितोः** **द्वयोः** – பரோக்ஷத்தன்மை அபரோக்ஷத்தன்மை முதலியவைகளுடன் கூடிய சைதன்யம் இரண்டிற்கும், **एकत्वरूपवाक्यार्थ** ஒன்ருயிருக்கும் தன்மைரூபமான வாக்யார்த்தத்திற்கு, **विरुद्धांशं**-விரோதப்படும் அம்சமாக, **उपस्थितं**- அறிந்த, **परोक्षत्वापरोक्षत्वसर्वज्ञत्वादिलक्षण**-பரோக்ஷத்தன்மை, அபரோக்ஷத்தன்மை, ஸர்வக்ஞத்தன்மை முதலிய ஸ்வரூபத்தையும், **बुद्ध्यादिस्थूलपर्यन्तं**-புத்தி முதல் ஸ்தூலம வரையுள்ள, **आविद्यकं** – அவித்யையால் ஏற்பட்ட, **अनात्मकं**- ஆத்மாவல்லாததையும், **परित्यज्य**-விட்டு விட்டு, **अविरुद्धांशं**-விரோதப்படாத அம்சமான, **केवलसन्मात्रं**-தனித்த ஸத்ஸ்வரூபமாக மட்டுமிருப்பதும், **निर्विकल्पं**-விகல்பமற்றதும், **निरञ्जनं**-தோஷமற்றதும், **शुद्धचैतन्यलक्षणं**-சுத்த சைதன்ய ரூபமான, **वस्तु**-வஸ்துவை, **अनया भागलक्षणया**-இந்த பாகலக்ஷணையால், **सम्यक्**-நன்ருக, **लक्षयति**-குறிப்பிடுகிறது.

அதேமாதிரி "தத்வம் அஸி" என்பதில் வாக்கியமோ, வாக்யத்தின் வாச்யார்த்தம் மட்டுமோ, பரோக்ஷமாயிருக்கும் தன்மை அபரோக்ஷமாயிருக்கும் தன்மை முதலானதுகளோடு கூடியிருக்கிற இரண்டு சைதன்யங்களுக்கும் ஐக்கியமென்ற வாக்யத்தின் தாத்பர்யத்திற்கு விருத்தமான அம்சமாக அறிந்த பரோக்ஷத் தன்மை அபரோக்ஷத் தன்மை ஸர்வக்ஞத் தன்மை முதலான லக்ஷணத்தையும், அவித்யையினால் ஏற்பட்ட ஆத்மாவல்லாததான புத்தி முதல் ஸ்தூல தேஹம் வரை உள்ளதையும் விலக்கிவிட்டு, விரோதப்படாத அம்சமான சுத்தசைதன்யத்தை லக்ஷணமாயுடையதும் தனித்து ஸத்தாக மாத்திரம் இருப்பதும், விகல்பமற்றதும் அழுக்கற்றதுமான வஸ்துவை இந்த பாக லக்ஷணையினால் நன்கு குறிக்கிறது.

सर्वोपाधिविनिर्मुक्तं सच्चिदानन्दं अद्वयम् ॥ ७६० ॥

निर्विशेषं निराभासं अतादृशं अनीदृशम् ।
अनिर्देश्यं अनाद्यन्तं अनन्तं शान्तं अच्युतम् ।

अप्रतर्क्यं अविज्ञेयं निर्गुणं ब्रह्म शिष्यते ॥ ७६१ ॥

ஸர்வோபாதி விநிர்முக்தம் ஸச்சிதாநந்தமத்வயம் ॥

நிர்விசேஷம் நிராபாஸமதாத்ருச மநீத்ருசம் ।
அநிர்தேச்யமநாத்யந்தமநந்தம் சாந்தமச்யுதம் ॥

அப்ரதர்க்யமவிக்ஞேயம் நிர்குணம் ப்ரஹ்ம சிஷ்யதே ॥

ततः-ஆகையால், सर्वोपाधिविनिर्मुक्तं-எல்லா உபாதிகளிலிருந்தும் விடுபட்டதும், सच्चिदानन्दं-ஸத்-சித்-ஆனந்த ஸ்வரூபமானதும், अद्वयं-இரண்டற்றதும், निर्विशेषं-விசேஷமற்றதும், निराभासं-வேறு தோற்றமில்லாததும், अतादृशं-அவ்விதமில்லாததும், अनीदृशं-இவ்விதமில்லாததும், अनिर्देश्यं - குறிப்பிட முடியாததும், अनाद्यन्तं - ஆதியந்தமற்றதும், अनन्तं - எல்லையற்றதும், शान्तं - சாந்தமானதும், अच्युतं - நழுவாததும், अप्रतर्क्यं - ஊஹிக்க முடியாததும்,

अविज्ञेयं- அறிய முடியாததுமான, निर्गुणं ब्रह्म-குணங்களற்ற ப்ரஹ்மம், शिष्यते-மிஞ்சி நிற்கிறது.

ஆகையால் எல்லா உபாதிகளிலிருந்தும் நன்கு விடுபட்டதாயும், ஸத்தாயும் சித்தாயும் ஆனந்தமாயுமிருப்பதாயும், இரண்டற்றதாயும், எவ்வித தனித்தன்மையைக் காட்டக் கூடிய விசேஷமுமற்றதாயும், பிரதிபிம்பமில்லாததாயும், அவ்விதமென்று சொல்லமுடியாததாயும், இவ்விதமென்று சொல்லமுடியாததாயும், குறிப்பிட்டுக் காட்டமுடியாததாயும், ஆதியும் அந்தமும் இல்லாததாயும், எவ்வித எல்லையுமற்றதாயும், சாந்தமாயும், நழுவாததாயும், ஊஹிக்கமுடியாததாயும், அறியமுடியாததாயும், குணமற்றதாயும் இருக்கும் பிரஹ்மம் மிஞ்சுகிறது. (760-761)

उपाधिवैशिष्ट्यकृतो विरोधः
ब्रह्मात्मनोः एकतयाऽधिगत्याम् ।
उपाधिवैशिष्ट्य उदस्यमाने
न कश्चिदप्यस्ति विरोध एतयोः ॥ ७६२ ॥

உபாதி வைசிஷ்ட்ய க்ருதோ விரோதோ
ப்ரஹ்மாத்மனோ ரேகதயாऽதிகத்யாம் ।
உபாதிவைசிஷ்ட்ய உதஸ்யமானே
ந கஸ்சிதப்யஸ்தி விரோத ஏதயோ: ॥

ब्रह्मात्मनोः-ப்ரஹ்மம் ஆத்மா இவ்விரண்டையும், एकतया-ஒன்றாக, अधिगत्यां-அறிவதில், विरोधः-விரோதம், उपाधिवैशिष्ट्यकृतः-உபாதிகளின் சேர்க்கையால் ஏற்பட்டது. (ஆகவே) उपाधिवैशिष्ट्ये-உபாதிகளின் சேர்க்கை, उदस्यमाने-நீக்கப்படும்பொழுது, एतयोः-இவ்விரண்டிற்கும், विरोधः-விரோதம், कश्चिदपि-ஒன்றும், नास्ति-இல்லை.

பிரஹ்மத்தையும் ஆத்மாவையும் ஒரே வஸ்துவாக அறிய வேண்டிய விஷயத்தில் விரோதமானது உபாதிகளுடன் சேர்க்கையால் ஏற்பட்டது. இந்த உபாதிகளின் சேர்க்கையை நீக்கிவிட்டோமானால் இவ்விரண்டிற்கும் விரோதம் ஒன்றுமில்லை.

[இவ்விதமாக மஹாவாக்யத்தில் பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் ஒன்றாயிருக்கும் தன்மையானது, அவ்விருவர்களுக்குள் தோன்றிக்கொண்டிருக்கும் விருத்தமான அம்சங்களை விலக்கிவிட்டு, விருத்தமில்லாத சைதன்யத்தை மட்டும் குறிக்கும்படி பாக லக்ஷணை என்ற முறைப்படி அர்த்தம் செய்தால் கிடைக்கிறது என்று ஸ்ரீமத் ஆசார்யார் நிர்வசனம் செய்திருக்கிறார்கள். அவர்கள் எவ்வளவு தெளிவாய் எழுதியிருந்தபோதிலும், அதே விஷயத்தை வேறு பாஷையில் எடுத்துச்சொல்வது மிகவும் சிரமம். ஆகையால் வாசகர்கள் மிகவும் கவனமாயிருந்து மனதைச் செலுத்தினால் தான் நன்கு விஷயம் அர்த்தமாகும் என்பதை ஞாபகப்படுத்த வேண்டியிருக்கிறது] (762)

(அ) பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் உள்ள ஐக்யத்தை உடனே தெரிந்துகொள்ளவிடாமல் அவர்களுக்குள் விருத்தமான அம்சங்கள் தோன்றுவதற்கு என்ன காரணம் என்று விசாரித்தால், பிராந்தியைத் தவிர வேறு காரணம் கிடையாது என்பதை ஸ்ரீமத் ஆசார்யர் தெளிவுபடுத்தி, அந்தப் பிராந்தியை நிவிருத்திசெய்துகொள்ளவேண்டியதே தம் கடமை என்பதை மேலால் வற்புறுத்துகிறார்:—

तयोः उपाधिश्च विशिष्टता च
तद्धर्मभाक्त्वं च विलक्षणत्वम् ।
भ्रान्त्या कृतं सर्वं इदं मृषैव
स्वप्नार्थवत् जाग्रति नैव सत्यम् ॥ ७६३ ॥

தயோருபாதிச்ச விசிஷ்டதா ச
தத்தர்மபாக்த்வம் ச விலக்ஷணத்வம் ।
ப்ராந்த்யா க்ருதம் ஸர்வமிதம் ம்ருஷைவ
ஸ்வப்நார்த்தவத் ஜாக்ரதி நைவ ஸத்யம் ॥

तयोः-அந்த ஈசுவரன் ஜீவன் இவர்களின், उपाधिश्च-உபாதியும், विशिष्टता च-உபாதிகளுடன் சேர்ந்திருக்கும் தன்மையும், तद्धर्मभाक्त्वं च-அதன் தர்மங்களையடைவதும், विलक्षणत्वं-ஒன்றுக்கொன்று விலக்ஷணமாயிருக்கும் தன்மை

யும், इदं सर्वं-இது எல்லாம், भ्रान्त्या कृतं-பிராந்தியால் ஏற்பட்டது. जाग्रति - விழிப்பில், स्वप्नार्थवत्-ஸ்வப்னப் பொருள்போல், मृषैव-பொய்தான், नैव सत्यं-உண்மையே யில்லை.

ஈசுவரன் ஜீவன் இவ்விருவருடைய உபாதியும், அதனுடன் சேர்ந்திருப்பதும், அந்த உபாதியின் தர்மங்களையடைந்திருப்பதும், வெவ்வேருகத் தோன்றுவதும் ஆகிய இவை எல்லாம் பிராந்தியினுலேயே ஏற்பட்டது. ஸ்வப்னத்தில் உள்ள பதார்த்தங்கள் ஜாக்ரத் காலத்தில் எப்படியோ, அப்படியே இவை எல்லாம் பொய்தான், ஸத்யமேயில்லை. (763)

निद्रासूत शरीरधर्म सुखदुःखादिप्रपञ्चोऽपि वा
जीवेशादिभिदाऽपि वा न च ऋतं कर्तुं क्वचित् शक्यते ।
मायाकल्पितदेशकालजगदीशादिभ्रमः तादृशः
को भेदोऽस्त्यनयोः द्वयोस्तु कतमः सत्योऽन्यतः को भवेत् ॥

நித்ரா ஸூத சரீர தர்ம ஸுகதுக்காதி ப்ரபஞ்சோபி வா
ஜீவேசாதி பிதாபி வா ந ச ருதம் கர்த்தும்
க்வசித் சக்யதே ।
மாயா கல்பித தேச கால ஜகதீசாதி ப்ரமஸ் தாத்ருச:
கோ பேதோऽஸ்த்யநயோர் த்வயோஸ்து
கதம: ஸதயோऽந்யத: கோ பவேத் ॥

निद्रासूत-தூக்கத்தால் உண்டான, शरीर-சரீரம், धर्म-(அதன்) தர்மம், सुखदुःखादि-ஸுகம், துக்கம் முதலான, प्रपंचोपि वा-பிரபஞ்சமோ, जीवेशादिभिदापि वा-ஜீவன், ஈசன் முதலிய வேற்றுமையோ (இதை) ऋतं कर्तुं-உண்மையாகச் செய்வதற்கு, क्वचित्-ஒரு இடத்திலும், न च शक्यते - முடியாது. मायाकल्पित - மாயையால் ஏற்பட்ட, देशकाल-தேசம், காலம், जगदीशादिभ्रमः-பிரபஞ்சம், ஈசன் முதலான ப்ரமமும், तादृशः-அப்பேற்பட்டதுதான். अनयोः-இவ்விரண்டுக்கும், को भेदः-என்ன வேற்றுமை, अस्ति-இருக்கிறது? द्वयोस्तु-இரண்டில, कतमः सत्यः-எது உண்மை

யானது? कः எது, अन्यतः अस्तु-வேறாக (பொய்யாக) अस्तु-இருக்கும்?

நித்திரையால் ஏற்பட்ட சரீரம், அதன் தர்மங்கள், ஸுகம், துக்கம், முதலான ஜகத்தோ, ஜீவன் ஈசுவரன் முதலான பேதமோ இவற்றை வாஸ்தவமென்று செய்துவிடுவதற்கு எப்பொழுதும் முடியாது. மாயையினால் கல்பிக்கப்பட்டிருக்கும் தேசம், காலம், ஜகத், ஈசுவரன் முதலானவை இருப்பதாக நினைக்கிற பிராந்தியும் அதேமாதிரித்தான் அவ்விரண்டிற்குள் என்ன வித்யாஸம் இருக்கிறது? இவ்விரண்டில் எது உண்மை? எது பொய்? இரண்டும் ஸமமாக இருப்பதால் இரண்டும் பொய்தான். (764)

न स्वप्नजागरणयोः उभयोः विशेषः
संदृश्यते क्वचिदपि भ्रमजैः विकल्पैः ।
यत् द्रष्टृदर्शनमुखैः अत एव मिथ्या
स्वप्नो यथा ननु तथैव हि जागरोऽपि ॥ ७६५ ॥

ந ஸ்வப்ந ஜாகரணயோ ருபயோர் விசேஷ:
ஸந்த்ருச்யதே க்வசிதபி ப்ரமஜைர் விகல்பை: ।
யத் த்ருஷ்ட்ரு தர்சந முகைரத ஏவ மித்யா
ஸ்வப்நோ யதா நநு ததைவ ஹி ஜாகரோபி ॥

यत्-எக்காரணத்தால், भ्रमजैः-ப்ராந்தியால் உண்டாகும், द्रष्टृदर्शनमुखैः-பார்க்கிறவன், பார்வை முதலான, विकल्पैः-கல்பனைகளினால், स्वप्नजागरणयोः उभयोः-கனவு, விழிப்பு இவ்விரண்டிற்கும், विशेषः-வித்யாஸம், क्वचिदपि-ஒரு இடத்திலும், न संदृश्यते-காணப்படுகிறதில்லையோ, अत एव-அதனாலேயே, यथा-எப்படி, स्वप्नः-கனவு, मिथ्या-பொய்யோ, जागरोऽपि-விழிப்பும், तथैव हि ननु-அப்படியே பொய்யல்லவா?

பிரமத்தினால் உண்டான பார்க்கிறவன், பார்வை பார்க்கப்படும் வஸ்து முதலிய பலவித கல்பனைகள், ஸ்வப்னம் விழிப்பு இரண்டிலும் ஒரேமாதிரியாகத்தான் இருக்கின்றன. இந்த விஷயத்தில் இரண்டிற்கும் ஒரு இடத்திலும் வித்யாஸமு

காணப்படுவதில்லை. அஃதைப்போலவே ஸ்வப்பனம் எப்படி பொய்யோ அது போலவே, விழிப்பும் பொய்தான். (765)

अविद्याकार्यतः तुल्यौ द्वावपि स्वप्नजागरौ ।
द्रष्टृदर्शनदृश्यादिकल्पना उभयतः समा ॥ ७६६ ॥

*அவித்யா கார்யதஸ் துல்யௌ த்வாவபி ஸ்வப்ந*
*ஜாகரௌ ।*
*த்ரஷ்ட்ரு தர்சந த்ருச்யாதி கல்பநோபயத: ஸமா ॥*

**अविद्याकार्यतः**-அவித்யையின் கார்யமானதால், **स्वप्नजागरौ द्वावपि**-கனவு, விழிப்பு இரண்டும், **तुल्यौ**-ஸமமானதுதான். **द्रष्टृदर्शनदृश्यादिकल्पना**-பார்க்கிறவன், பார்வை, பார்க்கப்படும் வஸ்து முதலான கல்பனையும், **उभयतः**-இரண்டு இடங்களிலும், **समा**-ஸமமாகத்தான் உள்ளது.

ஸ்வப்பனம் விழிப்பு இரண்டுமே அவித்யையின் கார்யமாயிருப்பதால் ஒன்றுக்கொன்று ஸமானம். இரண்டிடத்திலும் பார்க்கிறவன், பார்வை. பார்க்கப்படும் வஸ்து, முதலானதுகளை கல்பனை செய்வதும் ஒரேமாதிரியாகத்தான் இருக்கிறது. (766)

अभाव उभयोः सुप्तौ सर्वैरप्यनुभूयते ।
न कश्चित् अनयोः भेदः तस्मात् मिथ्यात्वं अर्हतः ॥ ७६७ ॥

*அபாவ உபயோ: ஸுப்தௌ ஸர்வைரப்யநுபூயதே ।*
*ந கஸ்சிதநயோர் பேதஸ் தஸ்மான் மித்யாத்வமர்ஹத: ॥*

**सुप्तौ**-நல்ல தூக்கத்தில், **उभयोः अभावः**-ஸ்வப்னம், ஜாகரம் இவ்விரண்டும் இல்லாமலிருப்பது, **सर्वैरपि**-எல்லோராலும், **अनुभूयते**-அநுபவிக்கப்படுகிறது. **अनयोः**-இவ்விரண்டிற்கும், **भेदः कश्चित्**-வேற்றுமை ஒன்றும், **न**-இல்லை. **तस्मात्**-ஆகையால், **मिथ्यात्वं अर्हतः**-(இரண்டும்) பொய்த்தன்மையுள்ளவை.

ஸுஷுப்தியில் ஸ்வப்பனம், ஜாகரம் இரண்டும் இல்லாமலிருப்பது எல்லோராலும் அநுபவிக்கப்படுகிறது. ஆகவே

இவ்விரண்டிற்கும் எவ்வித பேதமும் இல்லை. ஆகையால் இரண்டும் பொய் என்பதுதான் நியாயமாகும். (767)

भ्रान्त्या ब्रह्मणि भेदोऽयं सजातीयादिलक्षणः ।
कालत्रयेऽपि हे विद्वन् वस्तुतो नैव कश्चन ॥ ७६८ ॥

ப்ராந்த்யா ப்ரஹ்மணி பேதோऽயம் ஸஜாதீயாதி லக்ஷணː ।
காலத்ரயேபி ஹே வித்வன் வஸ்துதோ நைவ கஶ்சந ॥

सजातीयादिलक्षणः-ஸஜாதீயம் முதலியவை ரூபமான, अयं भेदः-இந்த பேதம், भ्रान्त्या-பிரமத்தால், ब्रह्मणि-பிரம்மத்தில் (தோன்றுகிறது.) हे विद्वन्- அறிவுள்ளவனே! कालत्रयेऽपि-முக்காலத்திலும், वस्तुतः-வாஸ்தவமாக, नैव कश्चन-பேதம் ஒன்றும் கிடையாது.

ஸஜாதீயம் விஜாதீயம், ஸ்வகதம் முதலான இந்த பேதம் பிரஹ்மத்தில் பிராந்தியினால் தோன்றுகிறது வாஸ்தவத்தில் முக்காலத்திலும் ஒருவித பேதமும் கிடையவே கிடையாது

"यत्र नान्यत् पश्यति" इति श्रुतिः द्वैतं निषेधति ।
कल्पितस्य भ्रमात् भूम्नि मिथ्यात्वावगमाय तत् ॥ ७६९ ॥

யத்ர நாந்யத் பச்யதீதி ச்ருதிர் த்வைதம் நிஷேததி ।
கல்பிதஸ்ய ப்ரமாத் பூம்னி மித்யாத்வாவகமாய தத் ॥

भूम्नि-எல்லாவற்றையும் விட மிகப்பெரியதான பிரஹ்மத்தில், भ्रमात्-பிராந்தியால், कल्पितस्य-ஆரோபிக்கப்பட்ட பிரபஞ்சத்தின், मिथ्यात्वावगमाय- பொய்த்தன்மையை அறிந்துகொள்வதற்காக, श्रुतिः - உபநிஷத், यत्र - எந்த ஸ்வரூபத்தில், अन्यत्-வேறு வஸ்துவை, न पश्यति-பார்க்கிறதில்லையோ, इति-என்று, तत् द्वैतं-அந்த த்வைதத்தை, निषेधति-மறுக்கிறது.

பூமாவாய் (பெரிதாய்) இருக்கும் பிரஹ்மத்தினிடத்தில் பிரமத்தினால் கல்பிக்கப்பட்ட பிரபஞ்சத்தின் பொய்த்தன்

மையை அறிவதற்காகத்தான் வேதமானது (சாந்தோக்ய உபநிஷத் 7-24-1.) "எந்த ஸ்வரூபத்தில் வேறொன்றையும் பார்க்கிறதில்லையோ" என்று இரண்டாயிருக்கும் தன்மையை மறுக்கிறது. (769)

यतस्ततो ब्रह्म सदाऽद्वितीयं
विकल्पशून्यं निरुपाधि निर्मलम् ।
निरन्तरानन्दघनं निरीहं
निरास्पदं केवलं एकमेव ॥ ७७० ॥

*யதஸ் ததோ ப்ரஹ்ம ஸதா஽த்விதீயம்*
*விகல்ப சூன்யம் நிருபாதி நிர்மலம் ।*
*நிரந்தரானந்தகனம் நிரீஹம்*
*நிராஸ்பதம் கேவலமேகமேவ ॥*

यतस्ततः - இவ்வாறு மறுக்கப்பட்டிருப்பதால், ब्रह्म - பிரஹ்மம், सदा-எப்பொழுதும், अद्वितीयं-இரண்டாவது வஸ்துவற்றது, विकल्पशून्यं-கல்பனைகள் இல்லாதது, निरुपाधि-உபாதிகளற்றது, निर्मलं-தோஷமற்றது, निरन्तरानन्दघनं-இடைவெளியில்லாமல் ஆனந்தகட்டியாக இருப்பது, निरीहं-சேஷ்டைகளற்றது, निरास्पदं-ஆதாரமற்றது, केवलं-தனித்து, एकमेव-ஒன்றுகவே இருக்கிறது.

இவ்விதம் மறுக்கப்பட்டிருக்கிறது என்ற காரணத்தினுல், பிரஹ்மமானது எப்பொழுதும் இரண்டாவதற்றது, பலவித கல்பனையில்லாதது, உபாதியற்றது, தோஷமற்றது, இடைவெளியில்லாமல் ஆனந்தகனமாயிருப்பது, எவ்வித சேஷ்டையும் இல்லாதது, ஆதாரமற்றது, தனித்திருப்பது, ஒன்றுகவே இருப்பது. (770)

नैवात्र काचन भिदा न गुणप्रतीतिः
नो वाक्प्रवृत्तिरपि वा न मनःप्रवृत्तिः ।
यत् केवलं परमशान्तं अनन्तं आद्यं
आनन्दमात्रं अवभाति सत् अद्वितीयम् ॥ ७७१ ॥

நைவாஸ்தி காசந பிதா ந குணப்ரதீதிர்
நோ வாக் ப்ரவ்ருத்திரபி வா ந மந:ப்ரவ்ருத்தி: ।
யத் கேவலம் பரம சாந்தமநந்தமாத்யம்
ஆநந்தமாத்ரமவபாதி ஸதத்விதீயம் ॥

यत्-எது, केवलं-தனித்ததாயும், परमशान्तं-மிகவும் சாந்தமாயும், अनन्तं-எல்லையற்றதாயும், आद्यं-முதலில் உள்ளதாயும், आनन्दमात्रं-ஆனந்தஸ்வரூபமாகவே இருப்பதாயும், सत्-எப்பொழுதும உள்ளதாயும், अद्वितीयं-இரண்டாவது பொருளற்றதாயும், अवभाति-விளங்குகிறதோ, अत्र-இந்த பிரஹ்மத்தில், काचन भिदा-வேற்றுமை ஒன்றும், नैवास्ति-கிடையவே கிடையாது, न गुणप्रतीतिः-குணங்களின் தோற்றமும் இல்லை, नो वाक्प्रवृत्तिरपि-சப்தமும் செல்லாது, न मनःप्रवृत्तिः-மனமும் செல்லாது.

தனித்திருப்பது, மிகவும் சாந்தமானது, எல்லையற்றது, எல்லாவற்றிற்கும் முதலில் இருப்பது. ஆனந்தமாத்திரமாக உள்ளது, ஸத் (இருப்பு) என்றிருப்பது, இரண்டாவதற்றது, இவ்விதமாக எது பிரகாசிக்கிறதோ இந்த ப்ரஹ்மத்தில் எவ்வித பேதமும் கிடையாது. குணமும் தெரியாது, சப்தமும் பிரவ்ருத்திக்காது, மனதும் பிரவ்ருத்திக்காது. (771)

यत् इदं परमं सत्यं तत्त्वं सच्चित्सुखात्मकम् ।
अजरामरणं नित्यं सत्यमेतत् वचो मम ॥ ७७२ ॥

யதிதம் பரமம் ஸத்யம் தத்வம் ஸச்சித்ஸுகாத்மகம் ।
அஜராமரணம் நித்யம் ஸத்யமேதத் வசோ மம ॥

यत्-ஏனெனில், इदं-இந்த பிரஹ்மம், परमं-மேலானது, सत्यं-ஸத்யமானது, तत्त्वं-வாஸ்தவமான தத்வம், सच्चित्सुखात्मकं-ஸச்சிதானந்தரூபம், अजरामरणं-மூப்பு, சாவு அற்றது, नित्यं-எப்பொழுதும் இருப்பது. मम-என்னுடைய, एतत् वचः-இந்த வார்த்தை, सत्यं-உண்மையானது.

ஏனெனில் இந்த ப்ரஹ்மம் மேலானது, ஸத்யமானது. வாஸ்தவமான தத்வம், ஸச்சித்ஸுகஸ்வரூபம், ஜரா மரண

மற்றது, நித்யமானது, நான் சொல்லும் இந்த வார்த்தை ஸத்யம். (772)

(அ) இதுவரை பிரஹ்மத்தின் தத்துவத்தைச் சொல்லி அந்த பிரஹ்மத்திற்கும் ஆத்மாவிற்கும் ஸ்வரூபத்தில் பேதமில்லை என்றும் காட்டிவந்தார். இவ்விஷயம் நன்கு அர்த்தமாகி விட்டால், ஜீவன், சரீரம் முதலியவைகளில் "நான்" என்கிற பாவனை வைத்துக்கொள்வது உசிதமில்லையென்றும், "நான் பிரஹ்மம்" என்றுதான் அறிந்துகொள்ளவேண்டுமென்றும் குரு சிஷ்யனைப் பார்த்து உபதேசிக்கிறார் :—

न हि त्वं देहोऽसौ असुरपि च वाऽप्यक्षनिकरो
मनो वा बुद्धिर्वा क्वचिदपि तथाऽहंकृतिरपि ।
न चैषां संघातः त्वमु भवति विद्वन् शृणु परं
यत् एतेषां साक्षी स्फुरणं अमलं तत् त्वं असि हि ॥

*நஹி த்வம் தேஹோZஸாவஸுரபி ச வாப்யக்ஷ நிகரோ*
*மனோ வா புத்திர் வா க்வசிதபி ததாஹங்க்ருதிரபி ।*
*ந சைஷாம் ஸங்காதஸ் த்வமு பவதி வித்வன் ச்ருணு பரம்*
*யதேதேஷாம் ஸாக்ஷீ ஸ்புரணமமலம் தத் த்வமஸி ஹி ॥*

असौ देहः–இந்த சரீரம், त्वं नहि–நீ அல்ல. असुरपि–பிராணனும், अक्षनिकरो वापि–இந்திரியங்களின் கூட்டமும், मनो वा–மனதும், बुद्धिर्वा–புத்தியும், तथा–அப்படியே, अहंकृतिरपि–அஹங்காரமும, एषां संघातश्च–இவைகளின் கூட்டமும், क्वचिदपि–ஒருக்காலும், त्वमु न भवति–நீ அல்ல. विद्वन्–அறிவுள்ளவனே, शृणु–கேள். यत्–எது, परं–மேலானதும், एतेषां साक्षी–இவைகளுக்கு ஸாக்ஷியாகவும், स्फुरणं–ஞான ஸ்வரூபமாகவும், अमलं–தோஷங்கள் அறறதாகவும் உள்ளதோ, तत्–அந்த பிரஹ்மமாக, त्वं–நீ, असि–இருக்கிறாய்.

இந்த தேஹம் நீ அல்ல; பிராணனும், இந்திரியங்களின் கூட்டங்களும், மனதோ, புத்தியோ, அப்படியே அஹங்காரமோ, இவைகளெல்லாம் சேர்ந்தோ, ஒருபொழுதும் நீயாகமாட்டாது, ஹே வித்வன், கேள். இவைகளுக்

கெல்லாம் எது மேலாக இருந்துகொண்டு ஸாக்ஷியாகவும், பிரகாசமாகவும், நிர்மலமாகவும் இருக்கிறதோ, அந்த பிரஹ்மமே நீ. (773)

यत् जायते वस्तु तदेव वर्धते
तदेव मृत्युं समुपैति काले ।
जन्मैव ते नास्ति तथैव मृत्युः
नास्त्येव नित्यस्य विभोः अजस्य ॥ ७७४ ॥

யத் ஜாயதே வஸ்து ததேவ வர்த்ததே
ததேவ ம்ருத்யும் ஸமுபைதி காலே।
ஜந்மைவ தே நாஸ்தி ததைவ ம்ருத்யுர்
நாஸ்த்யேவ நித்யஸ்ய விபோரஜஸ்ய ||

यत् वस्तु-எந்த வஸ்து, जायते-உண்டாகிறதோ, तदेव-அதுதான், वर्धते-வளருகிறது. तदेव-அதுதான், काले-காலத்தில், मृत्युं-நாசத்தை, समुपैति- அடைகிறது. नित्यस्य-எக்காலத்திலுமுள்ளவனும், विभोः-வியாபகனும், अजस्य-உண்டாகாதவனுமான, ते-உனக்கு, जन्मैव नास्ति-பிறவியே இல்லை. तथैव-அப்படியே, मृत्युः नास्त्येव-மரணம் இல்லவே இல்லை.

எந்த வஸ்து பிறக்கிறதோ, அதுதான் வளர்கிறது, அது தான் காலத்தில் மரணத்தையடைகிறது. நித்யனும் வியாபகனும் பிறவியற்றவனும் இருக்கும் உனக்குப்பிறப்பேகிடையாது அப்படியே மரணமும் கிடையாது. (774)

य एष देहो जनितः स एव
समेधते नश्यति कर्मयोगात् ।
त्वं एतदीयासु अखिलासु अवस्थासु
अवस्थितः साक्षी असि बोधमात्रः ॥ ७७५ ॥

ய ஏஷ தேஹோ ஜநித: ஸ ஏவ
ஸமேததே நச்யதி கர்ம யோகாத் ।

த்வமேதத்தீயாஸ்வகிலா ஸ்வவஸ்த்தா
ஸ்வவஸ்த்தித: ஸாக்ஷ்யஸி போத மாத்ர: ||

**य एष देहः**-எந்த இந்த தேஹம், **जनितः**-உண்டானதோ, **स एव**-அதுதான், **कर्मयोगात्**-கர்ம ஸம்பந்தத்தால், **समेधते**-வளருகிறது. **नश्यति**-நாசமடைகிறது. **बोधमात्रः**-ஞான ஸ்வரூபமாகமட்டுமுள்ள, **त्वं**-நீ, **एतदीयासु**-இந்த சரீரத்தைச் சேர்ந்ததான, **अखिलासु अवस्थासु**-எல்லா நிலைகளிலும், **अवस्थितः**-இருந்துகொண்டு, **साक्षी असि**-ஸாக்ஷியாக இருக்கிறாய்.

எந்த இந்த தேகம் பிறந்ததோ. அதுதான் கர்மாவின் ஸம்பந்தத்தினால் விருத்தியடைகிறது, அதுதான் நாசத்தை யடைகிறது. ஞானத்தை மட்டும் ஸ்வரூபமாகக்கொண்ட நீ இந்த சரீரத்தின் எல்லா நிலைகளிலும் இருந்துகொண்டு சாக்ஷி யாக அவற்றில் ஸம்பந்தப்படாமல் அவைகளை அறிகிறவனாக இருந்துவருகிறாய்.
(775)

यत् स्वप्रकाशं अखिलात्मकं आसुषुप्तेः
एकात्मनाऽहं अहं इत्यवभाति नित्यम् ।
बुद्धेः समस्तविकृतेः अविकारि बोद्धृ
यत् ब्रह्म तत् त्वं असि केवलबोधमात्रम् ॥ ७७६ ॥

யத் ஸ்வப்ரகாசமகிலாத்மகமா ஸுஷுப்தே
ரேகாத்மநாஹமஹமித்யவபாதி நித்யம் |
புத்தே: ஸமஸ்த விக்ருதேரவிகாரி போத்த்ரு
யத் ப்ரஹ்ம தத்த்வமஸி கேவல போத மாத்ரம் ||

**स्वप्रकाशं**-தானாகவே பிரகாசிக்கிறதாயும், **अखिलात्मकं**-எல்லா வஸ்துவாக உள்ளதுமான, **यत्**-எது, **आ सुषुप्तेः**-ஸுஷுப்தி வரை, **नित्यं**-எப்பொழுதும், **एकात्मना**-ஒரேவிதமாக, **अहं अहं इति**-நான் நான் என்று, **अवभाति**-பிரகாசிக்கிறதோ, **यत्**-எது, **अविकारि**-விகாரமடையாததாய்க்கொண்டு, **बुद्धेः**-புத்தியின், **समस्तविकृतेः**-எல்லா விகாரத்தை

யும், बोद्‍धृ-அறிகிறதோ, तत्-அந்த, केवलबोधमात्रं-சுத்த ஞான ஸ்வரூபமாக மட்டுமுள்ள, ब्रह्म-பிரஹ்மமாக, त्वं असि-நீ இருக்கிறாய்.

எது ஸ்வயம் பிரகாசமாய் எல்லாமாக இருந்து கொண்டு ஜாக்ரத் ஸ்வப்னம் ஸுஷுப்தி என்னும் மூன்று நிலைகளிலும் எப்பொழுதும் ஒரே மாதிரியாக நான் நான் என்று பிரகாசிக்கிறதோ, எது எவ்வித விகாரத்தையும் தான் அடையாமல் புத்தியினுடைய எல்லா விகாரங்களையும் அறிகிறதோ, அந்த சுத்த ஞான ஸ்வரூபமாகவே யிருக்கும் பிரஹ்மமே நீ. (776)

स्वात्मनि अनस्तमय संविदि कल्पितस्य
व्योमादिसर्वजगतः प्रददाति सत्ताम् ।
स्फूर्तिं स्वकीयमहसा वितनोति साक्षात्
यत् ब्रह्म तत् त्वं असि केवलबोधमात्रम् ॥ ७७७ ॥

ஸ்வாத்மந்யநஸ்தமய ஸம்விதி கல்பிதஸ்ய
வ்யோமாதி ஸர்வஜகதஃ ப்ரததாதி ஸத்தாம் ।
ஸ்பூர்திம் ஸ்வகீயமஹஸா விதநோதி ஸாக்ஷாத்
யத் ப்ரஹ்ம தத் த்வமஸி கேவல போதமாத்ரம் ॥

यत्-எது, अनस्तमयसंविदि-நித்ய ஞான ஸ்வரூபமான, स्वात्मनि-தன் ஸ்வரூபத்தில், कल्पितस्य-ஆரோபிக்கப்பட்ட, व्योमादिसर्वजगतः-ஆகாசம் முதலான எல்லா பிரபஞ்சத்திற்கும். सत्तां-இருப்பை, प्रददाति-கொடுக்கிறதோ; स्वकीयमहसा-தன்னுடையதான பிரகாசத்தால், साक्षात्-நேராக, स्फूर्तिं-பிரகாசத்தை, वितनोति-கொடுக்கிறதோ, तत्-அந்த, केवलबोधमात्रं-சுத்தஞான ஸ்வரூபமாக மட்டுமுள்ள, ब्रह्म-ப்ரஹ்மமாக, त्वं-நீ, असि-இருக்கிறாய்.

எந்த பிரஹ்மமானது நித்ய ஞான ஸ்வரூபமான தன்னிடத்தில் கல்பிக்கப் பட்டிருக்கிற ஆகாசம் முதலிய எல்லா ஜகத்திற்கும் இருக்கும் தன்மையைக் கொடுக்கிறதோ, எது ஸாக்ஷாத்தாகத் தன்னுடைய பிரகாசத்தினால் அந்த ஜகத்திற்குப் பிரகாசத்தைக் கொடுக்கிறதோ, அந்த சுத்த ஞான

மாகவே இருக்கும் பிரஹ்மம் நீ. பிரபஞ்சம் இருப்பதும் விளங்குவதும் பிரஹ்மத்தால்தான். அதிஷ்டானமான ப்ரஹ்மத்தின் ஸத்தையும் ஸ்புரணமும்தான் ஆரோபிதமான பிரபஞ்சத்தில் தோன்றுகின்றன. ப்ரபஞ்சத்திற்குத் தனியாக ஸத்தையும் ஸ்புரணமும் கிடையாது. (777)

सम्यक् समाधिनिरतैः विमलान्तरङ्गे
साक्षात् अवेक्ष्य निजतत्त्वं अपारसौख्यम् ।
संतुष्यते परमहंसकुलैः अजस्रं
यत् ब्रह्म तत् त्वं असि केवलबोधमात्रम् ॥ ७७८ ॥

ஸம்யக் ஸமாதி நிரதைர் விமலாந்தரங்கே
ஸாக்ஷாதவேக்ஷ்ய நிஜதத்வமபாரஸௌக்யம்।
ஸந்துஷ்யதே பரமஹம்ஸ குலைரஜஸ்ரம்
யத் ப்ரஹ்ம தத் த்வமஸி கேவல போதமாத்ரம் ॥

सम्यक्-நன்கு, समाधिनिरतैः-ஸமாதியில் ஈடுபட்ட, परमहंसकुलैः-பரமஹம்ஸ கோஷ்டியார்களால், विमलान्तरङ्गे-சுத்தமான மனதில், निजतत्त्वं-தனது உண்மையான தத்வமாயும், अपारसौख्यं-எல்லையற்ற ஆனந்தமாயுமுள்ள, यत्-எந்த ब्रह्म-ப்ரஹ்மத்தை, साक्षात् अवेक्ष्य-நேரில் பார்த்து, अजस्रं-எப்பொழுதும், सन्तुष्यते-ஸந்தோஷிக்கப்படுகிறதோ, तत्-அந்த, केवलबोधमात्रं-சுத்த ஞான ஸ்வரூபமாக மட்டுமுள்ள, ब्रह्म-ப்ரம்மமாக, त्वं असि-நீ இருக்கிறாய்.

நன்கு ஸமாதி நிலையில் ஈடுபட்டிருக்கும் பரமஹம்ஸ ஸந்யாஸி கோஷ்டியார்களால் நிர்மலமான மனத்தில் தங்களுடைய வாஸ்தவ தத்வமாயும் எல்லையற்ற ஆனந்தமாயும் உள்ள எந்த ப்ரஹ்மத்தை ஸாக்ஷாத்தாகப் பார்த்து எப்பொழுதும் ஸந்தோஷம் அடையப்படுகிறதோ, அந்த சுத்தஞான ஸ்வரூபமாகவே இருக்கும் ப்ரஹ்மம் நீ. (778)

अन्तर्बहिः स्वयं अखण्डितं एकरूपं
आरोपितार्थवत् उदञ्चति मूढबुद्धेः ।

मृत्स्नादिवत् विगतविक्रियं आत्मवेद्यं
यत् ब्रह्म तत् त्वं असि केवलबोधमात्रम् ॥ ७७९ ॥

அந்தர் பஹி: ஸ்வயமகண்டிதமேகரூபம்
ஆரோபிதார்த்தவதுதஞ்சதி மூடபுத்தே: ।
ம்ருத்ஸ்நாதிவத் விகத விக்ரியமாத்ம வேத்யம்
யத் ப்ரஹ்ம தத் த்வமஸி கேவல போதமாத்ரம் ॥

अन्तर्बहिः – உள்ளேயும் வெளியிலும், स्वयं – தான், अखण्डितं – பிரிவுபடாததும், एकरूपं-ஒரே ஸ்வரூபமாக உள்ளதும், विगतविक्रियं-விகாரமில்லாததும், आत्मवेद्यं-தன்னாலேயே அறியத்தக்கதுமான, यत्-எது, मूढबुद्धेः-புத்திமோஹம் கொண்டவனுக்கு, मृत्स्नादिवत्-மண் முதலியவை போல், आरोपितार्थवत् – கல்பிக்கப்பட்டவஸ்து போல், उदञ्चति-தோன்றுகிறதோ, तत्-அந்த, केवलबोधमात्रं-சுத்த ஞானமாகயட்டுமுள்ள, ब्रह्म-ப்ரஹ்மமாக, त्वं-நீ, असि-இருக்கிறாய்.

உள்ளும் வெளியும் எங்கும் பரவிப் பிரிவு இல்லாமல் ஒரே ஸ்வரூபமாயிருக்கும் ப்ரஹ்மம் மாறுதலடையாதது. தன்னாலேயேதான் அறியத்தக்கது சுத்தஞான ஸ்வரூபம். இதில் தான் எல்லா ப்ரபஞ்சமும் ஆரோபிதம். மூடர்களுக்கு இந்த ப்ரஹ்மமே ப்ரபஞ்சம்போலக் காக்ஷியளிக்கிறது. இந்த ப்ரஹ்மம்தான் நீ. மண்ணைத் தவிர குடம் வேறு அல்ல, மண்ணில் குடம் ஆரோபிதம். ஆனாலும் அந்த மண் குடம் போல காக்ஷியளிக்கிறது. இது போல பிரபஞ்சம் என்பது தனித்த பொருளில்லாவிட்டாலும் பிரஹ்மத்தை அறியாத மூடருக்கு அந்த பிரஹ்மமே பிரபஞ்சம் போல தோன்றுகிறது.

श्रुत्युक्तं अव्ययं अनन्तं अनादिमध्यं
अव्यक्तं अक्षरं अनाश्रयं अप्रमेयम् ।
आनन्दसद्घनं अनामयं अद्वितीयं
यत् ब्रह्म तत् त्वं असि केवलबोधमात्रम् ॥ ७८० ॥

ச்ருத்யுக்தமவ்யயமநந்தமநாதிமத்யம்
அவ்யக்தமக்ஷரமநாச்ரயமப்ரமேயம் ।

ஆனந்த ஸத்கநமநாமயமத்விதீயம்
யத் ப்ரஹ்ம தத் த்வமஸி கேவல போதமாத்ரம் ॥

यत्–எது, श्रुत्युक्तं–உபநிஷத்தில் கூறப்பட்டதாயும், अव्ययं–குறைவில்லாததாயும், अनन्तं–எல்லை இல்லாததாயும், अनादिमध्यं – முதல் நடுவில்லாததாயும், अव्यक्तं – ஸூக்ஷ்மமாயும், अक्षरं– அழிவில்லாததாயும், अनाश्रयं– ஆதாரமில்லாததாயும், अप्रमेयं – அறிய முடியாததாயும், आनन्दसद्घनं– ஆனந்தம் இருப்பு இவைகளின் கெட்டியான ஸ்வரூபமாயும், अनामयं–தோஷமற்றதாயும், अद्वितीयं–இரண்டாவது வஸ்து அற்றதாயும், केवलबोधमात्रं–சுத்த ஞானஸ்வரூபமாகவும் உள்ளதோ, तत् ब्रह्म–அந்த ப்ரஹ்மமாக, त्वं–நீ, असि– இருக்கிறாய்.

எந்த பிரஹ்மம் வேதத்தில் சொல்லப்பட்டிருக்கிறதோ, குறைவன்னியில், எல்லையன்னியில், ஆதியும் மத்தியுமன்னியில், வியக்தமில்லாமல், முடிவில்லாமல், வேறு ஆசிரயமன்னியில். ஒருவித பிரமாணத்திற்கும் விஷயமில்லாமல், எவ்வித தோஷமும் அற்றதாய், இரண்டாவது அற்றதாய், ஆனந்தகனமாய் ஸத்கனமாய் இருக்கிறதோ, அந்த சுத்த ஞானஸ்வரூபமாகவே இருக்கும் பிரஹ்மம் நீ. (780)

शरीरतद्योगतदीयधर्माद्यारोपणं भ्रान्तिवशात् त्वयीदम् ।
न वस्तुतः किंचित् अतस्त्वजः त्वं मृत्योः भयं क्वास्ति तव असि पूर्णः ॥

சரீர தத்யோக ததீயதர்மாத்
யாரோபணம் ப்ராந்திவசாத் த்வயீதம் ।
ந வஸ்துதः கிஞ்சிததஸ்த்வஜஸ்த்வம்
ம்ருத்யோர் பயம் க்வாஸ்தி தவாஸி பூர்ண: ॥

त्वयि–உன்னிடத்தில், इदं–இந்த, शरीरतद्योगतदीयधर्माद्यारोपणं-சரீரம், அதன் ஸம்பந்தம், அதனுடைய தர்மங்கள் இவைகளின் தோற்றம், भ्रान्तिवशात्–பிரமத்தால் ஏற்பட்டு உள்ளது. वस्तुतः – வாஸ்தவத்தில், न किंचित् – ஒன்றும் கிடையாது. अतः–ஆகையால், त्वं–நீ, अजः–பிறவியில்லா

தவன், तव-உனக்கு, मृत्योः-மரணத்திலிருந்து, भयं-பயம், क्वास्ति-எங்கே இருக்கிறது? पूर्णः असि-(நீ) வியாபகனாக இருக்கிறாய்.

சரீரம், அதன் ஸம்பந்தம், அதன் தர்மங்கள், முதலியதின் இந்த ஆரோபணம் (ஏற்றுதல்) உன்னிடத்தில் ஏற்பட்டிருப்பது பிராந்தியினால்தான்; வாஸ்தவத்தில் ஒன்றும் கிடையாது. ஆகையால் நீ பிறவியற்றவன். எங்கிருந்து உனக்கு மரண விஷயமாக பயம் ஏற்படும்? நீ பரிபூர்ணன்.

यत् यत् दृष्टं भ्रान्तिमत्या स्वदृष्ट्या
तत् तत् सम्यग्वस्तुदृष्ट्या त्वमेव ।
त्वत्तो नान्यत् वस्तु किंचित् तु लोके
कस्मात् भीतिस्ते भवेत् अद्वयस्य ॥ ७८२ ॥

யத் யத் த்ருஷ்டம் ப்ராந்திமத்யா ஸ்வத்ருஷ்ட்யா
தத் தத் ஸம்யக் வஸ்து த்ருஷ்ட்யா த்வமேவ ।
த்வத்தோ நாந்யத் வஸ்து கிஞ்சித்து லோகே
கஸ்மாத் பீதிஸ் தே பவேதத்வயஸ்ய ॥

भ्रान्तिमत्या-பிராந்தியோடு கூடிய, स्वदृष्ट्या-தன் பார்வையால், यत यत् दृष्टं-எது எது பார்க்கப்பட்டதோ, तत् तत्-அது அது, सम्यग्वस्तुदृष्ट्या - உண்மையான நல்ல பார்வையால், त्वमेव-நீ தான், लोके-உலகத்தில், त्वत्तः-உன்னைக் காட்டிலும், अन्यत्-வேறான, वस्तु किंचित्-வஸ்து ஒன்றும், न-இல்லை, अद्वयस्य - இரண்டற்ற, ते - உனக்கு, कस्मात्-எதிலிருந்து, भीतिः भवेत्-பயம் உண்டாகும்.

பிராந்தியோடு கூடின தன் பார்வையினால் எது எது உன்னைக்காட்டிலும் வேறாக பார்க்கப்பட்டதோ, அது அது உண்மையான நல்ல பார்வையால் பார்க்கப்பட்டால் நீயேயாகும். உலகத்தில் உன்னைத் தவிர வேறு எவ்வித வஸ்துவும் கிடையாது. இரண்டற்றதாயிருக்கிற உனக்கு எதிலிருந்து பயம் ஏற்படக்கூடும்? (782)

पश्यतस्त्वहमेवेदं सर्वं इत्यात्मनाऽखिलम् ।
भयं स्यात् विदुषः कस्मात् स्वस्मान्न भयमिष्यते ॥ ७८३ ॥

பச்யதஸ்த்வஹமேவேதம் ஸர்வமித்யாத்ம நாऽகிலம் ।
பயம் ஸ்யாத் விதுஷ: கஸ்மாத் ஸ்வஸ்மாத் ந
பயமிஷ்யதே ॥

इदं सर्वं-இது எல்லாம், अहमेव-நான்தான், इति-என்று, अखिलं-எல்லாவற்றையும், आत्मना-தன் ஸ்வரூபமாக, पश्यतः-பார்க்கிற, विदुषः-வித்வானுக்கு, कस्मात्-எதனிடமிருந்து, भयं स्यात्-பயம் ஏற்படும்? स्वस्मात्-தன்னிடமிருந்து, भयं-பயம், न इष्यते-ஒப்புக்கொள்ளப் படுகிறதில்லை.

"இது எல்லாம் நான் தான்" என்று எல்லாவற்றையும் தன் ஸ்வரூபமாகப் பார்க்கிற வித்வானுக்கு எதிலிருந்து எந்த காரணத்தினால் பயம் ஏற்பட முடியும்? பயத்தைக்கொடுக்கும் வேறு பொருள் ஒன்றுமில்லையே? தன்னிடத்திலிருந்தே பயம் என்பதை ஒருவரும் ஒப்புக்கொள்வதில்லை. (783)

तस्मात् त्वं अभयं नित्यं केवलानन्दलक्षणम् ।
निष्कलं निष्क्रियं शान्तं ब्रह्मैवासि सदाऽद्वयम् ॥ ७८४ ॥

தஸ்மாத் த்வமபயம் நித்யம் கேவலானந்தலக்ஷணம் ।
நிஷ்கலம் நிஷ்க்ரியம் சாந்தம் ப்ரஹ்மைவாஸி
ஸதாऽத்வயம் ॥

तस्मात्-ஆகையால், त्वं-நீ, सदा-எப்பொழுதும், अभयं-பயமற்றதும், नित्यं-அழிவற்றதும், केवलानन्दलक्षणं-சுத்த ஆனந்தஸ்வரூபமாயும், निष्कलं-அவயவங்கள் அற்றதும், निष्क्रियं-செய்கைகள் அற்றதும், शान्तं-சாந்தமாயும், अद्वयं-இரண்டற்றதாயுமுள்ள, ब्रह्म-பிரஹ்மமாகவே, असि-இருக்கிறாய்.

ஆகையினால் நீ பயமற்றதாய், நித்யமாய், சுத்த ஆனந்த ஸ்வரூபமாய், அவயவங்கள் அற்றதாய், எவ்வித கிரியையுமற்றதாய், சாந்தமாய், இரண்டற்றதாய், உள்ள பிரஹ்மமாகவே எப்பொழுதும் இருக்கிறாய். (784)

ज्ञातृज्ञानज्ञेय विहीनं ज्ञातुरभिन्नं ज्ञानमखण्डम् ।
ज्ञेयाज्ञेयत्वादिविमुक्तं शुद्धं बुद्धं तत्त्वं असि त्वम् ॥ ७८५ ॥

ஞாத்ரு ஞான ஞேய விஹீநம் ஞாதுரபிந்நம்
ஞானமகண்டம் ।
ஞேயா ஞேயத்வாதி விமுக்தம் சுத்தம் புத்தம்
தத் த்வமஸி த்வம் ॥

ज्ञातृज्ञानज्ञेयविहीनं-அறிகிறவன், அறிவு, அறியப்படும் வஸ்து என்ற பேதமற்றதாயும், ज्ञातुः अभिन्नं-அறிகிறவனைக் காட்டிலும் வேறுபடாததாயும், अखण्डं ज्ञानं-பிறிவற்ற ஞானஸ்வரூபமாயும், ज्ञेयाज्ञेयत्वादिविमुक्तं - அறியத்தக்கது, அறியத்தகாதது முதலிய தன்மைகளிலிருந்து விடுபட்டதாயும், शुद्धं-தோஷமற்றதும், बुद्धं-ஞானஸ்வரூபமான, तत्त्वं-உண்மைப் பொருளாக, त्वं-நீ, असि-இருக்கிறாய்.

நீ, அறிகிறவன் அறிவு அறியப்படும் வஸ்து என்ற பேதமற்றதாய், அறிகிறவனிடமிருந்து வேறுபடாததாய், துண்டுபடாத ஞானஸ்வரூபமாய், அறியக்கூடிய தன்மை அறியக்கூடாத தன்மை முதலியதிலிருந்து விடுபட்டதாய், சுத்தமாய், புத்தமாய், உள்ள தத்வமாகவே (உண்மைப் பொருளான ப்ரஹ்மமாகவே) இருக்கிறாய். (785)

अन्तःप्रज्ञत्वादिविकल्पैः अस्पृष्टं यत् तत् दृशिमात्रम् ।
सत्तामात्रं समरसं एकं शुद्धं बुद्धं तत्त्वं असि त्वम् ॥ ७८६ ॥

அந்த: ப்ரஜ்ஞத்வாதி விகல்பை ரஸ்ப்ருஷ்டம் யத்
தத் த்ருசிமாத்ரம் ।
ஸத்தாமாத்ரம் ஸமரஸமேகம் சுத்தம் புத்தம் தத்
த்வமஸி த்வம் ॥

यत्-எது, अन्तःप्रज्ञत्वादिविकल्पैः-உள்ளறிவுள்ள தன்மை ('ஸ்வப்னம்) முதலான கல்பனைகளுடன், अस्पृष्टं தொடர்பு இல்லாததாயும், दृशिमात्रं ஞானஸ்வரூப மாத்திரமாயும், सत्तामात्रं-இருப்பு என்பதையே ஸ்வரூபமாகக்கொண்டதும்,

समरसं-ஒரே ரஸமாயும், एकं-ஒன்றாயும், शुद्धं-சுத்தமாயும், बुद्धं-ஞானஸ்வரூபமாயும் உள்ளதோ, तत्-அந்த, सत्-உண்மைப் பொருளான பிரஹ்மமாக, त्वं-நீ, असि-இருக்கிறாய்.

உள்ளே அறிவுள்ள தன்மை (ஸ்வப்னம்) வெளிஅறிவுள்ள தன்மை (ஜாகரம்) கெட்டியான அறிவுள்ள தன்மை (ஸுஷுப்தி) என்னும் கல்பனைகளில்லாததும் (அவஸ்தாத்ரய ஸம்பந்தமற்றதும்) ஞானமாத்திரமாயும், ஸத்தா (இருக்கும் தன்மை) மாத்திரமாயும், ஏகரஸமாயும் (தனக்குள் பேதமில்லாமல் ஒரேமாதிரியிருப்பதாயும்) ஒரே வஸ்துவாகவும், சுத்தமாயும், புத்தமாயும், எது உள்ளதோ அந்த தத்வமாகவே நீ இருக்கிறாய். (786)

सर्वाकारं सर्वं असर्वं सर्वनिषेधावधिभूतं यत् ।
सत्यं शाश्वतं एकं अनन्तं शुद्धं बुद्धं तत्त्वं असि त्वम् ॥७८७॥

ஸர்வாகாரம் ஸர்வம் அஸர்வம் ஸர்வ நிஷேதா
வதிபூதம் யத் ।
ஸத்யம் சாச்வதமேகமநந்தம் சுத்தம் புத்தம்
தத் தவமஸி த்வம் ॥

यत्-எது, सर्वाकारं-எல்லா உருவமாயும், सर्वं-எல்லாமாயும், असर्वं-எல்லாமற்றதாயும், सर्वनिषेधावधिभूतं-எல்லாவற்றையும் மறுப்பதற்கு எல்லையாக இருப்பதாயும், सत्यं-உண்மையாகவும், शाश्वतं-எப்பொழுதும் உள்ளதாயும், एकं-ஒன்றாயும், अनन्तं - எல்லையற்றதாயும், शुद्धं-தோஷமற்றதாயும், बुद्धं-ஞானஸ்வரூபமாயும் உள்ளதோ, (அந்த), तत्त्वं-தத்வமாக, त्वं-நீ, असि-இருக்கிறாய்.

எல்லா உருவமாயும், எல்லாவற்றின் ஸ்வரூபமாயும் உண்மையில் எல்லாமற்றதாயும், எல்லாவற்றையும் மறுக்கும் போது எல்லையாயிருப்பதாயும், ஸத்யமாயும், சாசுவதமாயும், ஒன்றாயும், எல்லையற்றதாயும், சுத்தமாயும் புத்தமாயும், உள்ள தத்வம் எதுவோ, அதுவாகவே நீ இருக்கிறாய். (787)

नित्यानन्दाखण्डैकरसं निष्कलं अक्रियं अस्तविकारम् ।
प्रत्यगभिन्नं परं अव्यक्तं शुद्धं बुद्धं तत्त्वं असि त्वम् ॥ ७८८ ॥

நித்யாநந்தாகண்டைகரஸம் நிஷ்கலமக்ரிய
மஸ்த விகாரம் ।
ப்ரத்யகபிந்நம் பரமவ்யக்தம் சுத்தம் புத்தம்
தத் த்வமஸி த்வம் ॥

नित्यानन्दाखण्डैकरसं–நித்யமாயும் ஆனந்தமாயும் பிரிவு இல்லாத ஒரே ஸ்வரூபமாயும், निष्कलं–அவயவங்களற்றதாயும், अक्रियं–க்ரியைகளற்றதாயும், अस्तविकारं–மாறுதல் அற்றதாயும், प्रत्यगभिन्नं பிரத்யகாத்மாவைக் காட்டிலும் வேறாக இல்லாததாயும், परं–மேலானதாயும், अव्यक्तं–ஸூக்ஷ்மமாயும், शुद्धं–சுத்தமாயும், बुद्धं–புத்தமாயும் உள்ள, तत्त्वं–தத்வமாக, त्वं நீ, असि–இருக்கிறாய்.

நித்யமாய் ஆனந்தமாய் துண்டு படாமல் ஏகரஸமாய், அம்சங்களற்றதாய், கிரியை யற்றதாய், மாறுதலற்றதாய் பிரத்யகாத்மாவிலிருந்து வேறுபடாததாய். மேலானதாய், வியக்தமில்லாததாய் (ஸூக்ஷ்மமாய்) சுத்தமாய், புத்தமாய், உள்ள தத்வமாகவே நீ இருக்கிறாய். (788)

त्वं प्रत्यस्ताशेषविशेषं व्योमेवान्तर्बहिरपि पूर्णम् ।
ब्रह्मानन्दं परं अद्वैतं शुद्धं बुद्धं तत्त्वं असि त्वम् ॥ ७८९ ॥

த்வம் ப்ரத்யஸ்தாசேஷ விசேஷ: வ்யோமேவாந்தர்
பஹிரபி பூர்ணம் ।
ப்ரஹ்மாநந்தம் பரமத்வைதம் சுத்தம் புத்தம் தத் த்வமஸி
த்வம் ॥

त्वं–நீ, प्रत्यस्ताशेषविशेषं எல்லா விசேஷங்களும் நீங்கியதாயும், व्योमेव – ஆகாசம்போல், अन्तर्बहिरपि – உள்ளும் வெளியும், पूर्णं–நிறைந்ததாயும், ब्रह्म-மிகப் பெரியதாயும், आनन्दं–ஆனந்தமாயும், परं–மேலானதாயும், अद्वैतं–இரண்டற்றதாயும், शुद्धं–சுத்தமாயும், बुद्धं–ஞான ஸ்வரூபமாயும் உள்ள, तत्त्वं–தத்வமாக, असि–இருக்கிறாய்.

தனித்துக் காட்டக்கூடிய எல்லா விசேஷங்களும் நீங்கிய தாய் ஆகாசம்மாதிரி உள்ளேயும் வெளியிலும்கூட நிறைந்த தாய் பிரஹ்மமாய், ஆனந்தமாய், மேலானதாய், இரண்டென்ற தன்மை யற்றதாய், சுத்தமாய், புத்தமாய், உள்ள தத்வமாகவே நீ இருக்கிறாய். (789)

ब्रह्मैवाहं अहं ब्रह्म निर्गुणं निर्विकल्पकम् ।
इत्येवाखण्डया वृत्त्या तिष्ठ ब्रह्मणि निष्क्रिये ॥ ७९० ॥

*ப்ரஹ்மைவாஹமஹம் ப்ரஹ்ம நிர்குணம் நிர்விகல்பகம் ।*
*இத்யேவாகண்டயா வ்ருத்த்யா திஷ்ட ப்ரஹ்மணி நிஷ்க்ரியே ॥*

ब्रह्मैव-ப்ரஹ்மமே, अहं-நான், अहं-நான், निर्गुणं-குணங்களற்றதும், निर्विकल्पकं - கல்பனைகளற்றதுமான, ब्रह्म - ப்ரஹ்மம், इति-என்ற, अखण्डया वृत्त्यैव-பிரிவு இல்லாமல் தொடர்ந்து வருகின்ற ஒரே மனோவிருத்தியுடனேயே, निष्क्रिये-க்ரியைகளற்ற, ब्रह्मणि - ப்ரஹ்மத்தில், तिष्ठ-நிலைத்திரு.

"பிரஹ்மமே நான், நான் குணமற்றதாய் எவ்விதவிகல்பமுமற்றதாய் இருக்கும் பிரஹ்மம்" என்ற அகண்டமான மனோவிருத்தியுடன் (நடுவில் வேறு விருத்திகள் வர இடம் கொடுக்காமல் இந்த ஒரே விருத்தியே தொடர்ந்திருக்கும்படி) கிரியையற்ற பிரஹ்மத்திலேயே நிலைத்திரு. (790)

अखण्डामेवैतां घटितपरमानन्दलहरीं
परिध्वस्तद्वैतप्रमितिं अमलां वृत्तिं अनिशम् ।
अमुञ्चानः स्वात्मनि अनुपमसुखे ब्रह्मणि परे
रमस्व प्रारब्धं क्षपय सुखवृत्त्या त्वं अनया ॥ ७९१ ॥

*அகண்டாமேவைதாம் கடித பரமானந்த லஹரீம்*
*பரித்வஸ்த த்வைத ப்ரமிதிமமலாம் வ்ருத்திமநிசம் ।*
*அமுஞ்சாந: ஸ்வாத்மந்யநுபமஸுகே ப்ரஹ்மணி பரே*
*ரமஸ்வ ப்ராரப்தம் க்ஷபய ஸுகவ்ருத்த்யா த்வமநயா ॥*

**घटितपरमानन्दलहरी**-மேலான ஆனந்த அலைகளுடன் கூடியதும், **परिध्वस्तद्वैतप्रमिति**-இரண்டென்னும் தோற்றம் நீங்கியதும், **अमलां**-சுத்தமானதும், **अखण्डां**-பிரிவற்றதுமான, **एतां**-இந்த, **वृत्ति**-விருத்தியை, **अमुञ्चान एव**-விடாமலேயே, **स्वात्मनि**-தனது ஆத்மஸ்வரூபமாயும், **अनुपमसुखे**-எல்லையற்ற ஸுக ஸ்வரூபமுமான, **परे ब्रह्मणि**-பரப்ரஹ்மத்தில், **अनिशं**-எப்பொழுதும், **रमस्व**-இன்புற்று இரு, **त्वं**-நீ, **अनया**-இந்த, **सुखवृत्त्या**-ஆனந்தவிருத்தியுடனேயே, **प्रारब्धं**-ப்ராரப்தகர்மாவை, **क्षपय**-முடித்துக்கொள்.

உத்தமமான ஆநந்த அலைகளுடன் கூடியதாய், இரண்டாவதென்ற எண்ணமே போனதாய் நிர்மலமாயுள்ள இந்த இடையில்லாத விருத்தியையே விடாமலேயே; தனது ஆத்மஸ்வரூபமாய், நிகரற்ற ஸுகஸ்வரூபமாய் இருக்கும் மேலான ப்ரஹ்மத்தில் எப்பொழுதும் ரமித்துக்கொண்டிரு (இந்த ஜன்மாவில் அநுபவிக்கவேண்டியதாக ஆரம்பிக்கப்பட்டிருக்கும்) ப்ராரப்த கர்மாவை இந்த ஆனந்தவ்ருத்தியுடனேயே நீ தீர்த்துக்கொள்.

ब्रह्मानन्दरसास्वादतत्परेणैव चेतसा ।
समाधिनिष्ठितो भूत्वा तिष्ठ विद्वन् सदा मुने ॥ ७९२ ॥

*ப்ரஹ்மாநந்த ரஸாஸ்வாத தத்பரேணைவ சேதஸா ।*
*ஸமாதி நிஷ்டிதோ பூத்வா திஷ்ட வித்வன் ஸதா முநே ॥*

**विद्वन्**-அறிவுள்ளவனே, **मुने**-மனனம் செய்பவனே, **समाधिनिष्ठितो भूत्वा**-ஸமாதியில் (வேறு மனோவிருத்திகளைத் தடுப்பதில்) நிலைபெற்றவனாக இருந்துகொண்டு, **सदा**-எப்பொழுதும், **ब्रह्मानन्दरसास्वादतत्परेणैव चेतसा**-ப்ரஹ்மாநந்தத்தின் ரஸத்தை அநுபவிப்பதிலேயே ஈடுபட்ட மனத்துடன், **तिष्ठ**-இரு.

ஹே வித்வன், மனனம்செய்வதில் ஈடுபட்டவனே, ஸமாதி நிஷ்டையில் இருந்து வருபவனாய்க் கொண்டு பிரஹ்மத்தினுடைய ஆனந்த ரஸத்தை ருசித்து அநுபவிப்பதிலேயே நோக்கமுள்ள மனஸுடன் நீ எப்பொழுதும் இரு. (792)

(அ) இடையற்ற மனோவிருத்தி வேண்டுமென்றும் அதையே ஸமாதியென்ற பெயரால் குறிப்பிட்டும் குருசொன்னதால் அது விஷயமாக இன்னமும் விவரமாகத் தெரிந்து கொள்ளக் கருதி சிஷ்யன் கேட்கிறான் :—

शिष्यः —

अखण्डाख्या वृत्तिरेषा वाक्यार्थश्रुतिमात्रतः ।
श्रोतुः संजायते किं वा क्रियान्तरं अपेक्षते ॥ ७९३ ॥

समाधिः कः कतिविधः तत्सिद्धेः किमु साधनम् ।
समाधेः अन्तरायाः के सर्वमेतत् निरूप्यताम् ॥ ७९४ ॥

*சிஷ்ய: —*

அகண்டாக்யா வ்ருத்திரேஷா வாக்யார்த்த
ச்ருதிமாத்ரத: ।
ச்ரோது: ஸஞ்ஜாயதே கிம் வா க்ரியாந்தரமபேக்ஷதே ॥

ஸமாதி: க: கதிவிதஸ் தத்ஸித்தே: கிமு ஸாதனம் ।
ஸமாதேரந்தராயா: கே ஸர்வமேதத் நிரூப்யதாம ॥

श्रोतुः-கேட்கிறவனுக்கு, अखण्डाख्या-அகண்டம் என்று பெயருள்ள, एषा वृत्तिः-இந்த வ்ருத்தியானது, वाक्यार्थश्रुतिमात्रतः-வாக்யத்தின் அர்த்தத்தைக் கேட்பதால் மட்டும், संजायते-உண்டாகிறதா? किं वा-அல்லது, क्रियान्तरं-வேறு கர்மாவை, अपेक्षते-எதிர் பார்க்கிறதா? कः-எது, समाधिः-ஸமாதி कतिविधः-எத்தனை விதம்? तत्सिद्धेः-அந்த ஸமாதியின் ஸித்திக்கு, किमु साधनं-எது ஸாதனம்? समाधेः-ஸமாதிக்கு के-எவை, अन्तरायाः-விக்னங்கள்,? एतत् सर्वं-இது எல்லாம், निरूप्यतां-நிருபிக்கப்படவேண்டும்.

இந்த "அகண்டா" (இடையில்லாத) என்று சொல்லப்படும் விருத்தி வாக்கியத்தினுடைய அர்த்தத்தைக் கேட்டதினாலேயே கேட்பவனுக்கு உண்டாகிவிடுமா? அல்லது செய்ய வேண்டியதாக வேறு கார்யத்தை அபேக்ஷிக்கிறதா? ஸமாதி என்றால் என்ன? அது எத்தனை விதம்? அது ஸித்திப்பதற்கு

ஸாதனம் என்ன? ஸமாதிக்கு ஏற்படக்கூடிய இடைஞ்சல்கள் எதெல்லாம்? இந்த எல்லா விஷயத்தையும் நன்கு தெளிவு படுத்த வேண்டும். (793-794)

(அ) இக்கேள்விகளுக்கு பதில் சொல்வதற்குப் பூர்வாங்கமாக, யாருக்கு எப்பொழுது இந்த அகண்டமான வ்ருத்தி ஏற்படுமென்று சொல்லிவிட்டு, பின்னால் விவரமாக உபதேசிக்கிறார் :—

श्रीगुरुः —

मुख्यगौणादिभेदेन विद्यन्तेऽत्राधिकारिणः ।
तेषां प्रज्ञानुसारेण अखण्डा वृत्तिः उदेष्यति ॥ ७९५ ॥

ஸ்ரீ குரு: —

முக்ய கௌணாதி பேதேந வித்யந்தேऽத்ராதிகாரிண: ।
தேஷாம் ப்ரஜ்ஞாநுஸாரேணாகண்டா
வ்ருத்திருதேஷ்யதே ॥

अत्र - இந்த விஷயத்தில், मुख्यगौणादिभेदेन - முக்யர், கௌணர் முதலான வித்யாஸத்துடன், अधिकारिणः-(பல) அதிகாரிகள், विद्यन्ते-உள்ளனர், तेषां-அவர்களின், प्रज्ञानुसारेण- அறிவை யனுஸரித்து, अखण्डा-அகண்டமான, वृत्तिः- விருத்தி, उदेष्यति- உண்டாகும்.

இவ்விஷயத்தில் முக்கியர், கௌணர் முதலான வித்யாஸத்துடன் பலவிதமான அதிகாரிகள் இருக்கிறார்கள். அவர்களுடைய அறிவுக்குத் தக்கபடி அகண்டமான வ்ருத்தி ஏற்படுகிறது. (795)

श्रद्धाभक्तिपुरःसरेण विहितेनैवेश्वरं कर्मणा
संतोष्यार्जिततत्प्रसादमहिमा जन्मान्तरेष्वेव यः ।
नित्यानित्यविवेकतीव्रविरतिन्यासादिभिः साधनैः
युक्तः स श्रवणे सतां अभिमतो मुख्याधिकारी द्विजः ॥ ७९६ ॥

ச்ரத்தாபக்தி புரஸ்ஸரேண விஹிதேநைவேச்வரம் கர்மணா
ஸந்தோஷ்யார்ஜித தத்ப்ரஸாதமஹிமா
ஜந்மாந்தரேஷ்வேவ ய: ।

நித்யாநித்ய விவேக தீவ்ர விரதி ந்யாஸாதிபி: ஸாதனைர்
யுக்த: ஸ ச்ரவணே ஸதாமபிமதோ முக்யாதிகாரீ த்விஜ: ||

यः-எவன், श्रद्धाभक्तिपुरस्सरेण-சிரத்தை, பக்தி இவைகளுடன் கூடியதான, विहितेन-சாஸ்திரங்களில் விதிக்கப்பட்ட, कर्मणैव-கர்மாவினாலேயே, ईश्वरं-ஈசுவரனை, संतोष्य-பிரீதியடையும்படி செய்து, आर्जिततत्प्रसादमहिमा-சம்பாதிக்கப்பட்ட அவருடைய அருளின் மஹிமையுடையவனும், जन्मान्तरेष्वेव-மறுபிறப்புக்களிலேயே, नित्यानित्यविवेक-இது நித்யம், இது அநித்யம் என்ற விவேகம், तीव्रविरति-தீவ்ரமான வைராக்யம், न्यासादिभिः-ஸந்யாஸம் முதலான, साधनैः-ஸாதனங்களோடு, युक्तः-கூடியுள்ளானோ, सः-அந்த, द्विजः-த்விஜன், श्रवणे-சிரவணத்தில், मुख्याधिकारी-முக்யமான அதிகாரியாக, सतां अभिमतः - ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டவன்.

சிரத்தையையும் பக்தியையும் முன்னிட்டுக்கொண்டு செய்யும், சாஸ்திரத்தில் செய்யவேண்டுமென்று விதிக்கப்பட்டு இருக்கும் கர்மாவினாலேயே ஈசுவரனை ஸந்தோஷமடையச் செய்து, அவருடைய பிரஸாதத்தை ஸம்பாதித்து அந்தப் பெருமையுடன் இருப்பவனும், வேறு பிறவிகளிலேயே நித்யம் அநித்யம் என்ற விவேகம், தீவ்ரமான வைராக்யம், ஸந்யாஸம் முதலான ஸாதனங்களுடன் சேர்ந்தவனும் எந்தப் பிராஹ்மணன் இருக்கிறானோ, அவன்தான் சிரவணத்தில் முக்யமான அதிகாரியென்று ஸாதுக்களால் மதிக்கப்படுகிறான்.

[ இந்த ச்லோகத்தில், இதுவரை சொன்ன ஸகல ஸாதனங்களையும் ஒருங்கே சேர்த்துச் சொல்லியிருப்பது கவனிக்கத்தக்கது. முதலில் சிரத்தையும் பக்தியும், பிறகு விஹிதகர்மாநுஷ்டானம், அதனாலேயே பகவானுடைய ப்ரீதியை ஸம்பாதித்தல், இவை எல்லாம் அஸ்திவாரம். இது ஏற்படுவதற்கே பல ஜன்மாக்கள் வேண்டியிருக்கும். பிறகு விவேகம், வைராக்யம், சமாதிஷட்கம், முமுக்ஷுதையாகிய ஸாதனசதுஷ்டய ஸம்பத்திருக்க வேண்டும். இவ்வளவும் இருந்தால்தான் வேதாந்த சிரவணத்திற்கே யோக்யதை உள்ளவனாக இருக்கமுடியும். இவ்வளவு ஸாதனங்களும்

ப்ராஹ்மணனிடத்தில்தான் தங்கு இருக்கக்கூடியதால் ப்ராஹ்மணனை முக்யமான அதிகாரி என்று சொல்லப்பட்டிருக்கிறது. முன் சுலோகத்தில் கண்ட கௌண அதிகாரியைப் பற்றிப் பின்னால் 808-வது சுலோகத்தில் சொல்கிறார். மற்றவர்கள் அதிகாரியென்று பெயருக்குமாத்திரம் இருக்கலாமே தவிற அவர்களுக்கு ஞானம் ஸித்திப்பது ஸாத்யமில்லாததனால் அவர்களைப்பற்றி எடுத்துச்சொல்வது அவசியமில்லையென்று நிறுத்திவிட்டார். (796)

अध्यारोपापवादक्रममनुसरता देशिकेनात्र वेत्रा
वाक्यार्थे बोध्यमाने सति सपदि सतः शुद्धबुद्धेरमुष्य ।
नित्यानन्दाद्वितीयं निरुपमं अमलं यत् परं तत्त्वं एकं
तत् ब्रह्मैवाहमस्मि इत्युदयति परमाखण्डताकारवृत्तिः ॥ ७९७ ॥

அத்யாரோபாபவாத க்ரமமநுஸரதா தேசிகேநாத்ர வேத்ரா
வாக்யார்த்தே போத்யமாநே ஸதி ஸபதி ஸதః சுத்தபுத்தேரமுஷ்ய ।
நித்யானந்தாத்விதீயம் நிருபமமமலம் யத் பரம் தத்வமேகம்
தத் ப்ரஹ்மைவாஹமஸ்மீத்யுதயதி பரமாகண்டதாகார வ்ருத்தி: ॥

अध्यारोपापवादक्रमं—அத்யாரோபம், அபவாதம் என்ற முறையை, अनुसरता—அனுஸரிக்கிறவராயும், वेत्रा—அறிந்தவராயுமுள்ள, देशिकेन—ஆசார்யரால். अत्र இங்கு, वाक्यार्थे—மஹா வாக்யார்த்தமானது, बोध्यमाने सति—உபதேசிக்கப்படும் பொழுது, शुद्धबुद्धेः—பரிசுத்தமான புத்தியுள்ள, अमुष्य सतः—இந்த ஸாதுவுக்கு, यत्—எது, नित्यानन्दाद्वितीयं—அழிவற்றதாயும் ஆனந்த ரூபமாயும் இரண்டாவது பொருளற்றதாயும், निरुपमं—உவமையில்லாததாயும், अमलं—தோஷமில்லாததாயும், परं—மேலானதாயும், तत्त्वं—உண்மைப்பொருளாயும், एकं—ஒன்றாயும் உள்ளதோ, तत्—அந்த, ब्रह्मैव—பிரஹ்மமாகவே, अहं—நான், अस्मि—இருக்கிறேன், इति—

என்ற, परमाखण्डाकारवृत्तिः - மேலான அகண்டாகார விருத்தி, झटिति - உடனே, उदयति - உண்டாகிறது.

முன் சுலோகத்தில் சொன்ன எல்லா ஸாதனங்களினாலும் சுத்தமாயிருக்கும் புத்தியையுடைய இந்த ஸத்புருஷனுக்கு, இவ்விஷயத்தை அறிந்தவராய் உபதேசிக்கக்கூடியவராய் உள்ள குருவினால் முன் வர்ணித்திருக்கிற அத்யாரோபம், அபவாதம் என்ற முறையை அநுஸரித்து வாக்யத்தின் அர்த்தம் போதிக்கப்பட்டதேயானால், உடனே எந்தத் தத்வமானது நித்யமாய் ஆனந்தமாய் இரண்டாவதற்றதாய் உபமானமற்றதாய் நிர்மலமாய் மேலானதாய் ஒன்றாய் இருக்கிறதோ, "அந்த ப்ரஹ்மம்தான் நான்" என்கிற வெகு உத்தமமான அகண்டஸ்வரூபமான வ்ருத்தி உதயமாகும்.

अखण्डाकारवृत्तिः सा चिदाभाससमन्विता ।
आत्माभिन्नं परं ब्रह्म विषयीकृत्य केवलम् ।
बाधते तद्गताज्ञानं यत् आवरणलक्षणम् ॥ ७९८ ॥

அகண்டாகார வ்ருத்தி: ஸா சிதாபாஸஸமந்விதா ।
ஆத்மாபிந்நம் பரம் ப்ரஹ்ம விஷயீக்ருத்ய கேவலம் ।
பாததே தத்கதாஜ்ஞானம் யதாவரணலக்ஷணம் ॥

सा - அந்த, अखण्डाकारवृत्तिः - அகண்டாகார விருத்தியானது, चिदाभाससमन्विता - சைதன்ய பிரதிபிம்பத்துடன் கூடியதாய், आत्माभिन्नं - ஆத்மாவைக் காட்டிலும் வேறுபடாத, परं ब्रह्म केवलं - பரப்ரஹ்மத்தை மட்டும், विषयीकृत्य - விஷயமாகச் செய்து, यत् - எது, आवरणलक्षणं - ஆவரண ஸ்வரூபமாக உள்ளதோ (அந்த) तद्गताज्ञानं - அந்த சைதன்யத்திலுள்ள அஜ்ஞானத்தை, बाधते - பாதிக்கிறது.

அந்த அகண்டாகார வ்ருத்தியானது சைதன்யப்ரதிபிம்பத்துடன் சேர்ந்துகொண்டு, ப்ரத்யக் ஆத்மாவிற்கு வேறுபடாத பரப்ரஹ்மத்தைமாத்திரம் விஷயமாகச் செய்துகொண்டு, எது ஆவரணஸ்வரூபமாக (மறைக்கும் தன்மை கொண்டதாக) உள்ளதோ, அந்த சைதன்யத்திலுள்ள அஜ்ஞானத்தைப் பாதிக்கிறது. (அடியோடு இல்லாமல் செய்துவிடுகிறது.) (798)

अखण्डाकारया वृत्त्या त्वज्ञाने बाधिते सति ।
तत्कार्यं सकलं तेन समं भवति बाधितम् ॥ ७९९ ॥

அகண்டாகாரயா வ்ருத்யா த்வஜ்ஞானே பாதிதே ஸதி ।
தத்கார்யம் ஸகலம் தேன ஸமம் பவதி பாதிதம் ॥

अखण्डाकारया वृत्त्या- அகண்டாகாரவிருத்தியால், अज्ञाने- அக்ஞானம், बाधिते सति-பாதிக்கப் பட்டபொழுது, तत्कार्यं- அதனுடைய கார்யம், सकलं-எல்லாம், तेन समं-அதனுடன் கூட, बाधितं भवति-பாதிக்கப்பட்டதாக ஆகிறது.

அகண்டாகார வ்ருத்தியினால் அக்ஞானம் பாதிக்கப்படும் போதே, அதன் கார்யமான எல்லாமே அத்துடன்கூட பாதிக்கப்பட்டதாக ஆகிவிடுகிறது. (799)

तन्तुदाहे तु तत्कार्यपटदाहो यथा तथा ।
तस्य कार्यतया चित्तवृत्तिर्भवति बाधिता ॥ ८०० ॥

தந்துதாஹே து தத்கார்ய படதாஹோ யதா ததா ।
தஸ்ய கார்யதயா சித்தவ்ருத்திர் பவதி பாதிதா ॥

तन्तुदाहे-நூல்கள் பொசுங்கினால், यथा-எப்படி, तत्कार्यपटदाहः- அதன் காரியமான வஸ்திரத்தின் பொசுங்கல் ஏற்படுகிறதோ, तथा-அப்படி, तस्य-அந்த அக்ஞானத்தின், कार्यतया – காரியமாயிருப்பதால், चित्तवृत्तिः – அகண்டாகார மனோவிருத்தியும், बाधिता भवति-பாதிக்கப்பட்டதாக ஆகிறது.

நூல்களை எரித்தால் அந்நூல்களின் கார்யமான வஸ்திரம் எரியப்படுகிறது எப்படியோ, அப்படியே அக்ஞானம் பாதிக்கப் பட்டபின், அதன் கார்யமாயிருப்பதனால் அகண்டாகார மனோவிருத்தியும் பாதிக்கப்பட்டுவிடுகிறது. (800)

उपप्रभा यथा सूर्यं प्रकाशयितुं अक्षमा ।
तद्वदेव चिदाभासचैतन्यं वृत्तिसंस्थितम् ॥ ८०१ ॥

स्वप्रकाशं परं ब्रह्म प्रकाशयितुं अक्षमम् ।

உபப்ரபா யதா ஸௌர்யம் ப்ரகாசயிதுமக்ஷமா ।
தத்வதேவ சிதாபாஸ சைதன்யம் வ்ருத்தி ஸம்ஸ்த்திதம் ॥
ஸ்வப்ரகாசம் பரம் ப்ரஹ்ம ப்ரகாசயிதுமக்ஷமம் ।

**यथा**-எப்படி, **उपप्रभा**-உபப்ரகாசமானது, **सूर्यं** ஸூர்யனை, **प्रकाशयितुं**-பிரகாசப் படுத்துவதற்கு, **अक्षमा** - சக்தியில்லாததோ, **तद्वदेव**-அதுபோலவே, **वृत्तिसंस्थितं** - அகண்டாகார விருத்தியிலிருக்கிற, **चिदाभासचैतन्यं**-சித்ப்ரதிபிம்பசைதன்யமானது, **स्वप्रकाशं** - தானே பிரகாசிக்கிற, **परं ब्रह्म** - பர பிரம்மத்தை, **प्रकाशयितुं**-பிரகாசப் படுத்துவதற்கு, **अक्षमं**-சக்தியில்லாதது.

உபப்ரபையானது (ஸௌர்யனிடத்திலிருந்தே இரவல் வாங்கிப்பிரகாசிக்கும் அக்னி முதலியவைகளின் ஒளி) எப்படி ஸௌர்யனை ப்ரகாசப்படுத்த சக்தியற்றதோ, அதைப்போலவே வ்ருத்தியில் இருக்கிற சைதன்யத்தின் ப்ரதிபிம்பமான சைதன்யம் ஸ்வயம்ப்ரகாசமாயுள்ள பரப்ரஹ்மத்தை பிரகாசப் படுத்த சக்தியற்றது. (801)

प्रचण्डातपमध्यस्थदीपवत् नष्टदीधिति ॥ ८०२ ॥

तत्तेजसाऽभिभूतं सत् लीनोपाधितया ततः ।
बिम्बभूतपरब्रह्ममात्रं भवति केवलम् ॥ ८०३ ॥

ப்ரசண்டாதப மத்யஸ்த தீபவத் நஷ்டதீதிதி ॥

தத்தேஜஸாऽபிபூதம் ஸத் லீநோபாதிதயா தத: ।
பிம்பபூத பரப்ரஹ்மமாத்ரம் பவதி கேவலம் ॥

**प्रचण्डातपमध्यस्थ** - உக்ரமான வெய்யிலின் நடுவில் இருக்கும், **दीपवत्**-தீபம்போல் (ஆபாஸ சைதன்யமானது) **तत्तेजसा**-அந்த பிம்பசைதன்ய பிரகாசத்தால், **अभिभूतं सत्**-அடக்கப்பட்டதாக ஆகி, **नष्टदीधिति**-ஒளி இழந்ததாய், **ततः**-பிறகு, **लीनोपाधितया**-உபாதி மறைந்துபோவதால், **केवलं**-

தனித்ததான். बिम्बभूत परब्रह्ममात्रं - பிம்பமான பரப்ரம்ம சைதன்யமாகவே, भवति ஆகிறது.

நல்ல உக்ரமான வெய்யிலின் மத்தியில் இருக்கும் தீபம் போல சித்ப்ரகாசத்தால் அடக்கப்பட்டு ஒளியை இழந்ததாக ஆகி ப்ரதிபிம்ப சைதன்யம் பின்னர் அகண்டாகார விருத்தியாகிற உபாதி மறைந்து விட்ட காரணத்தினால் தனித்திருக்கும் பிம்பமான பரப்ரஹ்மமாகவே ஆகிவிடுகிறது. (802-803)

यथाऽपनीते त्वादर्शे प्रतिबिम्बमुखं स्वयम् ।
मुखमात्रं भवेत् तद्वत् एतच्चोपाधिसंक्षयात् ॥ ८०४ ॥

யதாऽபநீதே த்வாதர்சே ப்ரதிபிம்ப முகம் ஸ்வயம் ।
முகமாத்ரம் பவேத் தத்வத் ஏதச்சோபாதி ஸம்க்ஷயாத் ॥

यथा-எப்படி, आदर्शे-கண்ணாடி, अपनीते-விலக்கப்பட்டபொழுது प्रतिबिम्बमुखं முகப்ரதிபிம்பமானது, स्वयं-தானாகவே, मुखमात्रं முகமாகவே, भवेत्-ஆகுமோ, तद्वत्-அதுபோல, एतच्च-இந்த ஆபாஸ சைதன்யமும், उपाधि-संक्षयात्-உபாதி அழிந்துபோவதால் (ப்ரஹ்மசைதன்யமாக ஆய்விடுகிறது)

கண்ணாடியை எடுத்துவிட்டால் எப்படி ப்ரதிபிம்பமாய் இருந்த முகம் தானாகவே பிம்பமுகமாகவே ஆகிவிடுகிறதோ, அதுபோல இந்த சிதாபாஸனும் உபாதியாகிற விருத்திக்கு நாசம் வந்துவிட்ட காரணத்தினால் பரப்ரஹ்மமாக ஆகிவிடுகிறது. (804)

(அ) ஜடமான பதார்த்தங்களை அறிகிற ஞானத்திற்கும், ஸ்வயம்ப்ரகாசமான பதார்த்தத்தை அறிகிற ஞானத்திற்கும் வித்யாஸம் உண்டு என்பதை இங்கு மத்தியில் சுருக்கமாகத் தெரிவிக்கிறார்:—

घटाज्ञाने यथा वृत्त्या व्याप्तया बाधिते सति ।
घटं विस्फुरयत्येष चिदाभासः स्वतेजसा
न तथा स्वप्रभे ब्रह्मणि आभास उपयुज्यते ॥ ८०५ ॥

கடாஜ்ஞானே யதா வ்ருத்யா வ்யாப்தயா பாதிதே ஸதி ।
கடம் விஸ்புரயத்யேஷ சிதாபாஸ ஸ்வதேஜஸா ॥
ந ததா ஸ்வப்ரபே ப்ரஹ்மண்யாபாஸ உபயுஜ்யதே ॥

**यथा**-எப்படி **व्याप्तया**- (குடத்தை) வியாபித்ததான, **वृत्त्या**-அந்தக்கரண விருத்தியால், **घटाज्ञाने**-குடத்தைப் பற்றிய அக்ஞானம், **बाधिते सति**-நீங்கியபொழுது, **एष चिदाभासः**-இந்த சிதாபாஸன், **स्वतेजसा**-தன் பிரகாசத்தால், **घटं**-குடத்தை, **विस्फुरयति**-விளங்கும்படி செய்கிறதோ, **तथा**-அப்படி, **स्वप्रभे**-ஸ்வயம் பிரகாசமான, **ब्रह्मणि**-பிரஹ்மத்தில, **आभासः**-சிதாபாஸன், **न उपयुज्यते**-உபயோகப்படுவதில்லை.

குடத்தை வ்யாபிக்கும் வ்ருத்தியினால் குடத்தைப்பற்றிய அக்ஞானம் பாதிக்கப்பட்டபொழுது அந்தக் குடத்தை இந்த சிதாபாஸன் தன்னுடைய ப்ரகாசத்தினால் எப்படி ப்ரகாசிக்கும்படிச் செய்கிறதோ, அவ்விதமாக ஸ்வயம்ப்ரகாசமாயுள்ள ப்ரஹ்மத்தினிடத்தில் சிதாபாஸன் உபயோகப்படுவதில்லை.

[கண்ணால் குடத்தைப் பார்த்ததும் மனம் கண்வழியாக குடமிருக்குமிடம் சென்று குடத்தின் உருவமெடுக்கிறது. இது தான் வ்ருத்தி என்பது. குடத்தை வ்யாபித்த இந்த மனோ வ்ருத்தியால் குடத்தை நமக்குத் தெரியவொட்டாதபடி மூடிக் கொண்டிருந்த அக்ஞானம் நீங்குகிறது. உடனே ப்ரதிபிம்ப சைதன்யம் குடத்தை நமக்குத் தெரியும்படிச்செய்கிறது. இதுதான் கடஞானம் என்பது. இங்கு அக்ஞானத்தை நீக்குவது வ்ருத்தியின் கார்யம். குடத்தை ப்ரகாசப்படுத்துவது சைதன்யத்தின் கார்யம். இரண்டும் ஏற்பட்டால்தான் நமக்குக் குடம் தெரியும். தானே ப்ரகாசித்துக்கொண்டு இருக்கும் ப்ரஹ்மத்தில் வ்ருத்தியால் அக்ஞானத்தை நீக்கினால் போதும். வேறொரு சைதன்யத்தைக்கொண்டு அதை விளங்கச்செய்யவேண்டிய அவசியமில்லை.] (805)

अत एव मतं वृत्तिव्याप्यत्वं वस्तुनः सताम् ।
न फलव्याप्यता तेन न विरोधः परस्परम् ॥ ८०६ ॥

அத ஏவ மதம் வ்ருத்தி வ்யாப்யத்வம் வஸ்துந: ஸதாம் ।
ந பல வ்யாப்யதா தேந ந விரோத: பரஸ்பரம் ॥

अत एव-ஆகையினுலேயே, वस्तुनः-பிரஹ்மத்திற்கு, वृत्तिव्याप्यत्वं-வ்ருத்தியால் வியாபிக்கப்படும் தன்மை, सतां मतं - ஸாதுக்களால் ஒப்புக்கொள்ளப்பட்டது. फलव्याप्यता-சைதன்யத்தால் வியாபிக்கப்படும் தன்மை, न-ஒப்புக் கொள்ளப்படவில்லை. तेन- அதனுல், परस्परं-ஒன்றுக்கொன்று, न विरोधः-விரோதமில்லை.

ஆகையினுல்தான் வஸ்துவான ப்ரஹ்மத்திற்கு வ்ருத்தியினுல் வ்யாபிக்கப்படும் தன்மை மட்டும்தான் உண்டு. சைதன்யத்தால் வ்யாபிக்கப்படும் தன்மை கிடையாது, என்பது பெரியோர்களின் அபிப்ராயம். ஆகையால் ஒன்றுக்கொன்று விரோதம் கிடையாது.

[ ஒரு இருட்டான அறையில் ஒரு சாமான் இருந்தால், கதவைத்திறந்தால் மாத்திரம் போதாது, அதன் பேரில் வெளிச்சம் விழும்படிச் செய்தால்தான் அது தெரியும் அது போல் ஜடவஸ்துக்களை அறிந்து கொள்வதற்கு விருத்தி வியாப்தி, பல வியாப்தி இரண்டும் வேண்டும் அந்தக்கரண விருத்தியால் அக்ஞானத்தைப் போக்கி சைதன்யத்தால் ஜடவஸ்துவை விளங்கும்படி செய்யவேண்டும் அப்பொழுது தான் குடம் நமக்குத்தெரியவரும். ஆனுல் பார்க்கவேண்டிய சாமான் எரிகிற தீபமாயிருந்துவிட்டால், கதவைத் திறப்பதே போதும், அதன் பேரில் வேறு வெளிச்சம் விழுவதற்கு அவசியமேயில்லை. அப்படி வெளிச்சம் விழுந்தாலும் அது தீபத்தைக் காட்டுவதற்கு உபயோகப் படாது. ஒரு வெளிச்சம் இன்னொரு வெளிச்சத்தின் உதவியைத் தேடாது. அப்படியேதான் ஸ்வயம் பிரகாசமான பிரஹ்மம் தான் விளங்குவதற்கு சிதாபாஸனுடைய பிரகாசத்தை அபேக்ஷிக்காது. பிரஹ்மத்தைத் தெரிய வொட்டாமல் செய்துகொண்டிருக்கிற ஆவரணம் என்கிற அக்ஞான மூடியை எடுப்பதற்கு விருத்திக் ஞானம் அவசியம். மூடியை எடுத்துவிட்டால் பிரஹ்மம் தானே பிரகாசித்துக் கொண்டிருக்கிறபடியால் சிதாபாஸனுடைய உதவி தேவையில்லை. அது ஸ்வயம் பிரகாசமானதினுல் தானே விளங்கும். ஆகவே மனதால் பிரஹ்மத்தை அறிகிறுன் என்பதற்கும் ப்ரஹ்மம் ஸ்வயம் ப்ரகாசம் ஞேயமில்லை என்பதற்கும் விரோதமில்லை. விருத்தி வியாப்தியால் அக்ஞானம் நீங்குவதைத்தான் அறிகிறுன் என்று சொல்

கிறேம். ஸ்வயம் ப்ரகாசமான ப்ரஹ்மத்தில் பலவ்யாப்தி யில்லாததால் ஆபாஸ சைதன்யம் அதை விளங்கச்செய்யாத தால் ப்ரஹ்மம் ஞேயமல்ல என்றும் சொல்கிறுர்கள்.] (806)

(அ) ஆவரணத்தை விலக்குவதற்கு விருத்தி வேண்டி யிருப்பதினுல் பிரஹ்மத்தை அறிவதற்கு புத்திவிருத்தியை கருவியாக வேதம் சொல்கிறது என்பதைத் துலக்குகிறுர் :—

श्रुत्योदितं ततो ब्रह्मज्ञेयं बुद्धयैव सूक्ष्मया ॥ ८०७ ॥

ச்ருத்யோதிதம் ததோ ப்ரஹ்ம ஞேயம் புத்த்யைவ ஸூக்ஷ்மயா ॥

ततः-ஆகையால், सूक्ष्मया बुद्धयैव — ஸூக்ஷ்மமான புத்தியால்தான், ब्रह्म-ப்ரஹ்மம், ज्ञेयं-அறியத்தக்கது (என்று) श्रुत्या उदितं-சுருதியால் சொல்லப்பட்டது.

ஆகையினுல்தான் (ஸ்வயம் பிரகாசமான பிரஹ்மத்தை விளங்கவைக்க சைதன்ய வியாப்தி தேவையில்லாவிட்டாலும் ஆவரணுக்ஞானம் விலக விருத்திவ்யாப்தி தேவையானபடி யால்தான்) பிரஹ்மமானது ஸூக்ஷ்மமான புத்தியினுலேதான் அறியத்தக்கது" என்று வேதத்தினுல் சொல்லப்பட்டிருக் கிறது.

'दृश्यते त्वग्रयया बुद्धया सूक्ष्मया सूक्ष्मदर्शिभिः' (कठ ३-१२)

(அ) ஸூக்ஷ்மமான புத்தியென்றுல், குரு உபதேசம் செய்தவுடனேயே உபதேசித்த விஷயம் அனுபவத்திற்கு வரக்கூடிய அவ்வளவு சுத்தமாயும் கூர்மையாகவும் இருக்கும் புத்தி என்று தாத்பர்யம். அவ்வித புத்தியுடன் ஜகத்தில் யாரேனும் ஒருவர் இருக்கலாம். மற்றவர்களுக்குள் புத்தியில் தாரதம்யம் ஏராளமாயிருப்பதால். உபதேசித்த விஷயம் அனுபவத்திற்கு வரவேண்டுமானுல் சிரவணத்திற்குப் பிறகு மனனம், தியானம், என்கிற முறைகளை யனுஷ்டிக்க அவசிய மேற்படுகிறது. அந்த முறைகளைப் பற்றி மேலால் சொல்லு கிறுர் :—

प्रज्ञामान्द्यं भवेत् येषां तेषां न श्रुतिमात्रतः ।
स्यात् अखण्डाकारवृत्तिः विना तु मननादिना ॥ ८०८ ॥

ப்ரஜ்ஞா மாந்த்யம் பவேத் யேஷாம் தேஷாம் ந
ச்ருதிமாத்ரத: ।
ஸ்யாதகண்டாகார வ்ருத்திர் விநா து மநநாதிநா ॥

येषां–எவர்களுக்கு, प्रज्ञामान्द्यं–புத்தியில் மந்தத்தன்மை, भवेत् – உள்ளதோ, तेषां–அவர்களுக்கு, मननादिना विना–மனனம் முதலியவை இல்லாமல், श्रुतिमात्रतः சிரவணத்தால் மட்டும், अखण्डाकारवृत्तिः- அகண்டாகாரவிருத்தி, न स्यात्–ஏற்படாது.

எவர்களுக்கு புத்தி மந்தமாயிருக்கிறதோ, அவர்களுக்கு, மனனம் முதலானது இல்லாமல், சிரவணத்தினால் மாத்திரம் அகண்டாகார வ்ருத்தி ஏற்படாது. (808)

श्रवणात् मननात् ध्यानात् तात्पर्येण निरन्तरम् ।
बुद्धेः सूक्ष्मत्वं आयाति ततो वस्तूपलभ्यते ॥ ८०९ ॥

ச்ரவணாந் மநநாத் த்யாநாத் தாத்பர்யேண நிரந்தரம் ।
புத்தே: ஸௌக்ஷ்மத்வ மாயாதி ததோ வஸ்தூபலப்யதே ॥

निरन्तरं-இடைவிடாமல், तात्पर्येण–ஈடுபாட்டுடன் (செய்யும்), श्रवणात्–சிரவணத்தாலும், मननात्–மனனத்தாலும் ध्यानात्–த்யானத்தாலும், बुद्धेः-புத்திக்கு, सूक्ष्मत्वं-ஸௌக்ஷ்மத் தன்மை, आयाति–வருகிறது. ततः-அதனால், वस्तु–பிரஹ்ம வஸ்து, उपलभ्यते- அறியப்படுகிறது.

இடைவிடாமல் அதிலேயே ஈடுபட்டுக்கொண்டு செய்யப் படும் சிரவணத்தினாலும் மனனத்தினாலும் தியானத்தினாலும் புத்திக்கு ஸௌக்ஷ்மத் தன்மை வருகிறது அதனால் வஸ்து அறியப்படுகிறது. (809)

मन्दप्रज्ञावतां तस्मात् करणीयं पुनः पुनः ।
श्रवणं मननं ध्यानं सम्यग्वस्तूपलब्धये ॥ ८१० ॥

மந்தப்ரஜ்ஞாவதாம் தஸ்மாத் கரணீயம் புந: புந: ।
ச்ரவணம் மநநம் த்யாநம் ஸம்யக் வஸ்தூபலப்தயே ॥

8. ஸ்ரீ-14

04565 - 232991

तस्मात्-ஆகையால், मन्दप्रज्ञावतां-மந்தமான புத்தி உள்ளவர்களுக்கு, सम्यग्वस्तूपलब्धये-நன்ருக வஸ்துவை அறிவதற்காக, श्रवणं-சிரவணமும், मननं-மனனமும், ध्यानं-த்யானமும், पुनः पुनः-திருப்பித்திருப்பி, करणीयं-செய்யத் தக்கது.

ஆகையால் மந்தமான புத்தியுள்ளவர்களுக்கு நன்ருக வஸ்து அறிவதற்கு சிரவணம், மனனம், தியானம் இவை திரும்பத்திரும்பச் செய்தாகவேண்டும். (810)

सर्ववेदान्तवाक्यानां षड्भिः लिङ्गैः सदद्वये ।
परे ब्रह्मणि तात्पर्यनिश्चयं श्रवणं विदुः ॥ ८११ ॥

ஸர்வவேதாந்த வாக்யாநாம் ஷட்பிர் லிங்கை: ஸதத்வயே ।
பரே ப்ரஹ்மணி தாத்பர்ய நிச்சயம் ச்ரவணம் விது: ॥

षड्भिः लिङ्गैः-ஆறு லிங்கங்களால், सर्ववेदान्तवाक्यानां-எல்லா உபநிஷத் வாக்யங்களுக்கும், सदद्वये-முக்காலத்திலும் அழியாததும், இரண்டற்றதுமான, परे ब्रह्मणि-பரப்ரஹ்மத்தில், तात्पर्यनिश्चयं-கருத்து உள்ளதாக தீர்மானிப்பதை, श्रवणं-சிரவணமாக, विदुः-அறிகிருர்கள்.

ஆறு லிங்கங்களைக்கொண்டு எல்லா உபநிஷத் வாக்யங்களுக்கும் ஸத்தாய் இரண்டற்றதாயுள்ள பரப்ரஹ்மத்தில்தான் தாத்பர்யம் என்று தீர்மானமாக அறிவதை சிரவணம் என்பார்கள். (811)

श्रुतस्यैवाद्वितीयस्य वस्तुनः प्रत्यगात्मनः ।
वेदान्तवाक्यानुगुणयुक्तिभिस्त्वनुचिन्तनम् ॥ ८१२ ॥

मननं तत् श्रुतार्थस्य साक्षात्करणकारणम् ।
विजातीयशरीरादिप्रत्ययत्यागपूर्वकम् ॥ ८१३ ॥

सजातीयात्मवृत्तीनां प्रवाहकरणं यथा ।
तैलधारावत् अच्छिन्नवृत्त्या तत् ध्यानं इष्यते ॥ ८१४ ॥

ச்ருதஸ்யைவாத்விதீயஸ்ய வஸ்துநः ப்ரத்யகாத்மநः ।
வேதாந்த வாக்யாநுகுண யுக்திபிஸ்த்வநுசிந்தனம் ॥

மநநம் தத் ச்ருதார்த்தஸ்ய ஸாக்ஷாத்கரண காரணம் ।
விஜாதீய சரீராதி ப்ரத்யய த்யாக பூர்வகம் ॥

ஸஜாதீயாத்ம வ்ருத்தீநாம் ப்ரவாஹகரணம் யதா ।
தைலதாராவதச்சிந்ந வ்ருத்யா தத் த்யானமிஷ்யதே ॥

श्रुतस्य-கேட்டுத் தெரிந்துகொண்ட, अद्वितीयस्य-இரண்டற்ற, प्रत्यगात्मनः-ப்ரத்யகாத்மரூபமான, वस्तुन एव-ப்ரஹ்ம வஸ்துவையே, वेदान्तवाक्यानुगुणयुक्तिभिः-உபநிஷத் வாக்யங்களுக்குத் தகுந்ததான யுக்திகளால், अनुचिन्तनं-சிந்திப்பது (எதுவோ), तत्-அது, मननं-மனனமாகும், विजातीय-வேறு இனத்தைச் சேர்ந்த, शरीरादि-சரீரம் முதலியவைகளின், प्रत्यय-எண்ணங்களை, त्यागपूर्वकं-முதலில் ஒதுக்கிவிட்டு, तैलधारावत्-எண்ணெயின் தாரைபோல, अच्छिन्नवृत्त्या-எண்ணங்கள் நடுவில் அறுந்துபோகாமல், सजातीयात्मवृत्तीनां-ஒரே இனமான ஆத்மாவைப் பற்றிய எண்ணங்களை, प्रवाहकरणं-ப்ரவாஹம்போல் தொடர்ந்து செய்துகொண்டிருப்பது (எதுவோ), तत्-அது, श्रुतार्थस्य கேட்டுத் தெரிந்துகொண்டதை, साक्षात्करणकारणं - நேரில் தெரிந்துகொள்வதற்கு ஸாதனமான, ध्यानं - தியானமாக, इष्यते-கருதப்படுகிறது.

சிரவணத்தினுல் அறிந்த இரண்டாவதற்ற ப்ரத்யகாத்ம ரூபமான ப்ரஹ்ம வஸ்துவைப்பற்றியே உபநிஷத் வாக்யங்களுக்கு அநுகுணமான யுக்திகளினுல் தொடர்ந்து சிந்தனை செய்வது எதுவோ அது மனனம். ஆத்மாவைப்பற்றிய எண்ணங்களுக்கு வேருன சரீரம் முதலியவைகளைப்பற்றிய எண்ணங்களை ஒதுக்கித் தள்ளிவிட்டு, நடுநடுவில்கூட அவைகளுக்குக் கொஞ்சமும் இடம் கொடுக்காமல், எண்ணெயின் தாரைபோலும், ஜலப்ரவாஹம்போலும், ஒரேமாதிரியான ஆத்மாவைப்பற்றிய எண்ணங்களை தொடர்ந்துவந்துகொண்டு இருப்பது தியானம் எனப்படும். கேட்டுப் பரோக்ஷமாகத் தெரிந்துகொண்ட விஷயத்தை பிரத்யக்ஷமாக தெரிந்

தெரிந்துகொள்வதற்குத் தியானம்தான் நேரிடையான ஸாதனம். ஆத்ம விஷயமான எண்ணங்கள் அடியோடு நின்றுவிடாமல் தொடர்ந்து வந்துகொண்டிருக்கவேண்டும். நடுவில் அநாத்ம எண்ணம் வரக்கூடாது. இதுவே ஆத்ம தியானம் எனப்படும். (812–814)

(அ) இம்மூன்றையும் எதுவரை செய்யவேண்டுமென்பதையும் குறிப்பிடுகிறார் :—

तावत्कालं प्रयत्नेन कर्तव्यं श्रवणं सदा ।
प्रमाणसंशयो यावत् स्वबुद्धेः न निवर्तते ॥ ८१५ ॥

தாவத்காலம் ப்ரயத்நேந கர்தவ்யம் ச்ரவணம் ஸதா ।
ப்ரமாண ஸம்சயோ யாவத் ஸ்வபுத்தேர் ந நிவர்த்ததே ॥

यावत्–எதுவரை, प्रमाणसंशयः–ப்ரமாணத்தில் ஸம்சயம், स्वबुद्धेः–தன் புத்தியிலிருந்து न निवर्तते–நீங்கவில்லையோ, तावत्कालं–அந்தக் காலம்வரை, सदा–எப்பொழுதும், प्रयत्नेन–முயற்சியோடு, श्रवणं कर्तव्यं–சிரவணம்செய்யத்தக்கது.

எதுவரையில் பிரமாணத்தில் ஸம்சயம் தன் புத்தியிலிருந்து விலகவில்லையோ, அதுவரை பிரயத்தினத்துடன் எப்பொழுதும் சிரவணம் செய்தாகவேண்டும்.

[ அதாவது வேதாந்தத்தில் சொல்லியிருப்பது என்ன என்பதில் ஸந்தேகம் இருக்கக்கூடாது. உபநிஷத்துக்களின் கருத்து என்ன என்று தீர்மானிப்பதற்கு ஆறு லிங்கங்கள் இருக்கின்றனவென்று 811வது ச்லோகத்தில் சொல்லப்பட்டது. அவையாவன :—

उपक्रमोपसंहारौ अभ्यासोऽपूर्वता फलम् ।
अर्थवाद–उपपत्ती च लिङ्गं तात्पर्यनिर्णये ॥

(1) ஆரம்பத்திலும் முடிவிலும் ஒரே விஷயத்தை சொல்லியிருந்தால் அதில் தான் தாத்பர்யம் என்று அறிந்துகொள்ளலாம்.

(2) எந்த விஷயத்தைப் பற்றி அடிக்கடி சொல்லப்பட்டிருக்கிறதோ அதுவும் தாத்பர்யமாகும்.

(3) வேறு பிரமாணங்களால் அறியப்படாமல் இங்கே புதிதாக சொல்லியிருந்தால் அதுவுந் தாத்பர்யமாகும்.

(4) எதை அறிவதினால் விசேஷமான பிரயோஜனம் ஏற்படுவதாகச் சொல்லியிருக்கிறதோ அதில்தான் தாத்பர்யம் இருக்கும்.

(5) எதை மிகவும் சிலாகித்திருக்கிறதோ அது தாத்பர்யம்.

(6) எதற்கு பக்கபலமாக யுக்திகள் சொல்லப்பட்டிருக்கின்றனவோ அது தாத்பர்யம்.

தாத்பர்யத்தைக் கண்டுபிடிப்பதற்காகச் சொல்லியிருக்கும் இந்த 6 லிங்கங்களும் ஒன்றுக்கே இருந்தால் அதுதான் தாத்பர்யம் என்பதில் ஸந்தேஹமே இல்லை, உபநிஷத்துக்களின் வாக்யங்களை எடுத்து அலசிப்பார்த்து இந்த ஆறு அடையாளங்களும் ஜீவ-ப்ரஹ்ம ஐக்யத்திற்குத்தான் இருக்கிறதென்று பெரியோர்கள் எடுத்துக்காட்டியிருக்கிறார்கள். அவைகளை நன்கு கவனித்து உபநிஷத்துக்களின் தாத்பர்யம் என்ன என்பதை ஸந்தேஹமன்னியில் தெரிந்துகொள்ளும் வரை சிரவணம் அவசியம்.] (815)

प्रमेयसंशयो यावत् तावत् तु श्रुतियुक्तिभिः ।
आत्मयाथार्थ्यनिश्चित्यै कर्तव्यं मननं मुहुः ॥ ८१६ ॥

*ப்ரமேய ஸம்சயோ யாவத் தாவத்து ச்ருதியுக்திபி: ।*
*ஆத்ம யாதார்த்ய நிச்சித்யை கர்தவ்யம் மனனம் முஹு: ॥*

यावत्-எதுவரை, प्रमेयसंशयः – உபநிஷத்தில் கூறப்பட்ட விஷயத்தில் ஸந்தேஹம் உள்ளதோ, तावत्तु- அதுவரை आत्मयाथार्थ्यनिश्चित्यै - ஆத்மாவின் உண்மை ஸ்வரூபத்தை தீர்மானமாகத் தெரிந்துகொள்வதற்காக, श्रुतियुक्तिभिः ச்ருதிக்குத் தக்க யுக்திகளால், मुहुः– அடிக்கடி, मननं कर्तव्यं– சிந்தனம் செய்யவேண்டும்.

வேதத்தில் சொல்லப்பட்டிருக்கும் ப்ரஹ்மாத்மைக்ய ரூபமான விஷயத்தில் எதுவரை ஸம்சயம் இருக்கிறதோ, அது வரை ஆத்மாவினுடைய வாஸ்தவமான ஸ்வரூபத்தை நிச்சயு

மாக ஸந்தேஹமன்னியில் தெரியவேண்டியதற்காக வேத வாக்யங்களுக்குத்தக்க யுக்திகளைக்கொண்டு அடிக்கடி மனனம்செய்யவேண்டும்.

[சிரவணத்தினுல் வேதத்தின் தாத்பர்யம் என்ன என்பதை தீர்மானமாக அறிந்தபிறகும், உபநிஷத்தில் கூறியுள்ள விஷயம் யுக்திக்குப் பொருந்தவில்லையே, அனுபவத்திற்குப் பொருந்தவில்லையே, வேறு சிலர் சொல்வதற்கு விரோதமாய் இருக்கிறதே என்று இம்மாதிரியெல்லாம் ஸம்சயம் தோன்றிக் கொண்டிருந்தால், வேதத்தில் சொல்லியிருப்பது வாஸ்தவம் தான் என்ற நிச்சயபுத்தி ஏற்படாது. ஆகையால் அவ்வித நிச்சயபுத்தி ஏற்படும்வரை மனனம்செய்யவேண்டும்.] (816)

विपरीतात्मधीः यावत् न विनश्यति चेतसि ।
तावत् निरन्तरं ध्यानं कर्तव्यं मोक्षमिच्छता ॥ ८१७ ॥

விபரீதாத்மதீர் யாவத் ந விநச்யதி சேதஸி ।
தாவத் நிரந்தரம் த்யானம் கர்தவ்யம் மோக்ஷமிச்சதா ॥

यावत् - எதுவரை, चेतसि-மனதில், विपरीतात्मधीः- அநாத்மாவில் ஆத்மா என்கிற எண்ணம், न विनश्यति- தொலையவில்லையோ, तावत्-அதுவரை, मोक्षं इच्छता- மோக்ஷத்தை விரும்புகிறவனுல், निरन्तरं-இடைவிடாமல், ध्यानं कर्तव्यं-த்யானம் செய்யத்தக்கது.

மனஸில் ஆத்மாவைத் தவிர வேறு பதார்த்தத்தில் ஆத்மா என்கிற எண்ணம் எதுவரை நாசமடையவில்லையோ, அதுவரை மோக்ஷத்தில் ஆசையுள்ளவரால் இடைவிடாது தியானம் செய்யவேண்டும்.

[வேதம் இன்னதுதான் சொல்கிறதென்பதை ஸந்தேஹம் இல்லாமல் சிரவணத்தினுல் அறிந்துகொண்டு, அது வாஸ்தவம்தான் என்று ஸந்தேஹமன்னியில் மனனத்தினுல் நிச்சயம் செய்துகொண்டாலும், அவ்விஷயம் பல காரணங்களினுல் அனுபவத்திற்கு வராமல் நின்றுவிடும். ஸாதாரணமாக, பாபம் செய்யக்கூடாதென்று வேதம் சொல்கிறதென்பதில் யாருக்கும் ஸந்தேஹமில்லை, அப்படியே வேதத்தில் சொல்லிய படி பாபம் செய்யக்கூடாதென்பது நியாயம்தான் என்பதிலும்

யாருக்கும் ஸந்தேஹமில்லை; அப்படியிருந்தும் உலகத்தில் பலவித காரணங்களால் பாபம் செய்வதே இருந்துவருகிறது. அதுபோலவே, ஆத்மவிஷயமான சிரவண மனனங்கள் மூலமாய் ஸந்தேஹமற ஆத்மதத்வத்தைத் தெரிந்துகொண்டாலும், அநுபவத்திற்கு வருவது மிகவும் சிரமமாயிருக்கிறது. இதற்காகத்தான் தியானம்செய்யவேண்டியது அவசியமாகிறது.] (817)

यावत् न तर्केण निरासितोऽपि दृश्यप्रपञ्चस्त्वपरोक्षबोधात् ।
विलीयते तावत् अमुष्य भिक्षोः ध्यानादि सम्यक् करणीयमेव ॥

யாவத் ந தர்கேண நிராஸிதோபி
த்ருச்ய ப்ரபஞ்சஸ்த்வபரோக்ஷ போதாத் ।
விலீயதே தாவதமுஷ்ய பிக்ஷோ:
த்யாநாதி ஸம்யக் கரணீயமேவ ॥

यावत्-எதுவரை, तर्केण-யுக்தியால், निरासितोऽपि-விலக்கப்பட்டபோதிலும், दृश्यप्रपञ्चः-காணப்படும் பிரபஞ்சமானது, अपरोक्षबोधात्-ஆத்மாவின் பிரத்யக்ஷ ஞானத்தால், न विलीयते-மறையவில்லையோ, तावत्-அதுவரை, अमुष्य भिक्षोः-இந்த ஸந்பாஸிக்கு, ध्यानादि-த்யானம் முதலானது, सम्यक्-நன்றாக, करणीयमेव-செய்யவேண்டியதுதான்.

யுக்தியினால் இல்லையென்று தள்ளிவிட்டபோதிலும், தென்படும் ப்ரபஞ்சமானது ஆத்மாவின் ப்ரத்யக்ஷ ஞானத்தினால் எதுவரை நன்கு மறையவில்லையோ, அதுவரை இந்த ஸந்நியாஸிக்கு தியானம் முதலானது நன்றாக செய்யவேண்டியதேயாகும். (818)

(அ) தியானம் செய்து செய்து ஆத்ம விஷயத்திலேயே மனம் நிலைத்து நின்று விடுமானால் அந்நிலையை ஸமாதி என்பார்கள். தியானத்தில் ஒரே விருத்தி திரும்பத் திரும்பச் செய்யப்படவேண்டியிருக்கும். திரும்பத் திரும்ப செய்ய அவசியமில்லாமல் ஒரே விருத்தியே நீடித்திருந்து விடுமானால் ஸமாதியாகும். அந்த ஸமாதி நிலையையும் அதிலுள்ள அவாந்தர வித்யாஸங்களையும் மேலால் எடுத்துக்காட்டுகிறார்:—

सविकल्पो निर्विकल्प इति द्वेधा निगद्यते ।
समाधिः सविकल्पस्य लक्षणं वच्मि तत् शृणु ॥ ८१९ ॥

ஸவிகல்போ நிர்விகல்ப இதி த்வேதா நிகத்யதே ।
ஸமாதி: ஸவிகல்பஸ்ய லக்ஷணம் வச்மி தத் ச்ருணு ॥

समाधिः - ஸமாதியானது, सविकल्पः - ஸவிகல்பம், निर्विकल्प इति - நிர்விகல்பம் என்று, द्वेधा - இரண்டுவிதமாக, निगद्यते - சொல்லப்படுகிறது. सविकल्पस्य - ஸவிகல்ப ஸமாதியின், लक्षणं - லக்ஷணத்தை, वच्मि - சொல்கிறேன், तत् - அதை, शृणु - கேள்.

ஸமாதி என்பது ஸவிகல்பம் என்றும் நிர்விகல்பம் என்றும் இரண்டு விதமாகச் சொல்லப்படுகிறது. ஸவிகல்ப ஸமாதியின் லக்ஷணத்தை சொல்கிறேன், அதைக் கேள். (819)

ज्ञात्राद्यविलयेनैव ज्ञेये ब्रह्मणि केवले ।
तदाकाराकारितया चित्तवृत्तेः अवस्थितिः ॥ ८२० ॥

सद्भिः स एव विज्ञेयः समाधिः सविकल्पकः ।

ஜ்ஞாத்ராத்யவிலயேனைவ ஜ்ஞேயே ப்ரஹ்மணி கேவலே ।
ததாகாராகாரிதயா சித்தவ்ருத்தேரவஸ்திதி: ॥
ஸத்பி: ஸ ஏவ விஜ்ஞேய: ஸமாதி: ஸவிகல்பக: ।

ज्ञात्राद्यविलयेनैव - அறிகிறவன் முதலியவை மறையாமலேயே, ज्ञेये - அறியத்தக்க, ब्रह्मणि केवले - ப்ரஹ்மத்தில் மட்டும், तदाकाराकारितया - அதன் ஸ்வரூபத்தையே வடிவமாகக் கொண்டதாக, चित्तवृत्तेः - மனோவிருத்தியின், अवस्थितिः - நிலை (யாதொன்று உண்டோ), स एव - அதுதான், सविकल्पकः समाधिः - ஸவிகல்ப ஸமாதியாக, सद्भिः - ஸாதுக்களால், विज्ञेयः - அறியத்தக்கது.

அறிகிறவன் அறியப்படும் வஸ்து, அறிவு என்னும் திரிபுடி மறையாமலே, அறியப்படும் பிரஹ்மத்தில் மாத்திரம் அதனுடைய ஸ்வரூப வடிவத்தை அடைந்ததாய் மனதின் விருத்தி

இருப்பது எதுவோ அதுதான் ஸவிகல்பக ஸமாதியென்று பெரியோர்கள் அறிகிறார்கள்.

[எந்த ஞானத்திலும் மூன்று அம்சங்கள் உண்டு. அறிகிறவன் (ஞாதா), அறிகிற கிரியை (ஞானம்), அறியப்படும் பதார்த்தம் (ஞேயம்) ஸவிகல்பக ஸமாதியில் இந்த மூன்று அம்சங்களும் அப்படியே இருக்கும். மனஸ் ஞேயமான பிரஹ்மாகாரமாய் இருந்தாலும், இம் மூன்று அம்சங்களும் மறைவதில்லை.]

(அ) இதை த்ருஷ்டாந்தம் மூலம் விளக்கிக்காட்டுகிறார்:

मृद एवावभानेऽपि मृन्मयद्विपभानवत् ॥ ८२१ ॥

सन्मात्रवस्तुभानेऽपि त्रिपुटी भाति सन्मयी ।
समाधिः अत एवायं सविकल्प इतीर्यते ॥ ८२२ ॥

ம்ருத ஏவாவபாநேபி ம்ருன்மய த்விப பாநவத் ॥

ஸந்மாத்ர வஸ்து பாநேபி த்ரிபுடீ பாதி ஸன்மயீ ।
ஸமாதிரத ஏவாயம் ஸவிகல்ப இதீர்யதே ॥

मृद एवावभानेऽपि–மண் தோன்றிக்கொண்டேயிருந்த போதிலும், मृन्मयद्विपभानवत्–மண் உருவமான யானை தோன்றுவதுபோல, सन्मात्रवस्तु भानेपि–ஸத்தாகவே இருக்கும் ப்ரஹ்மவஸ்து தோன்றியபோதிலும், सन्मयी–ஸத்ரூபமான, त्रिपुटी–த்ரிபுடி, भाति–தோன்றுகிறது अत एव–அதனால்தான், अयं–இது, सविकल्पः समाधिः–ஸவிகல்ப ஸமாதி, इति–என்று, ईर्यते–சொல்லப்படுகிறது.

மண் நன்கு தோன்றிக்கொண்டே இருந்தபோதிலும் மண்ணால் செய்யப்பட்டிருக்கும் யானையும் தோன்றுவது போல, ஸத்தாகவேயிருக்கும் பிரஹ்மம் தோன்றினபோதிலும் ஸத்தினால் ஏற்பட்டிருக்கும் த்ரிபுடி (ஞாதா ஞானம், ஞேயம் என்ற மூன்றும்) கூடவே தோன்றுகிறது. அதனால்தான் இந்த ஸமாதி ஸவிகல்பம் என்று சொல்லப்படுகிறது.

[மண்ணால் செய்யப்பட்டிருக்கும் யானை வாஸ்தவமான யானையில்லை, மண்தான், என்ற ஞானம் வந்த பிறகும் அந்த யானையின் உருவம் எப்படி மறையாமல் தெரிந்துகொண்டேயிருக்குமோ, அப்படியே எல்லாம் பிரஹ்மம்தான், ஞாதா. ஞானம், ஞேயம் என்ற வித்யாஸம் கிடையாதென்ற நிச்சயம் வந்தபோதிலும் அவைகள் தனியாகவே தோன்றிக்கொண்டிருந்தால், அப்பொழுது அது விகல்பங்களோடு (மூவகைத் தோற்றங்களோடு) கூடியிருப்பதால் ஸவிகல்ப ஸமாதி என்று கூறப்படுகிறது.] (821-822)

(அ) அம் மூன்று அம்சங்களும் மறைந்து ஞேய மாத்திரமாக மனஸ் ஆகிவிட்டதேயானால், அப்பொழுது அது நிர்விகல்ப ஸமாதியாகும் என்பதை அடுத்த 'ச்லோகத்தில் சொல்கிறார் :—

ज्ञात्रादिभावं उत्सृज्य ज्ञेयमात्रस्थितिः दृढा ।
मनसो निर्विकल्पः स्यात् समाधिः योगसंज्ञितः ॥ ८२३ ॥

ஞாத்ராதிபாவமுத்ஸ்ருஜ்ய ஞேயமாத்ரஸ்திதிர் த்ருடா।
மனஸோ நிர்விகல்ப: ஸ்யாத் ஸமாதிர் யோகஸம்ஞித:॥

ज्ञात्रादि भावं - அறிகிறவன் முதலான ரூபமாக இருப்பதை, उत्सृज्य-விட்டுவிட்டு, मनसः-மனதிற்கு, दृढा-உறுதியான, ज्ञेयमात्रस्थितिः ஞேயமாகமட்டும் இருக்கும் நிலை, योगसंज्ञितः-யோகம் என்று பெயருள்ள, निर्विकल्पः समाधिः स्यात्-நிர்விகல்ப ஸமாதியாகும்.

ஞாதா, ஞானம், ஞேயம் என்று மூன்றுவிதமாக இருப்பதை விட்டுவிட்டு மனம் ஞேயமாக மாத்திரம் திடமாக இருப்பது நிர்விகல்ப ஸமாதியாகும். இதற்கே "யோகம்" என்று பெயர். (823)

जले निक्षिप्तलवणं जलमात्रतया स्थितम् ।
पृथक् न भाति किं त्वम्भ एकमेवावभासते ॥ ८२४ ॥
यथा तथैव सा वृत्तिः ब्रह्ममात्रतया स्थिता ।

पृथङ् न भाति ब्रह्मैवाद्वितीयमवभासते ।
ज्ञात्रादिकल्पनाभावात् मतोऽयं निर्विकल्पकः ॥ ८२५ ॥

ஜலே நிக்ஷிப்த லவணம் ஜலமாத்ரதயா ஸ்திதம் ।
ப்ருதக் ந பாதி கிம் த்வம்ப ஏகமேவாவபாஸதே ॥

யதா ததைவ ஸா வ்ருத்திர் ப்ரஹ்மமாத்ரதயா ஸ்திதா ।
ப்ருதக் ந பாதி ப்ரஹ்மைவாத்விதீயமவபாஸதே ॥
ஞாத்ராதி கல்பநாபாவாத் மதோயம் நிர்விகல்பகঃ ।

यथा-எப்படி, जले-தண்ணீரில், निक्षिप्तलवणं-போடப் பட்ட உப்பு. जलमात्रतया-ஜலமாக மட்டுமே, स्थितं-இருந்து கொண்டு, पृथक्-தனியாக, न भाति-தெரிகிறதில்லையோ, किंतु-ஆனால், अम्भः एकमेव-ஜலம் ஒன்று மட்டுமே, अवभासते-தோன்றுகிறதோ, तथैव-அப்படியே, सा वृत्तिः-அந்த மனோ விருத்தியானது, ब्रह्ममात्रतया-பிரஹ்ம ஸ்வரூபமாகவே स्थिता-இருந்துகொண்டு, पृथक्-வேறாக, न भाति-தோன்றுகிறதில்லை, अद्वितीयं ब्रह्मैव-இரண்டற்றதான பிரஹ்மம்தான், अवभासते-தோன்றுகிறது. ज्ञात्रादिकल्पनाभावात्-அறிகிறவன் முதலான கல்பனைகளில்லாததால், अयं-இந்த ஸமாதி, निर्विकल्पकः-நிர்விகல்பமாக, मतः-எண்ணப்பட்டுள்ளது

ஜலத்தில் போட்ட உப்பு ஜலமாத்ரமாகவேயிருந்து கொண்டு ஜலத்தைக்காட்டிலும் வேறாகத் தெரிவதில்லை; ஆனால் ஜலம் ஒன்றுதான் தெரிகிறது. இது எப்படியோ அதே போல மனஸின் அந்த வ்ருத்தியானது ப்ரஹ்மமாத்ரமாகவே இருந்துகொண்டு தனியாக ப்ரகாசிக்கிறதில்லை; இரண்டாவ தற்ற ப்ரஹ்மம்தான் ப்ரகாசிக்கும். ஞாதா, ஞானம், ஞேயம் என்ற கல்பனைகள் இங்கு இல்லாததனால் இது நிர்விகல்ப ஸமாதி என்று கருதப்படுகிறது. (824-825)

(அ) ஞாதா முதலான கல்பனைகள் நல்ல தூக்கத்திலும் கிடையாதே அது நிர்விகல்ப ஸமாதியாகிவிடுமா என்ற ஸந்தேஹம் தோன்றக்கூடியதால், நிர்விகல்ப ஸமாதியில் வ்ருத்தி உண்டு. அங்கு இருப்பது ஞானம், ப்ரகாசம்,

தூக்கத்தில் வ்ருத்தி இல்லை. அங்கு இருப்பது அக்ஞானம், இருட்டு. அதை இங்கே கொண்டுவரக்கூடாது என்பதைக் குறிப்பிடுகிறார் :—

वृत्तेः सद्भावबाधाभ्यां उभयोः भेद इष्यते ।
समाधिसुप्त्योः ज्ञानं चाज्ञानं सुप्त्यां तु नेष्यते ॥ ८२६ ॥

வ்ருத்தே: ஸத்பாவ பாதாப்யாம் உபயோர் பேத இஷ்யதே ।
ஸமாதி ஸுப்த்யோர் ஞானம் சாக்ஞானம் ஸுப்த்யாம் து நேஷ்யதே ॥

वृत्तेः-வ்ருத்தியின், सद्भावबाधाभ्यां-இருப்பு-பாதம் இவைகளால், समाधिसुप्त्योः उभयोः-ஸமாதி தூக்கம் இரண்டிற்கும், भेदः-வேற்றுமை, इष्यते-கருதப்படுகிறது. ஸமாதியிலும் தூக்கத்திலும் (முறையே) ज्ञानं अज्ञानं च-ஞானமும் அக்ஞானமும், (உள்ளது ஆகையால்) सुप्त्यां तु-தூக்கத்திலோ வெனில் नेष्यते-(ஸமாதி) ஒப்புக்கொள்ளப்படுகிறதில்லை.

ஸமாதியில் ஞானம் இருப்பதால் விருத்தி உள்ளது. தூக்கத்தில் ஞானம் இல்லாமல் அக்ஞானம் இருப்பதால் விருத்தி இல்லை. ஸுஷுப்தியில் மனம் லயமடைந்து விட்டபடியால் மனோவிருத்தி ஏற்பட இடமில்லை. இவ்வாறு ஸமாதி, தூக்கம் இரண்டுக்கும் வேற்றுமை உள்ளது. ஆகையால் தூக்கத்தில் விகல்பங்கள் (கல்பனைகள்) இல்லாவிட்டாலும் தூக்கம் ஸமாதியாகாது. (826)

सविकल्पो निर्विकल्पः समाधी द्वाविमौ हृदि ।
मुमुक्षोः यत्नतः कार्यौ विपरीतनिवृत्तये ॥ ८२७ ॥

ஸவிகல்போ நிர்விகல்ப: ஸமாதீ த்வாவிமௌ ஹ்ருதி ।
முமுக்ஷோர் யத்நத: கார்யௌ விபரீத நிவ்ருத்தயே ॥

मुमुक्षोः-மோக்ஷம் அடைய விருப்பம் உள்ளவனுக்கு, विपरीतनिवृत्तये-விபரீதமான எண்ணங்கள் நீங்குவதற்காக, सविकल्पः-ஸவிகல்பம், निर्विकल्पः-நிர்விகல்பம் (என்ற) इमौ

இந்த द्वौ समाधी-இரண்டு ஸமாதிகளும், हृदि-மனதில், यत्नतः-முயற்சியுடன், कार्यौ-செய்யத்தக்கவை.

ஸவிகல்பம் நிர்விகல்பம் என்ற இந்த இரண்டு ஸமாதிகளுமே முமுக்ஷுவினால் மனஸில் விபரீதமான எண்ணம் போவதற்காக ப்ரயத்னப்பட்டு அவசியம் செய்யப்பட வேண்டியவை. (827)

कृतेऽस्मिन् विपरीतायाः भावनायाः निवर्तनम् ।
ज्ञानस्य अप्रतिबद्धत्वं सदानन्दश्च सिध्यति ॥ ८२८ ॥

க்ருதேஸ்மின் விபரீதாயா பாவநாயா நிவர்தனம் ।
ஞானஸ்யாப்ரதிபத்தத்வம் ஸதானந்தச்ச ஸித்யதி ॥

अस्मिन् कृते-இந்த ஸமாதி செய்யப்பட்டபொழுது, विपरीतायाः-விபரீதமான, भावनायाः-எண்ணத்தின், निवर्तन-நீக்கமும், ज्ञानस्य-ஞானத்திற்கு, अप्रतिबद्धत्वं-தடைபடாத தன்மையும், सदानन्दश्च-ஸத்ரூபமான ஆநந்தமும், सिध्यति-ஸித்திக்கிறது.

இந்த இரண்டுவித ஸமாதியும் செய்யப்பட்டதேயானால், விபரீதமான எண்ணம் நீங்கிவிடும். ஞானத்திற்குத் தடங்கல் இருக்காது. ப்ரஹ்மானந்தம் ஸித்திக்கும். (828)

(அ) பொதுவாக இரண்டுவித ஸமாதிகளின் பிரயோஜனத்தைச் சொல்லிவிட்டு அவை இரண்டையும் விஸ்தாரமாகச் சொல்ல ஆரம்பிக்கிறார். முதலில் ஸவிகல்ப ஸமாதி என்பது த்ருச்யாநுவித்தம், சப்தாநுவித்தம் என்று இருவகைப் படுவதில் த்ருச்யாநுவித்தத்தைப்பற்றி முதலில் 830 முதல் 865 முடிய 36 சுலோகங்களில் வர்ணிக்கிறார் :—

दृश्यानुविद्धः शब्दानुविद्धश्चेति द्विधा मतः ।
सविकल्पः तयोः यत्तत् लक्षणं वच्मि तत् शृणु ॥ ८२९ ॥

த்ருச்யாநுவித்த: சப்தாநுவித்தச்சேதி த்விதா மத: ।
ஸவிகல்பஸ் தயோர் யத் தல்லக்ஷணம் வச்மி தத் ச்ருணு ॥

सविकल्पः-ஸவிகல்ப ஸமாதியானது, दृश्यानुविद्धः-த்ருச்யானுவித்தம், शब्दानुविद्धश्च-சப்தானுவித்தம், इति-என்று, द्विधा-இரண்டுவிதமாக, मतः-கருதப்பட்டுள்ளது. तयोः-அவ்விரண்டிற்கும், यत्-எது, लक्षणं-லக்ஷணமோ, तत्-அதை, वच्मि-சொல்கிறேன், तत्-அதை, शृणु-கேள்.

"த்ருச்யானுவித்தம்", "சப்தானுவித்தம்" என்று ஸவிகல்ப ஸமாதி இரண்டுவிதமாகக் கருதப்படுகிறது. அவை இரண்டிற்கும் லக்ஷணத்தைச் சொல்கிறேன். கேள். (829)

कामादिप्रत्ययैः दृश्यैः असङ्गो यत्र दृश्यते ।
सोऽयं दृश्यानुविद्धः स्यात् समाधिः सविकल्पकः ॥ ८३० ॥

காமாதி ப்ரத்யயைர் தருச்யை: அஸங்கோ யத்ர
த்ருச்யதே ।
ஸோயம் த்ருச்யானுவித்த: ஸ்யாத் ஸமாதி: ஸவிகல்பக: ॥

दृश्यैः-அறியத்தக்கதான, कामादिप्रत्ययैः - காமம் முதலியவைகளின் எண்ணங்களுடன், असंगः-சேராமை, यत्र-எதில், दृश्यते-காணப்படுகிறதோ, सः अयं-அந்த இது, दृश्यानुविद्धः-த்ருச்யானுவித்தமான, सविकल्पकः समाधिः स्यात्-ஸவிகல்ப ஸமாதியாகும்.

காமம் முதலான ப்ரத்யயங்களாகிற த்ருச்யங்களோடு (பார்க்கப்படுகிறவைகளோடு) சேராமை எங்கே காணப்படு கிறதோ, அந்த ஸவிகல்ப ஸமாதி த்ருச்யானுவித்தம் ஆகும்.

अहंममेदमित्यादिकामक्रोधादिवृत्तयः ।
दृश्यन्ते येन संद्रष्ट्रा दृश्याः स्युः अहमादयः ॥ ८३१ ॥

அஹம் மமேதமித்யாதி காமக்ரோதாதி வ்ருத்தய: ।
த்ருச்யந்தே யேந ஸந்த்ரஷ்ட்ரா த்ருச்யா: ஸ்யுரஹமாதய:॥

अहं-நான், इदं मम-இது என்னுடையது, इत्यादि-இது முதலான, कामक्रोधादिवृत्तयः-காமம், க்ரோதம முதலிய விருத்திகள், येन-எந்த, सन्द्रष्ट्रा-பார்க்கிறவனால், दृश्यन्ते-

பார்க்கப்படுகின்றனவோ, (அவனுக்கு), अहमाद्यः-அஹங் காரம் முதலியவைகள், दृश्याः स्युः-பார்க்கத்தக்கவைகளாக ஆகும்.

"நான், என்னுடையது இது" என்பது முதலான காமம், க்ரோதம் முதலிய வ்ருத்திகள் எந்த பார்க்கிறவனால் பார்க்கப் படுகிறதோ, அவனுக்கு அஹங்காரம் முதலியவையும் பார்க்கப்படுவன ஆகும். (831)

कामादिसर्ववृत्तीनां द्रष्टारं अविकारिणम् ।
साक्षिणं स्वं विजानीयात् यः ताः पश्यति निष्क्रियः ॥

காமாதி ஸர்வவ்ருத்தீநாம் த்ரஷ்டாரமவிகாரிணம் ।
ஸாக்ஷிணம் ஸ்வம் விஜாநீயாத் யஸ்தாः பச்யதி நிஷ்க்ரியः॥

कामादिसर्ववृत्तीनां-காமம் முதலான எல்லா விருத்தி களையும், द्रष्टारं-அறிகிறவரும், अविकारिणं-விகாரமடையாத வருமான, साक्षिणं-ஸாக்ஷியாக, स्वं தன்னை, विजानीयात्-அறிந்துகொள்ளவேண்டும், यः - எவர், निष्क्रियः-தான் எவ்வித வியாபாரமும் செய்யாமலே, ताः-அவைகளை, पश्यति-பார்க்கிறாரோ (அவர் ஸாக்ஷி.)

காமம் முதலான எல்லா வ்ருத்திகளையும் பார்த்துக் கொண்டு எவ்வித விகாரத்தையும் அடையாமல் இருக்கிற ஸாக்ஷியாகத் தன்னைத் தெரிந்துகொள்ளவேண்டும். தான் எவ்வித க்ரியையும் செய்யாமல்இருந்துகொண்டு, அந்த வ்ருத்திகளை பார்த்துக்கொண்டிருக்கிறவர் ஸாக்ஷியாவார்.

कामादीनां अहं साक्षी दृश्यन्ते ते मया यतः ।
इति साक्षितयाऽऽत्मानं जानन्, आत्मनि साक्षिणा ॥८३३॥
दृश्यं कामादि सकलं स्वात्मन्येव विलापयेत् ॥ ८३४ ॥

காமாதீநாமஹம் ஸாக்ஷீ த்ருச்யந்தே தே மயா யதः ।
இதி ஸாக்ஷிதயாऽऽத்மாநம் ஜாநந்நாத்மநி ஸாக்ஷிணா ।
த்ருச்யம் காமாதி ஸகலம் ஸ்வாத்மந்யேவ விலாபயேத் ॥

अहं-நான், कामादीनां-காமம் முதலியவைகளுக்கு, साक्षी-ஸாக்ஷியாக (இருக்கிறேன்), यतः-ஏனெனில், मया-என்னால், ते-அவைகள், दृश्यन्ते-பார்க்கப்படுகின்றன, इति-என்று, आत्मानं-தன்னை, साक्षितया-ஸாக்ஷியாக, जानन्-அறிந்து கொண்டு. आत्मनि-தன்னிடம், साक्षिणा - ஸாக்ஷியால், दृश्यं-அறியப்படுகிற, कामादि सकलं-காமம் முதலானதை எல்லாம், स्वात्मन्येव-தனது ஆத்ம ஸ்வரூபத்திலேயே, विलापयेत्-ஒடுங்கும்படி செய்யவேண்டும்.

"காமம் முதலியவை என்னால் பார்க்கப்படுகிறது. ஆகையினால் காமம் முதலியவைகளுக்கு நான் ஸாக்ஷி" என்று ஸாக்ஷித்தன்மையுடன் ஆத்மாவை அறிந்து அந்த ஸாக்ஷியால் பார்க்கப்படும் காமம் முதலான எல்லாவற்றையும் தன்னிடத்திலேயே விலாபனம் (ஒடுங்கும்படி) செய்ய வேண்டும்.

(833-834)

(அ) எப்படி அவைகளை ஆத்மாவினிடத்தில் ஒடுங்கச் செய்கிறதென்பதை 8 சுலோகங்களில் காட்டுகிறார் :—

नाहं देहो नाप्यसुः नाक्षवर्गो नाहंकारो नो मनो नापि बुद्धिः ।
अन्तस्तेषां चापि तद्विक्रियाणां साक्षी नित्यः प्रत्यगेवाहमस्मि ॥

நாஹம் தேஹோ நாப்யஸுர் நாக்ஷவர்கோ
நாஹங்காரோ நோ மநோ நாபி புத்திः ।
அந்தஸ் தேஷாம் சாபி தத்விக்ரியாணாம்
ஸாக்ஷீ நித்ய: ப்ரத்யகேவாஹமஸ்மி ॥

अहं-நான், न देहः-தேஹமல்ல, नापि असुः-பிராணனும் அல்ல, न अक्षवर्गः-இந்திரியங்களின் கூட்டமுமல்ல, न अहंकारः-அஹங்காரமல்ல, नो मनः-மனம் அல்ல, नापि बुद्धि-புத்தியுமல்ல, तेषां अन्तः-அவைகளுக்கு உள்ளே, तद्विक्रियाणां-அவைகளின் விகாரங்களை, साक्षी-நேரில் அறிகிற, नित्यः-அழிவற்ற, प्रत्यगेव-பிரத்யகாத்ம ஸ்வரூபமாகவே, अहं-நான், अस्मि-இருக்கிறேன்.

நான் தேஹமல்ல, ப்ராணனுமல்ல, இந்த்ரியக் கூட்டமும் அல்ல. அஹங்காரமல்ல, மனஸ் அல்ல, புத்தியுமில்லை. அவைகளுக்கு உள் இருந்துகொண்டு அவைகளின் மாறுதலுக்கெல்லாம் ஸாக்ஷியாய் நித்யமாய் உள்ளேயுள்ள ஆத்மாவாகவே நான் இருக்கிறேன். (835)

वाचः साक्षी प्राणवृत्तेश्च साक्षी बुद्धेः साक्षी बुद्धिवृत्तेश्च साक्षी ।
चक्षुःश्रोत्रादीन्द्रियाणां च साक्षी साक्षी नित्यः प्रत्यगेवाहमस्मि ॥

வாச: ஸாக்ஷீ ப்ராணவ்ருத்தேச்ச ஸாக்ஷீ
புத்தே: ஸாக்ஷீ புத்திவ்ருத்தேச்ச ஸாக்ஷீ ।
சக்ஷுஃஸ்ச்ரோத்ராதீந்த்ரியாணாம் ச ஸாக்ஷீ
ஸாக்ஷீ நித்ய: ப்ரத்யகேவாஹமஸ்மி ॥

अहं-நான், वाचः-வாக்கிற்கு, साक्षी-ஸாக்ஷியாகவும், प्राणवृत्तेश्च-பிராண வ்யாபாரத்திற்கும், साक्षी-ஸாக்ஷியாகவும், बुद्धेः-புத்திக்கு, साक्षी-ஸாக்ஷியாகவும், बुद्धिवृत्तेश्च-புத்தியின் வ்யாபாரத்திற்கும், साक्षी-ஸாக்ஷியாகவும், चक्षुःश्रोत्रादीन्द्रियाणां च-கண், காது முதலான இந்த்ரியங்களுக்கும், साक्षी-ஸாக்ஷியாகவும், नित्यः-அழிவற்ற, साक्षी-ஸாக்ஷியான, प्रत्यगेव-பிரத்யகாத்மாவாகவே, अस्मि-இருக்கிறேன்.

நான் வாக்குக்கு ஸாக்ஷி, ப்ராணனுடைய வ்ருத்திக்கு ஸாக்ஷி, புத்திக்கு ஸாக்ஷி, புத்தி வ்ருத்திக்கும் ஸாக்ஷி, கண் காது முதலிய இந்த்ரியங்களுக்கும் ஸாக்ஷி. இவ்விதம் ஸாக்ஷியாய் நித்யமாய் இருக்கும் உள் ஆத்மாவாகத்தான் நான் இருக்கிறேன். (836)

नाहं स्थूलो नापि सूक्ष्मो न दीर्घः नाहं बालो नो युवा नापि वृद्धः ।
नाहं काणो नापि मूको न षण्डः साक्षी नित्यः प्रत्यगेवाहमस्मि ॥

நாஹம் ஸ்தூலோ நாபி ஸூக்ஷ்மோ ந தீர்க்கோ
நாஹம் பாலோ நோ யுவா நாபி வ்ருத்த: ।
நாஹம் காணோ நாபி மூகோ ந ஷண்ட:
ஸாக்ஷீ நித்ய: ப்ரத்யகேவாஹமஸ்மி ॥

अहं-நான், न स्थूलः-பருமனாக இல்லை, नापि सूक्ष्मः-சிறியவனாகவும் இல்லை, न दीर्घः-நீளமானவன் இல்லை, अहं-நான், न बालः-பாலனல்ல, नो युवा-வாலிபன் அல்ல, नापि वृद्धः-கிழவனுமல்ல, अहं-நான், न काणः-குருடன் அல்ல, नापि मूकः-ஊமையுமல்ல, न षण्ढः-நபும்ஸகன் அல்ல, नित्यः-அழிவற்ற, साक्षी-ஸாக்ஷியான, प्रत्यगेव-பிரத்யகாத்மாவாகவே, अहं-நான், अस्मि-இருக்கிறேன்.

நான் பருமன் இல்லை, நான் சிறியவனும் இல்லை, நீளமானவன் இல்லை, நான் பாலன் இல்லை, நான் யுவா இல்லை, கிழவனுமில்லை. நான் குருடன் இல்லை, ஊமையுமில்லை, நபும்ஸகனும் இல்லை. ஸாக்ஷியாய் நித்யமாய் உள் ஆத்மாவாகவே நான் இருக்கிறேன். (837)

नास्म्यागन्ता नापि गन्ता न हन्ता नाहं कर्ता न प्रयोक्ता न वक्ता ।
नाहं भोक्ता नो सुखी नैव दुःखी साक्षी नित्यः प्रत्यगेवाहमस्मि ॥

நாஸ்ம்யாகந்தா நாபி கந்தா ந ஹந்தா
நாஹம் கர்த்தா ந ப்ரயோக்தா ந வக்தா ।
நாஹம் போக்தா நோ ஸுகீ நைவ துக்கீ
ஸாக்ஷீ நித்ய: ப்ரத்யகேவாஹமஸ்மி ॥

आगन्ता-வருகிறவனாக, नास्मि-நான் இல்லை, नापि गन्ता-போகிறவனும் அல்ல, न हन्ता-கொல்கிறவன் அல்ல, अहं-நான், न कर्ता-செய்கிறவன் அல்ல, न प्रयोक्ता-ஏவுகிறவன் அல்ல, न वक्ता-பேசுகிறவன் அல்ல, अहं-நான், न भोक्ता-அனுபவிக்கிறவன் அல்ல, नो सुखी-ஸுகமுள்ளவன் அல்ல, नैव दुःखी-துக்கம் உள்ளவனுமல்ல, नित्यः-அழிவற்ற, साक्षी-ஸாக்ஷியான, प्रत्यगेव-ப்ரத்யகாத்மாவாகவே, अहं-நான், अस्मि-இருக்கிறேன்.

நான் வருகிறவனில்லை, போகிறவனுமில்லை. நான் கொல்கிறவன் இல்லை, நான் செய்கிறவனில்லை. ஏவுகிறவனுமில்லை சொல்கிறவனுமில்லை. நான் அனுபவிக்கிறவன் இல்லை. ஸுகத்தோடு கூடினவன் இல்லை. துக்கத்தோடு கூடினவனும்

இல்லை. ஸாக்ஷியாய் நித்யமாயிருக்கும் உள் ஆத்மாவாகவே நான் இருக்கிறேன். (888)

नाहं योगी नो वियोगी न रागी नाहं क्रोधी नैव कामी न लोभी।
नाहं बद्धो नापि युक्तो न मुक्तः साक्षी नित्यः प्रत्यगेवाहमस्मि ॥

*நாஹம் யோகீ நோ வியோகீ ந ராகீ*
*நாஹம் க்ரோதீ நைவ காமீ ந லோபீ ।*
*நாஹம் பத்தோ நாபி யுக்தோ ந முக்த:*
*ஸாக்ஷீ நித்ய: ப்ரத்யகேவாஹமஸ்மி ॥*

अहं – நான். न योगी–சேர்க்கையுள்ளவன் அல்ல, नो वियोगी–பிரிவு உள்ளவன் அல்ல, न रागी–பற்று உள்ளவன் அல்ல, अहं–நான், न क्रोधी–கோபம் உள்ளவன் அல்ல, नैव कामी–காமம் உள்ளவன் அல்ல, न लोभी–லோபமுள்ளவனல்ல अहं–நான், न बद्धः–கட்டுப் பட்டவன் அல்ல, नापि युक्तः–யோகத்தில் ஈடுபட்டவன் அல்ல, न मुक्तः–விடுபட்டவனல்ல, नित्यः– அழிவற்ற, साक्षी–ஸாக்ஷியான, प्रत्यगेव–பிரத்யகாத்மா வாகவே, अहं–நான், अस्मि–இருக்கிறேன்.

நான் சேர்க்கையுடையவன் அல்ல, பிரிவு உடையவனும் இல்லை, ராகம் உள்ளவனில்லை, கோபமுள்ளவனில்லை, காமம் உள்ளவனுமில்லை, லோபமுள்ளவனுமில்லை. நான் (ஸம்ஸாரத் தில்) கட்டுப்பட்டவனில்லை. யோகத்தில் ஈடுபடுபவன் இல்லை. முக்தனுமில்லை. உள்ளேயிருக்கும் நித்யமான ஸாக்ஷியாகவே நான் இருக்கிறேன். (889)

नान्तःप्रज्ञो नो बहिःप्रज्ञको वा नैव प्रज्ञो नापि चाप्रज्ञ एषः।
नाहं श्रोता नापि मन्ता न बोद्धा साक्षी नित्यः प्रत्यगेवाहमस्मि ॥

*நாந்த:ப்ரஜ்ஞோ நோ பஹி:ப்ரஜ்ஞகோ வா*
*நைவ ப்ரஜ்ஞோ நாபி சாப்ரஜ்ஞ ஏஷ: ।*
*நாஹம் ச்ரோதா நாபி மந்தா ந போத்தா*
*ஸாக்ஷீ நித்ய: ப்ரத்யகேவாஹமஸ்மி ॥*

**एषः**-இந்த நான். **न अन्तःप्रज्ञः**-உள் அறிவு உள்ளவன் அல்ல, **नो बहिःप्रज्ञो वा**-வெளி அறிவு உள்ளவனுமல்ல, **नैव प्रज्ञः**-ப்ராஜ்ஞனுமல்ல, **नापि च अप्रज्ञः**-ஜடனுமல்ல, **अहं**-நான், **न श्रोता**-கேட்கிறவன் அல்ல, **नापि मन्ता**-நினைக்கிறவனுமல்ல, **न बोद्धा**-அறிகிறவனல்ல, **अहं**-நான், **नित्यः**-அழிவற்ற, **साक्षी**-ஸாக்ஷியான. **प्रत्यगेव**-ப்ரத்யகாத்மாவாகவே, **अस्मि**-இருக்கிறேன்.

நான் உள் அறிவு உள்ளவன் அல்ல. அதாவது ஸ்வப்ன ஸ்தானத்தில் உள்ள தைஜஸன் அல்ல. நான் வெளி அறிவு உள்ளவன் அல்ல. அதாவது ஜாகர நிலையிலுள்ள விசுவனுமல்ல. ஸுஷுப்தி ஸ்தானத்திலுள்ள ப்ரக்ஞானகனனை ப்ராக்ஞனுமல்ல. அறிவில்லாத ஜடமும் அல்ல நான் கேட்கிறவனுமல்ல. நினைக்கிறவனுமல்ல அறிகிறவனுமல்ல. நித்யமான ஸாக்ஷி ரூபமான ப்ரத்யகாத்மாதான் நான். (840)

**न मेऽस्ति देहेन्द्रियबुद्धियोगो न पुण्यलेशोऽपि न पापलेशः ।**
**क्षुधापिपासादिषडूर्मिदूरः सदा विमुक्तोऽस्मि चिदेव केवलः ॥ ८४१ ॥**

*ந மே஽ஸ்தி தேஹேந்த்ரிய புத்தி யோகோ*
*ந புண்யலேசோ஽பி ந பாபலேச: ।*
*க்ஷுதா பிபாஸாதி ஷடூர்மி தூர:*
*ஸதா விமுக்தோ஽ஸ்மி சிதேவ கேவல: ॥*

**मे**-எனக்கு, **देहेन्द्रियबुद्धियोगः**-தேஹம், இந்திரியங்கள், புத்தி இவைகளின் ஸம்பந்தம், **नास्ति**-இல்லை, **पुण्यलेशोऽपि**-சிறிதளவு புண்யமும், **न**-இல்லை, **पापलेशः**-சிறிதளவு பாபமும், **न**-இல்லை, **क्षुधापिपासादिषडूर्मिदूरः**-பசி, தாகம் முதலான ஆறு ஊர்மி (அலை)களுக்கு (பசி, தாகம், மூப்பு, சாவு, சோகம் மோஹம்) வெகு தூரத்தில் இருப்பவன், **सदा**-எப்பொழுதும், **विमुक्तोऽस्मि**-விடுபட்டவனாக இருக்கிறேன். **केवलः**-தனித்திருக்கும், **चिदेव**-சைதன்யம்தான் (நான்).

எனக்கு தேகம் இந்திரியங்கள் புத்தி இவைகளுடன் ஸம்பந்தம் கிடையாது. புண்ணியத்தின் லேசம்கூடக்கிடையாது, பாபத்தின் லேசமும் கிடையாது, பசி தாகம், ஜரை

மரணம், சோகம் மோஹம் என்னும் ஆறு கிரமங்களுக்கும் விலகியிருப்பவன் நான். எப்பொழுதும் விடுதலையடைந்தவன் தனித்திருக்கும் சைதன்யம் தான் நான். (841)

अपाणिपादोऽहं अवाक् अचक्षुः अप्राण एवास्मि अमना ह्यबुद्धिः ।
व्योमेव पूर्णोऽस्मि विनिर्मलोऽस्मि सदैकरूपोऽस्मि चिदेव केवलः ॥

அபாணி பாதோ஽ஹமவாகசக்ஷு:
அப்ராண ஏவாஸ்ம்யமநா ஹ்யபுத்தி: ।
வ்யோமேவ பூர்ணோ஽ஸ்மி விநிர்மலோ஽ஸ்மி
ஸதைகரூபோஸ்மி சிதேவ கேவல: ॥

अहं-நான், अपाणिपादः-கை, கால் இல்லாதவன், अवाक्-வாக்கு இல்லாதவன், अचक्षुः-கண் இல்லாதவன், अप्राण एव-பிராணனில்லாதவனாகவே, अस्मि-இருக்கிறேன், अमनाः-மனஸு இல்லாதவன், अबुद्धिः-புத்தி இல்லாதவன், व्योमेव-ஆகாயம் போல, पूर्णः अस्मि-(எங்கும்) நிறைந்தவனாக இருக்கிறேன், विनिर्मलः अस्मि-மிகவும் நிர்மலமாக இருக்கிறேன், सदा-எப்பொழுதும், एकरूपः-ஒரே ஸ்வரூபமாக, अस्मि-இருக்கிறேன், केवलः-தனித்ததான, चिदेव-சைதன்யம் தான் நான்.

நான் கைகால் இல்லாதவன், வாக்கில்லாதவன். கண் இல்லாதவன், பிராணனில்லாதவனாகவே இருக்கிறேன். மனஸ் இல்லாதவன், புத்தியுமில்லாதவன். ஆகாசம் போல நிறைந்து இருக்கிறேன், வெகு நிர்மலமாய் இருக்கிறேன். எப்பொழுதும் ஒரே ஸ்வரூபத்துடன் இருக்கிறேன். சுத்தமான சைதன்யமே நான். (842)

इति स्वं आत्मानं अवेक्षमाणः प्रतीतदृश्यं प्रविलापयन् सदा ।
जहाति विद्वान् विपरीतभावं स्वाभाविकभ्रान्तिवशात् प्रतीतम् ॥

இதி ஸ்வமாத்மாநமவேக்ஷமாண:
ப்ரதீத த்ருச்யம் ப்ரவிலாபயன் ஸதா ।
ஜஹாதி வித்வான் விபரீதபாவம்
ஸ்வாபாவிக ப்ராந்திவசாத் ப்ரதீதம் ॥

इति - இவ்வாறு, स्वं आत्मानं - தனது ஆத்மாவை, अवेक्षमाणः-பார்த்துக்கொண்டு, प्रतीतदृश्यं-தோன்றுகிற அறியப்படும் பொருளை, सदा-எப்பொழுதும், प्रविलापयन्-மறையும்படி செய்துகொண்டு, विद्वान्-அறிவுள்ளவன், स्वाभाविकभ्रान्तिवशात्-ஸ்வபாவமாக ஏற்பட்ட ப்ராந்தியால், प्रतीतं-தோன்றுகிற, विपरीत भावं-விபரீதமான எண்ணத்தை जहाति-விட்டுவிடுகிறான்.

இவ்விதமாகத் தன்னுடைய ஆத்மாவைப் பார்த்துக் கொண்டு, தோன்றுகிற த்ருச்யத்தை (பார்க்கப்படும் பதார்த் தத்தை) எப்பொழுதும் இல்லையென்று செய்துகொண்டு, வித்வானுயிருப்பவன் ஸ்வபாவமாக ஏற்படும் ப்ராந்தியினால் தோன்றுகிற விபரீத எண்ணத்தைத் தள்ளிவிடுகிறான். (843)

विपरीतात्मतास्फूर्तिरेव मुक्तिरितीर्यते ।
सदा समाहितस्यैव सैषा सिध्यति नान्यथा ॥ ८४४ ॥

விபரீதாத்மதா ஸ்பூர்த்திரேவ முக்திரிதீர்யதே ।
ஸதா ஸமாஹிதஸ்யைவ ஸைஷா ஸித்யதி நாந்யதா ॥

विपरीतात्मता-ஆத்மாவுக்கு நேர் எதிரான அநாத்ம வஸ்துக்களில் ஆத்மத்தன்மை अस्फूर्तिरेव - தோன்றாமல் இருப்பதுதான், मुक्तिः इति-முக்தி என்று, ईर्यते-சொல்லப் படுகிறது, सा एषा-அந்த இது, सदा-எப்பொழுதும், समाहितस्यैव-ஸமாதியில் இருப்பவனுக்குத்தான், सिध्यति ஸித்திக் கிறது, अन्यथा-வேறு விதமாக, न-ஸித்திக்காது.

(ஆத்மாவிற்கு) விபரீதமான அநாத்ம வஸ்துக்களில் ஆத்மத்தன்மை தோன்றாமலிருப்பதே முக்தி என்று சொல்லப் படுகிறது. இது எப்பொழுதும் ஸமாதியிலிருப்பவருக்குத்தான் ஸித்திக்கும். வேறு முறையில் ஸித்திக்காது. (844)

न वेषभाषाभिरमुष्य मुक्तिः या केवलाखण्डचिदात्मना स्थितिः ।
तत्सिद्धये स्वात्मनि सर्वदा स्थितो जह्यात् अहंतां ममतां उपाधौ ॥

ந வேஷ பாஷாபிரமுஷ்ய முக்திர்
யா கேவலாகண்ட சிதாத்மநா ஸ்திதி: ।
தத் ஸித்தயே ஸ்வாத்மனி ஸர்வதா ஸ்திதோ
ஜஹ்யாதஹந்தாம் மமதாமுபாதௌ ॥

केवलाखण्डचिदात्मना-சுத்தமான பிரிவு அற்ற சைதன்ய ஸ்வரூபமாக, या स्थिति-இருக்கும் நிலை எதுவோ, (அந்த) मुक्तिः-முக்தியானது, अमुष्य-இவனுக்கு, वेषभाषाभिः-வேஷங்களாலும் பேச்சுக்களாலும், न-ஏற்படாது, तत्सिद्धये-அது ஸித்திப்பதற்கு, स्वात्मनि-தன் ஆத்ம ஸ்வரூபத்தில், सर्वदा-எப்பொழுதும், स्थितः-இருந்துகொண்டு, उपाधौ-சரீரம் முதலான உபாதியில், अहन्तां-நான் என்ற எண்ணத்தையும், ममतां-என்னுடையது என்ற எண்ணத்தையும், जह्यात्-விட்டுவிடவேண்டும்.

சுத்தமான அகண்ட சைதன்ய ஸ்வரூபமாகவே இருந்துவிடுகிறது என்பது எதுவோ, அந்த முக்தி இவனுக்கு வெளி வேஷங்களினாலாவது பேச்சுக்களினாலாவது ஏற்பட்டுவிடாது. அது ஏற்படுவதற்கு எப்பொழுதும் தன் ஆத்ம ஸ்வரூபத்திலேயே இருந்துகொண்டு சரீரம் முதலான உபாதிகளில் நான் என்பதையும் என்னுடையது என்பதையும் விட்டுவிடவேண்டும். (845)

स्वात्मतत्त्वं समालम्ब्य कुर्यात् प्रकृतिनाशनम् ।
तेनैव मुक्तो भवति नान्यथा कर्मकोटिभिः ॥ ८४६ ॥

ஸ்வாத்மதத்வம் ஸமாலம்ப்ய குர்யாத் ப்ரக்ருதி நாசனம் ।
தேனைவ முக்தோ பவதி நான்யதா கர்மகோடிபி: ॥

स्वात्मतत्त्वं-தனது ஆத்ம ஸ்வரூபத்தை, समालम्ब्य-பிடித்துக்கொண்டு, प्रकृतिनाशनं-ப்ரக்ருதியின் நாசத்தை, कुर्यात्-செய்யவேண்டும், तेनैव-அதனால்தான், मुक्तः-முக்தனாக भवति-ஆகிறான், अन्यथा-வேறு விதமாக, कर्मकोटिभिः-கோடி கர்மாக்களாலும், न-முக்தனாக ஆவதில்லை.

தன்னுடைய ஆத்மதத்வத்தை நன்கு பிடித்துக்கொண்டு ப்ரக்ருதியின் நாசத்தைச் செய்யவேண்டும். அதனால்தான்

முக்தி ஏற்படுகிறது. ப்ரக்ருதியை அழிக்காமல், ஆத்மாவைப் பிடித்துக்கொள்ளாமல் கோடிக்கணக்கான கர்மாக்களைச் செய்தபோதிலும் முக்தி ஏற்படாது. (846)

ज्ञात्वा देवं सर्वपाशापहानिः क्षीणैः क्लेशैर्जन्ममृत्युप्रहाणिः ।
इत्येवैषा वैदिकी वाग्ब्रवीति क्लेशक्षत्यां जन्ममृत्युप्रहाणिम् ॥ ८४७ ॥

ஞாத்வா தேவம் ஸர்வ பாசாபஹானி:
க்ஷீணை: க்லேசைர் ஜன்ம ம்ருத்யு ப்ரஹாணி: ।
இத்யேவைஷா வைதிகீ வாக் ப்ரவீதி
க்லேச க்ஷத்யாம் ஜன்ம ம்ருத்யு ப்ரஹாணிம் ॥

देवं-தேவனை, ज्ञात्वा-அறிந்து, सर्वपाशापहानिः எல்லா பாசங்களின் விநாசம் ஏற்படுகிறது, क्षीणैः-அழிந்துபோன, क्लेशैः-கிலேசங்களால், जन्ममृत्युप्रहाणि:-பிறவி மரணங்களின் நாசம் ஏற்படுகிறது, इत्येव-என்றே, एषा-இந்த, वैदिकी वाक्-வேதத்திலுள்ள வாக்கு, क्लेशक्षत्यां-கிலேசங்கள் அழிவதில், जन्ममृत्युप्रहाणिं-பிறவி மரணங்களின் விநாசத்தை, ब्रवीति-சொல்லுகிறது.

"ஸ்வயம்ப்ரகாசமான ஆத்மாவை நானே அவர் என்று தெரிந்துகொண்டுவிட்டால் அவித்யாரூபமான எல்லாவித கட்டுகளும் போய்விடும். அவித்யாதிகளான க்லேசங்கள் போய்விட்டால் ஜனனமரணமும் இராது" என்ற இந்த வேதவாக்கு (ச்வேதாச்வதர உபநிஷத் 1-11) க்லேசம் போய்விட்டால் ஜனனமரணமும் போய்விடுமென்றே சொல்லுகிறது. (847)

भूयो जन्माद्यप्रसक्तिः विमुक्तिः क्लेशक्षत्यां भाति जन्माद्यभावः ।
क्लेशक्षत्याः हेतुः आत्मैकनिष्ठा तस्मात् कार्या ह्यात्मनिष्ठा मुमुक्षोः ॥

பூயோ ஜன்மாத்யப்ரஸக்திர் விமுக்தி:
க்லேச க்ஷத்யாம் பாதி ஜன்மாத்யபாவ: ।
க்லேச க்ஷத்யா ஹேதுராத்மைக நிஷ்டா
தஸ்மாத் கார்யா ஹ்யாத்மநிஷ்டா முமுக்ஷோ: ॥

भूयः—மறுபடியும், जन्माद्यप्रसक्तिः—பிறவி முதலியவை ஏற்படாமலிருப்பது, विमुक्तिः—முக்தியாகும். क्लेशक्षयात्—கிலேசங்களின் நாசத்தால், जन्माद्यभावः—பிறவி முதலியவைகள் இல்லாமலிருப்பது, भाति—தெரிகிறது, क्लेशक्षयाः—கிலேசங்களின் நாசத்திற்கு, आत्मैकनिष्ठा—ஆத்மா ஒன்றிலேயே நிலைத்திருப்பது, हेतुः—காரணம், तस्मात्—ஆகையால். मुमुक्षोः—மோக்ஷம் அடைய விருப்பமுள்ளவனுக்கு, आत्मनिष्ठा—ஆத்மாவிலேயே நிலைத்திருப்பது कार्या—செய்யத்தக்கது.

மறுபடியும் ஜன்மம் முதலானதற்கு இடமன்னியிலிருப்பது தான் முக்தி. க்லேசத்திற்கு நாசம் வந்தால் ஜன்மம் முதலானது இராது என்று தெரிகிறது. க்லேசத்தை நாசம் செய்வதற்கு ஆத்மா ஒன்றிலேயே நிலைத்திருப்பதுதான் ஸாதனம். ஆகையால் முமுக்ஷுவால் ஆத்மாவில் நிலைத்து இருப்பது அவசியம் செய்யப்படவேண்டும். (848)

क्लेशाः स्युः वासना एव जन्तोः जन्मादिकारणम् ।
ज्ञाननिष्ठाग्निना दाहे तासां नो जन्महेतुता ॥ ८४९ ॥

க்லேசா: ஸ்யுர் வாஸநா ஏவ ஜந்தோர் ஜன்மாதி
காரணம் ।
ஞாநநிஷ்டாக்நிநா தாஹே தாஸாம் நோ ஜன்ம
ஹேதுதா ॥

जन्तोः—பிராணிக்கு, वासना एव—வாஸனைகள்தான், जन्मादिकारणं—பிறப்பு முதலியவற்றிற்குக்காரணமான, क्लेशाः स्युः—க்லேசங்கள் ஆகும், ज्ञाननिष्ठाग्निना—ஞானத்திலேயே நிலைத்திருப்பது என்ற அக்னியால், तासां दाहे—அந்த வாஸனைகள் பொசுங்கிவிட்டால், नो जन्महेतुता—(அவைகளுக்கு) பிறவிக்குக் காரணமாயிருக்கும்தன்மை இருக்காது.

வாஸனைகள்தான் ப்ராணிகளுக்கு ஜன்மம் முதலியதிற்குக் காரணமாயுள்ள க்லேசங்களாகும். ஞானநிலையாகிற அக்னியிலும் அந்த வாஸனைகளை எரித்துவிட்டால், அவைகளுக்கு ஜன்மத்திற்குக் காரணமாயிருக்கும் தன்மை இராது. (849)

बीजान्यग्निप्रदग्धानि न रोहन्ति यथा पुनः ।
ज्ञानदग्धैः तथा क्लेशैः नात्मा संपद्यते पुनः ॥ ८५० ॥

பீஜாந்யக்னி ப்ரதக்தானி ந ரோஹந்தி யதா புந: ।
ஞாந தக்தைஸ் ததா க்லேசைர் நாத்மா ஸம்பத்யதே புந: ॥

यथा-எப்படி, अग्निदग्धानि-நெருப்பில் பொசுங்கிய, बीजानि-விதைகள், पुनः-மறுபடியும், न रोहन्ति-முளைப்பதில்லையோ, तथा-அப்படியே, ज्ञानदग्धैः-ஞானத்தால் பொசுங்கிய, क्लेशैः-க்லேசங்களால், आत्मा-ஆத்மா, पुनः-மறுபடியும், न संपद्यते-பிறக்கிறதில்லை.

அக்னியால் நன்கு எரிக்கப்பட்ட விதைகள் எப்படி மறுபடியும் முளைக்கிறதில்லையோ, அப்படியே ஞானத்தினால் எரிக்கப்பட்ட க்லேசங்களால் ஆத்மா மறுபடியும் உண்டாகிறதில்லை. (850)

तस्मात् मुमुक्षोः कर्तव्या ज्ञाननिष्ठा प्रयत्नतः ।
निःशेषवासनाक्षत्यै विपरीतनिवृत्तये ॥ ८५१ ॥

தஸ்மான் முமுக்ஷோ: கர்தவ்யா ஞாநநிஷ்டா ப்ரயத்நத: ।
நிச்சேஷ வாஸநாக்ஷத்யை விபரீத நிவ்ருத்தயே ॥

तस्मात्-ஆகையால், मुमुक्षोः மோக்ஷம் அடையவிருப்பமுள்ளவனுக்கு, निश्शेषवासनाक्षत्यै-பாக்கியில்லாமல் வாஸனைகள் அழிவதற்கும், विपरीतनिवृत्तये-விபரீத பாவனை நீங்குவதற்கும், प्रयत्नतः-முயற்சியுடன், ज्ञाननिष्ठा-ஞான நிஷ்டையானது, कर्तव्या-செய்யத்தக்கது.

ஆகையினால் முமுக்ஷுவால் பாக்கியன்றியில் முழுவதும் வாஸனைகள் போவதற்கும் விபரீத பாவனைகள் நிவ்ருத்தியாவதற்கும் வெகு ப்ரயத்னம் எடுத்துக்கொண்டு ஞான நிஷ்டை ஏற்படுத்திக்கொள்ளவேண்டும். (851)

(அ) ஞானத்திலேயே நிலைத்திருக்கவேண்டும் என்று சொன்னபடியால் அதை அப்யாஸம் செய்கிறவருக்கு எவ்வித

கர்மாவும் இருக்கமுடியாது என்பதை 14 ச்லோகங்களில் வற்புறுத்துகிறார் :—

ज्ञाननिष्ठातत्परस्य नैव कर्मोपयुज्यते ।

ஞாந நிஷ்டா தத்பரஸ்ய நைவ கர்மோபயுஜ்யதே ।

**ज्ञाननिष्ठातत्परस्य** - ஞான நிஷ்டையில் ஈடுபட்டவனுக்கு, **कर्म**—கர்மாவானது, **नैव उपयुज्यते**- உபயோகப்படவேண்டாது.

ஞான நிலையில் ஈடுபடுபவருக்கு கர்மா உபயோகப்படவேண்டாது.

कर्मणो ज्ञाननिष्ठायाः न सिध्यति सह स्थितिः ।
परस्परविरुद्धत्वात् तयोः भिन्नस्वभावयोः ॥ ८५२ ॥

கர்மணோ ஞாநநிஷ்டாயா ந ஸித்யதி ஸஹஸ்திதி: ।
பரஸ்பர விருத்தத்வாத் தயோர் பிந்ந ஸ்வபாவயோ: ॥

**भिन्नस्वभावयोः**-வெவ்வேறு ஸ்வபாவமுள்ள, **तयोः** - அந்த கர்மாவும் ஞானநிஷ்டையும், **परस्परविरुद्धत्वात्** - ஒன்றுக்கொன்று விருத்தமாயிருப்பதால், **कर्मणः** - கர்மாவுக்கும், **ज्ञाननिष्ठायाः**-ஞான நிஷ்டைக்கும், **सह स्थितिः**-சேர்ந்து இருப்பது, **न सिध्यति**-ஸித்திக்காது.

வெவ்வேறு ஸ்வபாவமுள்ள கர்மாவும் ஞான நிஷ்டையும் ஒன்றுக்கொன்று விருத்தமாயிருப்பதால் கர்மாவும் ஞான நிஷ்டையும் சேர்ந்திருப்பது ஸாத்யமில்லை. (852)

कर्तृत्वभावनापूर्वं कर्म, ज्ञानं विलक्षणम् ।
देहात्मबुद्धेः विच्छित्त्यै ज्ञानं, कर्म विवृद्धये ॥ ८५३ ॥

கர்த்ருத்வ பாவநா பூர்வம் கர்ம, ஞானம் விலக்ஷணம் ।
தேஹாத்மபுத்தேர் விச்சித்யை ஞானம், கர்ம
விவ்ருத்தயே ॥

**कर्म**—கர்மாவானது, **कर्तृत्व भावनापूर्वं**-நான் கர்த்தா (செய்கிறவன்) என்ற எண்ணத்தை முன்னிட்டது. **ज्ञानं**-

ஞானம் विलक्षणं-(இதற்கு) மாறுபட்ட தன்மையுள்ளது, देहात्मबुद्धेः-தேஹத்தில் நான் என்ற எண்ணத்தை, विच्छित्त्यै-தொலைப்பதற்காக, ज्ञानं-ஞானம், विवृद्धये-(அதை) வளர்ப்பதற்காக कर्म-கர்மா.

நான் செய்கிறேன் என்கிற எண்ணத்தை முன்னிட்டது கர்மா, இதற்கு மாறுதலான லக்ஷணம் (நான் செய்கிறவன் இல்லை என்ற பாவனை) உள்ளது ஞானம். தேஹத்தில் நான் என்கிற புத்தி போவதற்காக ஞானம், (அந்த புத்தியை) நன்கு வ்ருத்திசெய்வதற்கு கர்மா. (853)

अज्ञानमूलकं कर्म ज्ञानं तु उभयनाशकम् ।
ज्ञानेन कर्मणो योगः कथं सिध्यति वैरिणा ॥ ८५४ ॥

அக்ஞான மூலகம் கர்ம ஞானம் தூபய நாசகம் ।
ஞானேன கர்மணோ யோக: கதம் ஸித்யதி வைரிணா ॥

कर्म-கர்மாவானது, अज्ञानमूलकं-அக்ஞானத்தைக் காரணமாகக் கொண்டது. ज्ञानं तु-ஞானமோவெனில், उभयनाशकं-அக்ஞானம், கர்மா இரண்டையும் அழிக்கக் கூடியது कर्मणः-கர்மாவுக்கு, वैरिणा-எதிரியான, ज्ञानेन-ஞானத்தோடு, योगः-சேர்க்கை, कथं सिध्यति-எப்படி ஏற்படும்?

அக்ஞானத்தைக் காரணமாகக்கொண்டது கர்மா, ஞானமோ அக்ஞானம், கர்மா இரண்டையும் நாசம்செய்வது. கர்மாவிற்குத் தன் சத்ருவான ஞானத்துடன் சேர்க்கை எப்படி இருக்கமுடியும்? (854)

सहयोगो न घटते यथा तिमिरतेजसोः ।
निमेषोन्मेषयोर्वाऽपि तथैव ज्ञानकर्मणोः ॥ ८५५ ॥

ஸஹயோகோ ந கடதே யதா திமிர தேஜஸோ: ।
நிமேஷோந்மேஷயோர் வாபி ததைவ ஞான கர்மணோ: ॥

यथा-எப்படி, तिमिरतेजसोः-இருட்டுக்கும் வெளிச்சத்திற்கும், निमेषोन्मेषयोर्वापि-அல்லது கண்ணை மூடுவதற்கும்

திறப்பதற்கும், सहयोगः-கூடச்சேர்ந்திருப்பது, न घटते-பொருந்தாதோ, तथैव- அப்படியே, ज्ञानकर्मणोः-ஞானத்திற்கும், கர்மாவிற்கும் (கூடச் சேர்ந்திருப்பது பொருந்தாது.)

இருட்டிற்கும் வெளிச்சத்திற்கும், அல்லது கண்ணை மூடுவதற்கும் திறப்பதற்கும், எப்படி கூடச் சேர்ந்திருப்பது பொருந்தாதோ, அப்படியேதான் ஞானத்திற்கும் கர்மாவுக்கும் கூடச்சேர்ந்திருப்பது பொருந்தாது. (855)

प्रतीचीं पश्यतः पुंसः कुतः प्राचीविलोकनम् ।
प्रत्यक्प्रवणचित्तस्य कुतः कर्मणि योग्यता ॥ ८५६ ॥

*ப்ரதீசீம் பச்யத: பும்ஸ: குத: ப்ராசீ விலோகனம் ।*
*ப்ரத்யக் ப்ரவண சித்தஸ்ய குத: கர்மணி யோக்யதா ॥*

प्रतीचीं-மேற்கு திசையை, पश्यतः-பார்க்கிற, पुंसः-மனிதனுக்கு, प्राचीविलोकनं-கிழக்குத் திசையைப் பார்ப்பது, कुतः-எப்படி ஏற்படும்? प्रत्यक्प्रवणचित्तस्य-பிரத்யகாத்மாவில் ஈடுபடும் மனமுள்ளவனுக்கு, कर्मणि-கர்மா செய்வதில், योग्यता-தகுதி, कुतः-எப்படி ஏற்படும்?

மேற்கே பார்த்துக்கொண்டிருக்கிற மனிதனுக்கு கிழக்கே பார்ப்பது எப்படி ஸாத்யம்? உள்ளே இருக்கும் ஆத்மா விடத்தில் ஈடுபட்ட மனமுள்ளவனுக்கு கர்மா செய்வதில் யோக்யதை எப்படி இருக்கமுடியும்? (856)

ज्ञानैकनिष्ठानिरतस्य भिक्षोः नैवावकाशोऽस्ति हि कर्मतन्त्रे ।
तदेव कर्मास्य तदेव संध्या तदेव सर्वं न ततोऽन्यदस्ति ॥ ८५७ ॥

*ஞானைகநிஷ்டா நிரதஸ்ய பிக்ஷோ:*
*நைவாவகாசோऽஸ்தி ஹி கர்மதந்த்ரே ।*
*ததேவ கர்மாஸ்ய ததேவ ஸந்த்யா*
*ததேவ ஸர்வம் ந ததோऽன்யதஸ்தி ॥*

ज्ञानैकनिष्ठानिरतस्य - ஞானம் ஒன்றிலேயே நிலைத்திருப்பதில் ஈடுபட்ட, भिक्षोः-ஸந்நியாசிக்கு, कर्मतन्त्रे-கர்மாவைச்

செய்வதில், अवकाश एव-அவகாசமே, नास्ति हि-கிடையாது அல்லவா! तदेव-அந்த ஞான நிஷ்டைதான், अस्य-இந்த ஸந்நியாசிக்கு, कर्म-கர்மா. तदेव-அதுதான், सन्ध्या-ஸந்த்யோபாஸனம், तदेव-அதுதான், सर्वं-எல்லாம், ततः-அதைக்காட்டிலும், अन्यत्-வேறு, नास्ति-கிடையாது.

ஞானம் ஒன்றிலேயே நிலைத்திருப்பதில் ஈடுபட்ட ஸந்நியாஸிக்கு கர்மா செய்வதற்கு அவகாசமே இராதே. அந்த ஞான நிஷ்டைதான் இந்த பிக்ஷுவுக்கு கர்மா. அதுவேதான் ஸந்த்யா உபாஸனை. அதுவேதான் எல்லாம். அதைத்தவிர வேறு யாதொன்றும் கிடையாது. (857)

बुद्धिकल्पितमालिन्यक्षालनं स्नानं आत्मनः ।
तेनैव शुद्धिः एतस्य न मृदा न जलेन च ॥ ८५८ ॥

புத்தி கல்பித மாலிந்யக்ஷாளனம் ஸ்நானமாத்மன: ।
தேனைவ சுத்திரேதஸ்ய ந ம்ருதா ந ஜலேந ச ॥

बुद्धिकल्पित-புத்தியால் கல்பிக்கப்பட்ட, मालिन्यक्षालनं-அழுக்கைப் போக்குவது, आत्मनः-ஆத்மாவிற்கு, स्नानं-ஸ்நானம், तेनैव-அதனாலேயே, एतस्य இந்த ஆத்மாவிற்கு, शुद्धिः-பரிசுத்தி मृदा-மண்ணால், न-(சுத்தி) இல்லை, जलेन च-தண்ணீராலும் न-இல்லை.

ஆத்மாவிற்கு ஸ்நானம் என்பது புத்தியினால் ஏற்பட்டிருக்கும் அழுக்கை அலம்புவதுதான். அதனாலேயே இவருக்கு சுத்தி. மண்ணினால் சுத்தியில்லை. ஜலத்தினாலும் இல்லை. (858)

स्वस्वरूपे मनःस्थानं अनुष्ठानं तदिष्यते ।
करणत्रयसाध्यं यत् तत् मृषा तदसत्यतः ॥ ८५९ ॥

ஸ்வஸ்வரூபே மன:ஸ்தானமநுஷ்டானம் ததிஷ்யதே ।
கரணத்ரய ஸாத்யம் யத் தத் ம்ருஷா ததஸத்யத: ॥

स्वस्वरूपे-தனது ஆத்ம ஸ்வரூபத்தில், मनःस्थानं-மனம் நிலைத்திருப்பது (எதுவோ), तत्-அது, अनुष्ठानं-அனுஷ்டான

மாக, दृश्यते-கருதப்படுகிறது. यत्-எது, करणत्रयसाध्यं-மனம், வாக்கு, சரீரம் என்னும் மூன்று கரணங்களால் செய்யத்தக்கதோ, तत्-அது, तदसत्यतः-அந்த முக்கரணங்களும் வாஸ்தவமில்லாததால், मृषा-பொய்.

தன் ஆத்மஸ்வரூபத்தில் மனஸ் நிலைத்திருப்பது எதுவோ அதுவே அநுஷ்டானமாகக் கருதப்படுகிறது. மனஸ், வாக்கு, சரீரம் என்ற மூன்று கரணங்களால் (கருவிகளால்) எது செய்யப்படுகிறதோ அது வாஸ்தவமான அநுஷ்டானமில்லை. ஏனெனில் அந்த மூன்று கரணங்களும் வாஸ்தவமல்ல. பொய்யான கரணங்களால் செய்யப்படும் அநுஷ்டானமும் பொய்யாகத்தான் இருக்கும். (859)

त्रिनिषिध्याखिलं दृश्यं स्वस्वरूपेण या स्थितिः ।
सा संध्या तत् अनुष्ठानं तत् दानं तत् हि भोजनम् ॥ ८६० ॥

விநிஷித்யாகிலம் த்ருச்யம் ஸ்வஸ்வரூபேண யா ஸ்திதி: ।
ஸா ஸந்த்யா ததநுஷ்டானம் தத் தானம் தத் ஹி
போஜனம் ॥

दृश्यं-காணப்படும், अखिलं-எல்லாவற்றையும், विनिषिध्य இல்லாமல் செய்துவிட்டு, स्वस्वरूपेण-தனது ஆத்ம ஸ்வரூபமாக, या स्थितिः-இருப்பது எதுவோ, सा-அது, संध्या-ஸந்த்யோபாஸனம், तत् अनुष्ठानं-அது அனுஷ்டானம், तत्-அது, दानं-தானம், तत् हि भोजनं-அதுவே போஜனம்.

த்ருச்யமான எல்லாவற்றையும் நன்கு நிஷேதம்பண்ணி தன் ஸ்வரூபமாகவே இருப்பது எதுவோ, அதுதான் ஸந்த்யை. அதுதான் அநுஷ்டானம். அதுவே தானம். அதுவே போஜனம். (860)

विज्ञातपरमार्थानां शुद्धसत्त्वात्मनां सताम् ।
यतीनां किं अनुष्ठानं स्वानुसंधिं विनाऽपरम् ॥ ८६१ ॥

விஜ்ஞாத பரமார்த்தானாம் சுத்தஸத்வாத்மனாம் ஸதாம் ।
யதீனாம் கிமநுஷ்டானம் ஸ்வாநுஸந்திம் விநாऽபரம் ॥

**विज्ञातात्मयाथार्थ्यानां** - உண்மைப்பொருளான ஆத்மாவை அறிந்தவர்களும், **शुद्धसत्त्वात्मनां**- சுத்தமான ஸத்வ ஸ்வபாவமுள்ளவர்களாயும், **सतां**-ஸாதுக்களாயும் உள்ள, **यतीनां**- ஸந்யாஸிகளுக்கு, **स्वानुसन्धि विना**-தன் ஆத்மாவை அனுஸந்தானம் செய்வதைத் தவிற, **अपरं**-வேறு, **अनुष्ठानं**- அனுஷ்டானம், **किं**-எது இருக்கிறது?

உண்மையான ஆத்மதத்வத்தை அறிந்தவர்களாயும், சுத்தமான ஸத்வஸ்வபாவமுள்ளவர்களாயும், ஸாதுக்களாயும் உள்ள ஸந்யாஸிகளுக்குத் தன் ஆத்மாவை அனுஸந்தானம் செய்வதைத்தவிற வேறு என்ன அநுஷ்டானம் இருக்க முடியும்? (861)

तस्मात् क्रियान्तरं त्यक्त्वा ज्ञाननिष्ठापरो यतिः ।
सदाऽऽत्मनिष्ठया तिष्ठेत् निश्चलः तत्परायणः ॥ ८६२ ॥

தஸ்மாத் க்ரியாந்தரம் த்யக்த்வா ஞானநிஷ்டாபரோ யதி:।
ஸதாத்மநிஷ்டயா திஷ்டேத் நிச்சலஸ் தத்பராயண: ॥

**तस्मात्** - ஆகையால், **ज्ञाननिष्ठापरः**-ஞான நிஷ்டையில் ஈடுபட்ட, **यतिः**-யதியானவர், **क्रियान्तरं**-வேறு கர்மாவை, **त्यक्त्वा**-விட்டுவிட்டு, **तत्परायणः**-அதையே முக்ய லக்ஷ்யமாகக் கொண்டு, **निश्चलः**-சலிக்காதவனாக, **सदा**-எப்பொழுதும், **आत्मनिष्ठया**-ஆத்ம நிஷ்டையுடன், **तिष्ठेत्**-இருக்கவேண்டும்.

ஆகையால் யதியானவர் வேறு கார்யங்களை விட்டுவிட்டு ஞானநிஷ்டையில் ஈடுபட்டு அதிலேயே நோக்கத்துடன சலிக்காமல் எப்பொழுதும் ஆத்மநிஷ்டையுடன் இருந்து வரவேண்டியது. (862)

कर्तव्यं स्वोचितं कर्म योगं आरोढुं इच्छता ।
आरोहणं कुर्वतस्तु कर्म नारोहणं मतम् ॥ ८६३ ॥

கர்தவ்யம் ஸ்வோசிதம் கர்ம யோகமாரோடுமிச்சதா ।
ஆரோஹணம் குர்வதஸ்து கர்ம நாரோஹணம் மதம ॥

योगं-யோக நிலையில், आरोढुं-ஏறுவதற்கு, इच्छता-விரும்புகிறவனால், स्वोचितं-தனக்கு உசிதமான, कर्म-கர்மா வானது, कर्तव्यं-செய்யத்தக்கது आरोहणं-ஏறுவதை, कुर्वतस्तु-செய்கிறவனுக்கோவெனில், कर्म-கர்மாவானது, आरोहणं-ஏறுவதற்கு ஸாதனமாக, न मतं-கருதப்படவில்லை.

யோகநிலையில் ஏறுவதற்கு விருப்பமுள்ளவனால் தன் தன் வர்ணத்திற்கும் ஆச்ரமத்திற்கும் உசிதமான கர்மா செய்யத் தக்கதுதான் கர்மாக்கள், யோகநிலையில் ஏற விருப்பம் ஏற்படு வதற்கு ஸாதனம். பலனில் ஆசையில்லாமல் ஈசுவரார்ப்பண புத்தியுடன் நித்யநைமித்திக கர்மாக்களைச் செய்வதால் சித்தத்திற்கு சுத்தி ஏற்பட்டு அதன்மூலம் யோகநிலையில் ஏறுவதற்கு இச்சை இண்டாகிறது. இதே கருத்தைத்தான் கீதையில் (6-7)

आरुरुक्षोर्मुनेर्योगं कर्म कारणमुच्यते ।

என்று பகவான் கூறுகிறார். யோகத்தில் ஆருருக்ஷுவாக ஆவதற்கு கர்மா காரணம் என்பது இதன் கருத்து. இதே அபிப்ராயத்தில்தான் ஜிஜ்ஞாஸைக்கும் முமுக்ஷைக்கும் கர்மா காரணம் என்று சொல்லப்படுகிறது. கர்மாக்களால் சித்த சுத்தி ஏற்பட்டு யோகாரோகணத்தில தீவ்ரவிருப்பம் வந்தபின் ஆரோஹணம் செய்வதற்குக் கர்மா காரணமில்லை. (863)

(அ) யோகாரோஹணம் செய்வதற்குக் கர்மா ஸாதனம் இல்லை என்பதுமட்டுமல்ல. கர்மா இடைஞ்சலாகத்தான் ஆகும் என்பதைக் கூறுகிறார் :—

योगं समारोहति यो मुमुक्षुः क्रियान्तरं तस्य न युक्तमीषत् ।
क्रियान्तरासक्तमनाः पतत्यसौ तालद्रुमारोहणकर्तृवत् ध्रुवम् ॥

யோகம் ஸமாரோஹதி யோ முமுக்ஷு:
க்ரியாந்தரம் தஸ்ய ந யுக்தமீஷத் ।
க்ரியாந்தராஸக்தமநா: பதத்யஸௌ
தாளத்ருமாரோஹண கர்த்ருவத் த்ருவம் ॥

मुमुक्षुः-மோக்ஷம் அடைவதில் விருப்பமுள்ள, यः-எவன் योगं-யோகத்தில், समारोहति-ஏறுகிறானோ, तस्य-அவனுக்கு, क्रियान्तरं-வேறு கர்மா, ईषत्-கொஞ்சமும், न युक्तं-உசிதமில்லை. क्रियान्तरासक्तमनाः-வேறு கார்யத்தில் ஈடுபட்ட

மனம் உள்ள असौ-அவன், ध्रुवं-நிச்சயமாக, तालद्रुमारोहण-कर्तृवत् - பனைமரத்தில் ஏறுவதைச் செய்கிறவனைபோல், पतति-விழுகிறான்.

எந்த முமுக்ஷு யோகநிலைக்கு ஏறுகிறாரோ அவருக்கு வேறு கார்யம் கொஞ்சமேனும் நியாயமாகாது. வேறு கார்யத்தில் பற்றுள்ள மனஸ் உள்ளவனாய் இருந்தால் அவன் கீழேதான் விழுவான். பனைமரத்தில் ஏறிக்கொண்டிருக்கிறவன் வேறு கார்யத்தில் கவனம் செலுத்தினால் கீழே விழுந்துவிடுவான் அல்லவா? அவன் மேலே எப்படி ஏற முடியும்? இதுபோலவேதான். (864)

(அ) ஏறுகிறவருக்கே கர்மா கிடையாதென்றால் ஏறினவருக்குக் கர்மா நிச்சயம் கிடையாது என்பதைக் காட்டுகிறார்:-

योगारूढस्य सिद्धस्य कृतकृत्यस्य धीमतः ।
नास्त्येव हि बहिर्दृष्टिः का कथा तत्र कर्मणाम् ।

யோகாரூடஸ்ய ஸித்தஸ்ய க்ருத க்ருத்யஸ்ய தீமத: ।
நாஸ்த்யேவ ஹி பஹிர்த்ருஷ்டி: கா கதா தத்ர கர்மணாம்

योगारूढस्य-யோகத்தில் ஏறினவரும், सिद्धस्य-ஸித்தி பெற்றவரும், कृतकृत्यस्य - செய்யவேண்டியதைச் செய்து முடித்தவருமான, धीमतः-புத்திமானுக்கு, बहिर्दृष्टिः-வெளிப்பார்வை, नास्त्येव हि-இல்லவே இல்லையல்லவா, तत्र-அவரிடம், कर्मणां-கர்மாக்களுக்கு, का कथा-ஏது பேச்சு?

யோகநிலையேறிவிட்டவராய், எல்லாம் ஸாதித்துவிட்டவராய், செய்யவேண்டியதையெல்லாம் செய்தவராய் (இனி செய்யவேண்டியது யாதொன்றுமில்லாதவராய்) ஞானியாய் உள்ளவருக்கு வெளிப்பார்வையே கிடையாதே? அவர் விஷயத்தில் கர்மாக்களின் பேச்சு ஏது?

(அ) இத்துடன் த்ருச்யானுவித்த ஸவிகல்ப ஸமாதியை முடிக்கிறார் :—

दृश्यानुविद्धः कथितः समाधिः सविकल्पकः ॥ ८६५ ॥

த்ருச்யாநுவித்த: கதித: ஸமாதி: ஸவிகல்பக: ॥

दृश्यानुविद्धः-த்ருச்யானுவித்தமென்ற, सविकल्पकः समाधिः ஸவிகல்ப ஸமாதி, कथितः-சொல்லப்பட்டது.

த்ருச்யானுவித்தமென்ற ஸவிகல்ப ஸமாதி சொல்லப்பட்டுவிட்டது. (865)

